



மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)
தொலைநிலைக் கல்வி
DEC அங்கீகாரம் பெற்றது

# எம்.ஏ. இரண்டாம் ஆண்டு

## பொதுத்துறை ஆட்சியியல்

## தாள் - VI

# இந்திய நிர்வாகம்

www.mkudde.org

R165



# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

## தொலைநிலைக் கல்வி

DEC அங்கீகாரம் பெற்றது



# எம்.ஏ. இரண்டாம் ஆண்டு

## பொதுத்துறை ஆட்சியியல்

தாள் - VI

# இந்திய நிர்வாகம்

www.mkudde.org

R165

அன்புள்ள மாணவரே,

உங்களை இரண்டாம் ஆண்டில் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகின்றோம். சென்ற ஆண்டு மாதிரியே இந்த ஆண்டும் நீங்கள் 4 தாள்கள் படிக்க இருக்கிறீர்கள். அவற்றில் ஒரு தாள் இந்திய நிர்வாகம். நம்முடைய நிர்வாக முறையை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ளும் வகையில் இப்பாடம் அமைந்துள்ளது. இதனை நன்றாகப் படித்து, பயனடையுங்கள்.

நல்வாழ்த்துக்கள்.

பொதுத்துறை ஆட்சியியல் துறை

பாடங்கள்



***டாக்டர் தி. கல்யாணி***

பேராசிரியர் & தலைவர், அரசியல் அறிவியல்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை.

# பாடம்–1 இந்திய அரசியலமைப்பு வளர்ச்சியும் இந்திய நிர்வாகமும்

## இந்திய அரசியலமைப்பு வளர்ச்சியும் இந்திய நிர்வாகமும்

கிழக்கிந்திய நாடுகளில் வியாபாரம் செய்யும் நோக்கத்தோடு இலண்டனில் ஆரம்பித்த கம்பெனி ஒன்றிற்கு 1600–ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 31–ஆம் நாள் விக்டோரியா அரசியல் அங்கீகாரமளித்தார். இந்த அங்கீகாரத்தின்படி கம்பெனியானது இந்தியா போன்ற நாடுகளில் கட்டுப்பாடின்றி வியாபாரம் செய்யும் உரிமை பெற்றது. நாளடைவில் கம்பெனியானது வலிமை பெற்று பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து பல சலுகைகளைப் பெறலாயிற்று. ஆரம்பத்தில் கம்பெனியானது வர்த்தகத்தை நோக்கமாகக் கொண்டிருந்தது. நாளடைவில் போட்டியும் தற்காப்பும் அவசியமும் கம்பெனியை அரசியலிலும் போரிலும் இறங்கச் செய்தன. 17–ம் நூற்றாண்டின் இறுதியில் கம்பெனி இந்தியாவில் டச்சுக்காரர்களின் அதிகாரத்தை முறியடித்தது. பிரான்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்குமிடையே அதிகாரப் போட்டியானது உண்மையில் 1741–இல் தான் இந்தியாவில் ஆரம்பித்தது. 1749–இல் ஆர்க்காட்டிலும் 1761–இல் வந்தவாசியிலும் பிரெஞ்சுக்காரர்கள ராபர்ட்கிளைவினால் தோற்கடிக்கப்பட்டனர். கிளைவ், 1757–ல் பிளாசிச் சண்டையில் வங்காள நவாபையும் தோற்கடித்து இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசின் அடித்தளத்தை வலுவுடன் அமைத்தார்.

ஆனால், வர்த்தக கம்பெனியானது தான் வென்ற பகுதிகளை ஆட்சி செய்யும் திறமை பெற்றிருக்கவில்லை. மேலும் அதிக வருமானத்தினாலும் பாராளுமன்றத்திடமிருந்த நியாயமற்ற செல்வாக்கினாலும் ஆரம்பத்தில் கம்பெனியில் ஊழல் மலிந்திருந்தது. அதன் வசமிருந்த மூன்று மாகாண நிர்வாகங்களிலும் (சென்னை, பம்பாய், கல்கத்தா) ஊழல் மலிந்திருந்தது. கிளைவ் இந்த ஊழல்கள் சிலவற்றைக் களைய விரும்பினார். இதற்காக நிர்வாகத்தில் சில மாறுதல்களைச் செய்தார். கல்கத்தாவிலிருந்து கவர்னர் ஜெனரல் அவையை (கவுன்சிலை) மாற்றியமைத்து எப்போதும் அங்கே இருக்கக்கூடிய நால்வர் கொண்ட குழுவை ஏற்படுத்தினார். நவாப் மைனராக இருந்தபடியினால் அவரது நிர்வாகத்தையும் மாற்றியமைத்து மூவர் கொண்ட குழுவை அதற்குப் பொறுப்பாக்கினார். கிளைவ் இங்கிலாந்து சென்றவுடன், வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்றார். இவரும் பல மாற்றங்களைச் செய்தார். நிலங்களையும் வருமானத்தையும் ஒழுங்கு செய்வதற்காக ஐந்தாண்டு ஒப்பந்தத்தினடிப்படையில் விவசாயிகளுக்கு நிலங்களை விட்டார். கவர்னர் ஜெனரலும் மற்றும் நால்வரும் கொண்ட குழு ஒன்றை ஏற்படுத்தி இவ்வொப்பந்தங்களைச் செயல்பட வழிவகுத்தார். வரிவசூல் செய்யும் அதிகாரத்தை நவாபிடமிருந்து எடுத்து அதற்காக ஏற்படுத்தப்பட்ட கலெக்டர் எனும் புதிய அலுவலரிடம் ஒப்படைத்தார். விவசாயிகளின் நலனைக் காக்கும் பொருட்டு அவர்களுக்கு எழுதப்பெற்ற நிலப்பட்டாக்களை வழங்குமாறு ஜமீன்தார்களைப் பணித்தார். அவரது நிதி, நீதி, நிர்வாக சீர்திருத்தங்களால் கம்பெனியானது வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவற்றின் அரசாக மாறியது.

காலப்போக்கில் போருக்கான செலவும் கம்பெனிப் பகுதிகளின் எல்லையும் அதிகரித்ததால் கம்பெனி பொருளாதார நிலை சீர்குலைந்தது. ஆங்கில அரசாங்கத்திற்கு முன்புபோல் கம்பெனியால் கடன் கொடுத்து உதவ முடியவில்லை. உண்மையில் 1772–இல் திவாலாகும் நிலையைத் தவிர்ப்பதற்காக அது ஆங்கில அரசாங்கத்திடம் கடன் கேட்டது. அப்போது பிரதமராயிருந்த நார்த் பிரபு இத்தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு

கம்பெனியின் செயல்களை விசாரிக்க ஒரு பாராளுமன்றக் குழுவை ஏற்படுத்தினார். இது பாராளுமன்றம் கம்பெனியின் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தும் கொள்கைக்கு அடித்தளமிட்டது. இக்குழுவின் பரிந்துரைகளுக்கு இணங்க இங்கிலாந்து 1773–இல் ஒழுங்கு முறைச் சட்டம் ஒன்றை இயற்றியது.

## 1773–ஆம் ஆண்டின் ஒழுங்குமுறைச் சட்டம்

இச்சட்டம் கம்பெனியின் நிர்வாகத் திறனை உயர்த்த ஊழலைக் குறைப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தது. இதற்காக கம்பெனியை ஓரளவு ஆங்கிலப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தது. பங்குதாரர்களின் பங்குத் தொகையை நிர்ணயம் செய்து, நிர்வாகிகளின் பதவிக்காலத்தையும் இச்சட்டம் அதிகரித்தது. நிர்வாகிகள் அனைவரும் ஒவ்வொரு முறையும் தேர்ந்தெடுக்கப்படுவதை ஒழித்து, நிர்வாகிகளில் நான்கில் ஒரு பகுதியினர் ஒவ்வொரு வருடமும் பதவியில் நீடிக்கப்பட வழிவகுத்தது.

இதுவரை தன்னிச்சையாக இருந்த சென்னை, பம்பாய் ஆகிய மாகாணங்கள் நிர்வாகத்தினால் ஒருங்கிணைப்பதற்காக வங்காளத்தின் மேலதிகாரத்திற்குக் கீழ் கொண்டு வரப்பட்டன. ஊழலை நீக்கும் பொருட்டு கம்பெனி பணியாளர்களின் ஊதியம் அதிகரிக்கப்பட்டது. அதே சமயம் குற்றம் புரியும் பணியாளர்களுக்கு கடுமையான தண்டனையும் விதிக்கப்பட்டது.

### குறைகள்

கவர்னர் ஜெனரல் தனது கவுன்சிலின் பெரும்பான்மை விருப்பத்திற்குக் கட்டுப்பட்டவர் என்று இச்சட்டம் கூறியதால் அவரது நிலை பலமிழந்தது. மேலும் மற்ற மாகாணங்களின் மேல் அவரது கட்டுப்பாடு எவ்வளவு தூரம் செல்லும் என்பதை இச்சட்டம் வரையறுக்கவில்லை.

### நிறைகள்

இச்சட்டத்தினால் சில நன்மைகளும் விளைந்தன. இச்சட்டம் கல்கத்தாவைத் தலைநகராக்கி அங்கிருந்து செயல்படும் கவர்னர் ஜெனரலைப் பொதுத்தலைமை ஆட்சியாளராக்கியது. கல்கத்தா நிர்வாகத்தின் மையமாகியது.

## 1784–ஆம் ஆண்டுச் சட்டம்

1784–ஆம் ஆண்டுச் சட்டம் பிட் இந்தியச் சட்டம் எனப்படும். இச்சட்டத்தின்படி ஆறுபேர் கொண்ட குழு அமைக்கப்பட்டு கம்பெனியின் சிவில், போர், அரசியல் செயல்களைக் கட்டுப்படுத்தி நடத்தும் பொறுப்பு அளிக்கப்பட்டது. கம்பெனி நிர்வாகக் குழுவின் அதிகாரத்தை இச்சட்டம் குறைத்தது. மேலும் கம்பெனியின் எந்தப் பணியாளரையும் திரும்ப அழைக்கும் அதிகாரம் முடிமன்றத்திற்கு அளிக்கப்பட்டது. இந்திய மன்னர்களுடன் கம்பெனியின் உறவானது தலையிடாக் கொள்கையின் அடிப்படையில் அமைய வேண்டும் என இச்சட்டம் கூறியது. குற்றம் புரியும் கம்பெனிப் பணியாளர்களை விசாரிப்பதற்கென இங்கிலாந்தில் ஒரு விசேட நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டது.

பிட் இந்தியச் சட்டமானது அரசியல் விஷயங்களில் கம்பெனியுடைய நிர்வாகக் குழுவின் கொள்கைகளைக் கட்டுப்படுத்தி ஒழுங்காக்கலாம் என்ற நம்பிக்கையின்

அடிப்படையில் இயற்றப்பட்டது. கம்பெனி ஆட்சி புரியவும், இங்கிலாந்திலுள்ள நிர்வாகக் குழுவானது கம்பெனியைக் கட்டுப்படுத்தவும் இச்சட்டம் விரும்பியது.

ஆனால் 1793–ஆம் ஆண்டு அளவில் நிர்வாகக் குழுவின் தலைவர் அதிக அதிகாரங்களுடன் வலிமை பெற்றுத் திகழ்ந்தார். 1798–ஆம் ஆண்டுச் சட்டப்படி அனைத்து அதிகாரங்களும் இவர் கையில் இருந்தது. மேலும் இவர் அமைச்சர் குழுவின் அங்கத்தினராயும் இருந்தார். 1841–ஆம் ஆண்டில் தலைவர் மட்டுமே நிர்வாகக் குழுவின் ஒரே உறுப்பினராகத் திகழ்ந்தார். இவரும் குழுவின் செயலாளரும் அரசியல் கட்சி சார்ந்தவர்களாயிருந்தனர். இவர்களுக்கு இந்திய நிலவரமும் தெரிந்திருக்கவில்லை. ஆகவே இந்தியாவின் நிர்வாகம் பொறுப்பற்ற முறையில் கையாளப்பட்டது. பாராளுமன்றமும் குழுத் தலைவரைக் கட்டுப்படுத்துவது மிகக் குறைந்து விட்டது. ஏனெனில் 1871–ஆம் ஆண்டளவில் அமைச்சர் குழுவானது பாராளுமன்றத்தில் இந்தியப் பிரச்சனைகளை எழுப்பத் துணியவில்லை. இக்காரணங்களினால் பிட் இந்தியச் சட்டம் கொண்டு வந்த இரட்டை அரசாங்க முறை தோல்வியுற்றது.

காரன் வாலிஸ் பிரபு ஹேஸ்டிங்சைத் தொடர்ந்து பதவிக்கு வந்தார். இவரால் தலையிடாக் கொள்கையை வெற்றிகரமாகக் கடைப்பிடிக்க முடியவில்லை. வெல்லெஸ்லி பிரபு துணைப்படைத் திட்ட முறை எனும் கொள்கை மூலம் இந்தியாவில் ஆங்கிலப் பேரரசு வேர் ஊன்றுவதற்கு வழி வகுத்தார். இக்கொள்கையின்படி, இந்திய மன்னர் ஒருவர் அயல் மன்னர்களுடன் உள்ள தனது தகராறுகளைக் கம்பெனியின் தீர்ப்பிற்கு விட வேண்டும். மற்ற ஐரோப்பிய அதிகாரிகளுடன் எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது. தற்காப்பிற்காகத் தன்னுடைய எல்லைக்குள் பிரிட்டிஷ் துணைப்படை ஒன்றினை வைத்துக் கொள்ள வேண்டும். இப்படைச் செலவிற்காக ஒவ்வொரு ஆண்டும் நிலமோ, பணமோ கம்பெனிக்குக் கொடுக்க வேண்டும். இம்முறையை ஏற்றுக் கொண்டு கீழ்ப்படியாத மன்னர்கள் இக்கொள்கையினை ஏற்றுக் கொள்ளுமாறு கட்டாயப் படுத்தப்பட்டனர்.

கம்பெனியின் நாடுபிடிக்கும் திட்டம் இவ்வாறு விரிவடைந்து டல்ஹௌசி பிரபுவின் அவகாசியிலிக் (Doctrine of Lapse) கொள்கையின் மூலம் உச்ச கட்டத்தை அடைந்தது. பிரிட்டிஷ் எல்லை அதிகரிக்கவே இங்கிலாந்துப் பாராளுமன்றம் அதிகமாக கம்பெனியின் நடவடிக்கைகளை ஒழுங்குப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

## 1833–ஆம் ஆண்டின் சாசனச் சட்டம்

1833–ஆம் ஆண்டுச் சட்டம் மக்களவையின் சீர்திருத்த வேகத்தையும் இங்கிலாந்தில் நிலவிய தாராள மனப்போக்கையும் பிரதிபலித்தது. கம்பெனியின் வர்த்தக ஏக போகத்தை இச்சட்டம் அறவே ஒழித்து, இந்தியாவில் குடியேறுவதற்கான தடைகளையும் களைந்தது. கவர்னர் ஜெனரலின் அதிகாரத்தை அதிகரித்தது. இந்தியாவில் எல்லோருக்கும் எல்லா நீதி மன்றங்களுக்குமான சட்டதிட்டங்களை ஏற்படுத்த வழிவகுத்தது. மெக்காலே பிரபுவின் பரிந்துரைகளுக்கிணங்க சட்டங்களைத் தொகுப்பதற்காக ஒரு சட்ட ஆணையம் நிறுவப்பட்டது. கவர்னர் ஜெனரலின் கவுன்சிலில் ஒரு சட்ட உறுப்பினர் இடம் பெற்றார். சென்னை, பம்பாய் ஆளுநர்கள் தன்னிச்சையாகச் சட்டமியற்றும் அதிகாரத்தை இழந்தனர். மேலும் இச்சட்டமானது கம்பெனி தனது வர்த்தக நடவடிக்கைகளை எவ்வளவு விரைவில் நிறுத்திக் கொள்ள முடியுமோ, அவ்வளவு விரைவில் நிறுத்திக் கொள்ளுமாறு பணித்தது. கம்பெனி ஆட்சியில் பணியாளராகப் பணிபுரிய தகுதிதான் அடிப்படையாகக் கொள்ளப்படும் என்ற சீரிய கொள்கையும்

இச்சட்டத்தில் அடங்கியிருந்தது. கம்பெனியைக் கட்டுப்படுத்தவும் அதற்கான சட்டங்களை இயற்றவும் இறுதி அதிகாரம் ஆங்கிலப் பாராளுமன்றத்திற்கே உரியது என இச்சட்டம் ஆக்கியது.

## 1854–ஆம் ஆண்டுச் சட்டம்

சிறு மாகாணங்களின் நிர்வாகத்திற்காகத் தலைமை ஆணையாளர்களை நியமிக்க இச்சட்டம் வழிவகுத்தது. 1857–ஆம் ஆண்டு இந்தியப்புரட்சி இந்திய அரசாங்கத்தைப் பற்றிய புதிய சிந்தனையைத் தோற்றுவித்தது. பிரிட்டிஷ் பாராளுமன்றம் இந்தியாவில் புதிய ஒரு அரசாங்க முறையைப் பின்பற்றத் தீர்மானித்தது. 1858–ஆம் ஆண்டுச் சட்டம் ஒன்றினை இயற்றியது. 1858–ஆம் ஆண்டு விக்டோரியா அரசியாரின் பேரறிவிப்பு இந்தியாவில் கம்பெனி ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்தது. இந்திய அரசாங்கமும், நிர்வாகமும் முடிமன்றத்தின் நேரடி அதிகாரத்தின் கீழ் கொண்டு வரப்பட்டன.

## இந்தியாவிற்கான கவுன்சிலும் செயலாளரும்

முடிமன்றத்தின் சார்பில் அதிகாரங்கள் அனைத்தும் செயலாளரிடம் குவிக்கப்பட்டன. இந்தியா தொடர்புடைய அனைத்துச் செயல்கள், நடவடிக்கைகள், பொறுப்புகள் எல்லாவற்றிற்குமான மேற்பார்வை, கட்டுப்பாடு, பணித்தல் போன்ற அதிகாரங்கள் அவர் தம் பொறுப்பாக்கப்பட்டன. அவர் பாராளுமன்றத்தில் அமரவும், அவருக்கு ஒரு துணைச் செயலாளரை அமர்த்தவும் இச்சட்டம் வழிவகுத்தது. செயலாளர் அமைச்சர் குழுவின் அங்கத்தினர்; அவருடைய ஊதியம் 1919–ஆம் ஆண்டு வரை இந்தியாவிலிருந்து வரும் வருமானத்திலிருந்து அளிக்கப்பட்டது. இந்திய கவுன்சிலின் தலைவர் அவரே. கவுன்சிலின் பதினைந்து உறுப்பினர்களில் எட்டுபேர் முடிமன்றத்தால் நியமிக்கப்பட்டனர். மீதி எழுவர் நிர்வாகக் குழுவின் அங்கத்தினரால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கவுன்சிலின் அங்கத்தினர்கள் நன்னடத்தையுடன் இருக்கும்வரை பதவி வகிக்கலாம். கவுன்சிலில் பெரும்பான்மையோர் இந்தியாவில் குறைந்தது பத்து ஆண்டுகளாவது வசித்திருக்க வேண்டும். குழுவின் தலைவரான செயலாளருக்கு முடிவு செய்ய அதிகாரம் உண்டு.

1858–ஆம் ஆண்டுச் சட்டம் செயலாளரைக் கட்டுப்படுத்துவதற்கென கவுன்சிலை ஏற்படுத்தியபோதிலும் நாளடைவில் செயலாளர் அதிக வலிமை பெற்றுக் கவுன்சிலை அதிகாரமற்றதாக்கினார். அவரைக் கட்டுப்படுத்தக் கூடிய அதிகாரம் படைத்தது பாராளுமன்றம் மட்டுமே. ஆனால் கொள்கையளவிலேயே இது உண்மையாக இருந்தது. நடைமுறையில் இந்தியா பற்றிய எல்லா அதிகாரங்களுமே செயலாளரிடமே ஒப்படைக்கப்பட்டன. மேலும் இந்தியாவை வழி நடத்திச் செல்லும் அதிகாரமானது, இங்கிலாந்திலேயே உறையும் எனும் கொள்கையும் அவருக்குத் துணை செய்தது.

## கவர்னர் ஜெனரலும் அவரது கவுன்சிலும்

1858–ஆம் ஆண்டுச் சட்டத்திற்குப் பிறகு கவர்னர் ஜெனரல் அரசுப் பிரதிநிதி (வைசிராய்) என அழைக்கப்பட்டார். விக்டோரியா அரசியாரின் பிரகடனப்படி, கான்னிங் பிரபு அரசப் பிரதிநிதியாகவும் கவர்னர் ஜெனரலாகவும் நியமிக்கப்பட்டார்.

இச்சட்டத்தின் குறிப்பிடத்தக்க விளைவு என்னவெனில், கவர்னர் ஜெனரலது அதிகாரம் முழுமையாககப்பட்டதாகும். நாட்டின் முழு வருமானமும் அவரது பொறுப்பில் விடப்பட்டது. மாகாண அரசாங்கங்கள் தாமாக வருவாய் ஈட்டவோ, செலவிடவோ முடியாது. உத்தரவுகளின் மூலமாகவும், மைய அரசாங்கத்தின் முன் உத்தரவின்றி மாகாணங்கள்

புதிய வரி விதிக்க முடியாது; இந்தியாவிலோ கடன் திரட்ட முடியாது. மையத்திற்கும், மாகாணங்களுக்கிடையேயான அதிகார எல்லை வரையறுக்கப்படவில்லை. எனவே கவர்னர் ஜெனரல் சட்டமியற்றும் துறையில் மேலதிகாரம் பெற்று விளங்கினார். கவர்னர் ஜெனரலின் மற்றும் இந்தியாவிற்கான செயலாளரின் முன் அனுமதியின்றி மாகாணங்கள் சட்டம் இயற்ற முடியாது. மாகாணச் சட்டங்கள் அனைத்தும் கவர்னர் ஜெனரலின் ஒப்புதல் பெற வேண்டும்.

## இந்தியக் கவுன்சில் சட்டம், 1861

இந்தியக் கவுன்சில் சட்டங்கள் இந்திய அரசியல் வரலாற்றில் திருப்புமுனையாக அமைகின்றன. 1861–ஆம் ஆண்டு வரையில் ஆங்கிலேய அரசாங்கம் எதேச்சையாக செயல்பட்டு வந்தது. 1861–ஆம் ஆண்டில் இந்தியக் கவுன்சில் சட்டம் ஆங்கிலேய பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டதும் இந்தியாவின் சட்டமன்றச் சீர்திருத்தம் ஆரம்பமாயிற்று. இந்தச் சட்டம் இரண்டு நோக்கங்களைப் பெற்றிருந்தது.

(1) இந்தியர்களை ஆட்சிப் பொறுப்பில் இடம் பெறச் செய்தல்.

(2) மாகாணங்களுக்குக் கூடுதலான அதிகாரங்களை வழங்குதல்.

இவ்வாறு 1861–ஆம் ஆண்டைய இந்தியக் கவுன்சில் சட்டமானது சட்டம் இயற்றுவதில் இந்தியர்களை ஈடுபடுத்துவதில் ஒரு தொடக்கத்தை ஏற்படுத்தியது. இருப்பினும் சட்டமியற்றுவதில் கவர்னர் ஜெனரலைக் கூடுதல் அதிகாரம் உடையவராக மாற்றியது. கவர்னர் ஜெனரலுக்கு கவுன்சில்களின் ஒப்புதலின்றியே விதிமுறைகள் இயற்ற அதிகாரம் அளிக்கப்பட்டது. கவுன்சில்களின் முடிவுகளையே மாற்றியமைக்கவும் கவர்னர் ஜெனரலுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. இவ்விதம் சட்டம் இயற்றுவதில் கவர்னர் ஜெனரல் பெரும் அதிகாரங்கள் பெற்றுத் திகழ்ந்தார்.

## இந்தியக் கவுன்சில் சட்டம் 1892

1861–ஆம் ஆண்டு இந்தியக் கவுன்சில் சட்டம் ஒரு சில குறைகளைப் பெற்றிருந்தது. இக்குறைகளை நீக்கும் பொருட்டு 1892–ஆம் ஆண்டு கவுன்சில் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

1861–ஆம் ஆண்டுச் சட்டத்தின் கீழ் நிறுவப்பட்ட கவுன்சில்கள் இந்தியர்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதில் தோல்வியுற்றன. இந்திய தேசிய காங்கிரசும் ஏனைய பொதுச் சங்கங்களும் சட்டமன்ற கவுன்சில்களை விரிவாக்கவும் அவைகளின் அதிகாரங்களை அதிகரிக்கச் செய்யவும் வேண்டுமெனக் கோரின. இந்திய மக்களின் அரசியல் விழிப்புணர்வுக்கு ஏற்ப ஆங்கிலேய அரசாங்கம் 1892–ஆம் ஆண்டைய கவுன்சில் சட்டத்தை இயற்றியது.

இச்சட்டத்தின் படி (1) கவர்னர் ஜெனரலின் ஆட்சிக்குழு சட்டமியற்றுதலுக்காக விரிவாக்கப்பட்டது. 10 பேருக்குக் குறைவுபடாமலும் 19 பேருக்கு மேற்படாமலும் துணை உறுப்பினர்களை நியமிக்கவும், பம்பாய், சென்னை ஆகிய இடங்களில் 8–லிருந்து 20 வரையிலும் வடமேற்கு எல்லை பிரதேசத்தில் 16க்கு மேற்படாமலும் உறுப்பினர்களை நியமிக்கவும் வழிவகை செய்யப்பட்டது. (2) மாகாண கவுன்சில்கள், நகராண்மைக் கவுன்சில்கள், மாவட்ட வாரியங்கள், வர்த்தகக் கழகங்கள் மற்றும் தொழிற்சாலை ஆகியவைகளின் பரிந்துரைகளின் பேரில் கவர்னர்கள் உறுப்பினர்களை நியமனட்

செய்யலாம். இவ்வாறு ஒருவித மறைமுகத் தேர்தல் முறை முதன் முதலாக அறிமுகப் படுத்தப்பட்டது. (3) ஆட்சிக் குழுக்களின் கடமைகளும் அதிகரிக்கப்பட்டன. இவைகளுக்கு கேள்விகள் கேட்கவும் வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகளை விவாதிக்கவும் உரிமை வழங்கப்பட்டது. (4) உயர் கவுன்சிலில் 16–ல் 10 துணை உறுப்பினர்கள் அலுவலரல்லாதவர்களாயிருக்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டது.

## மின்டோ மார்லி சீர்திருத்தங்கள்

ஆங்கிலேய ஆட்சியாளர்கள் 1892–இல் அளித்த சலுகைகள் இந்தியர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யவில்லை. கர்சன் பிரபு இந்திய கவர்னர் ஜெனரலாக அனுப்பி வைக்கப்பட்டார். இவர் காங்கிரசின் தேசிய உணர்வை முறியடிக்கும் கெடுபிடியான நடவடிக்கைகளை மேற்கொள்ள ஆரம்பித்தார்.

1905–ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் இங்கிலாந்தில் தொழிற்கட்சி ஆட்சிக்கு வந்ததும் இந்தியப் பிரச்சனை அதன் கவனத்தை ஈர்த்தது. ஜான் மார்லி பிரபு இந்தியாவின் அரசுச் செயலாளராகவும் மின்டோ பிரபு புதிய கவர்னர்–ஜெனரலாகவும் நியமிக்கப்பட்டனர். இவர்கள் இந்தியாவை இனிமேல் இராணுவ பலத்தால் ஆளுவது கடினம்; எனவே உடனடியாக அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் கொண்டு வர வேண்டும் என்று எண்ணினர். மின்டோவும் மார்லியும் அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் கொண்டுவராவிட்டால் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சியைத் தொடர்வது மிகவும் சிரமம் என்று கருதினர். இவர்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து சீர்திருத்தங்கள் ஒரு சிலவற்றைத் தயாரித்தனர். இவர்கள் தயாரித்த சீர்திருத்தங்களின் அடிப்படையில் ஆங்கிலேய அரசு 1909–ஆம் ஆண்டைய இந்தியக் கவுன்சில் சட்டத்தை இயற்றியது. இச்சட்டம்தான் மின்டோ–மார்லி சீர்திருத்தச் சட்டம் என்று அழைக்கப்படுகிறது.

இச்சட்டத்தின்படி, முதலாவதாக மத்திய, மாகாண கவுன்சில்கள் திருத்தி அமைக்கப்பட்டன. இவைகள் கூடுதல் பிரதிநிதித்துவம் பெறும் வகையில் மாற்றியமைக்கப்பட்டன.

1909–ஆம் ஆண்டையச் சட்டம் கவுன்சில்களின் பணிகளை மூன்று வழிகளில் அதிகரிக்கச் செய்தது. i) a) வரவு செலவுத் திட்டத்தை விவாதித்தல், b) வரவு செலவுத் திட்டத்தின் மீது தீர்மானங்கள் முன்மொழிதல், c) இந்த முன் மொழியப்பட்ட தீர்மானங்கள் மீது அதிருப்தி தெரிவித்தல், ii) பொது முக்கியத்துவம் வாய்ந்த ஏறக்குறைய எல்லா காரியங்கள் மீதும் தீர்மானங்கள் கொண்டு வருதல். ஆனால் இவ்வாறு கொண்டு வரும் தீர்மானங்கள் யாவும் பரிந்துரை என்னும் அளவில் மட்டும் இருந்தனவே தவிர இவற்றைச் செயலாக்க, அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. iii) கேள்விகள் கேட்கும் உரிமை கூடுதலாக வழங்கப்பட்டது. துணைக் கேள்விகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

1909–ஆம் ஆண்டுச் சட்டம் முந்திய இரண்டு சட்டங்களையும் விட அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சட்டமன்றக் கவுன்சில்கள் சட்டங்கள் இயற்றும் விஷயத்தில் குழுக்களாக செயல்பட்ட காலம் இத்துடன் முடிவடைந்தது. அலுவலரல்லாத உறுப்பினர்கள் கேள்விகள் கேட்கத் தொடங்கினர். ஆட்சிக் கவுன்சிலர்களின் நிர்வாகச் செயல்கள் மீது சட்ட மன்றக் கவுன்சில்களில் இந்தியர்களுக்கு இடமளிக்க வேண்டும் என்னும் வழிவகை எதுவும் சட்டத்தில் இல்லையெனினும் இந்தியர்களுக்கு இடமளிக்கப்பட்டன.

## மாண்ட் – போர்டு சீர்திருத்தங்கள்

மார்லி–மிண்டோ சீர்திருத்தங்கள் இந்தியர்களின் விருப்பங்களைப் பூர்த்திச் செய்யவில்லை. அவை நாட்டில் பெரும் அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் ஏற்படுத்தின. 1909–ஆம் ஆண்டுச் சட்டம் கவுன்சில்களில் அலுவலரல்லாத தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையை சிறுபான்மையான நிலையில் வைத்ததும், மறைமுகத் தேர்தல் மற்றும் தனி வாக்காளர் தொகுதிகளை ஏற்படுத்தியதும் இந்தியர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தைத் தந்தன. இச் சட்டத்தால் இந்திய அரசியல் சூழ்நிலையில் ஏற்பட்ட அதிருப்தி சுய ஆட்சித் தாகத்தை அதிகரிக்கச் செய்தது.

ஆகஸ்ட் பிரகடனத்தைத் தொடர்ந்து மாண்டேகு இந்தியாவிற்கு விஜயம் செய்து வைசிராய் ஜேம்ஸ் போர்டுடன் சேர்ந்து இந்திய அரசியல் பிரச்சனைகளை நேரில் கண்டறிந்து இருவருமாக சேர்ந்து ‘மாண்ட்போர்டு அறிக்கை’ என்னும் அறிக்கையைத் தயாரித்தனர். இவ்வறிக்கையின் அடிப்படையில் ஆங்கிலேயப் பாராளுமன்றம் 1919–ஆம் ஆண்டைய இந்திய அரசாங்கச் சட்டத்தை ஏற்படுத்தியது. இச் சட்டம் மாண்ட்போர்டு சீர்திருத்தச் சட்டம் என்று பொதுவாக அழைக்கப்படுகிறது.

1919–ஆம் ஆண்டைய இந்திய அரசாங்கச் சட்டம் மூன்று தன்மைகளைப் பெற்றிருந்தது. முதலாவதாக இந்திய நிர்வாகத்தின் மீது இந்தியாவிற்கான அரசுச் செயலருக்கு இருந்த கட்டுப்பாடு தளர்த்தப்பட்டு இந்திய அரசாங்கத்திற்குக் கூடுதல் செயல் உரிமை அளிக்கப்பட்டது. இரண்டாவதாக இந்திய அரசாங்கத்திற்கு மாகாண அரசாங்கங்களுடன் இருந்த தொடர்புகள் தெளிவாக வரையறை செய்யப்பட்டன. இந்தியாவில் கூட்டாட்சி ஏற்படுவதற்கு இதுவே அடிப்படையாக அமைந்தது. மூன்றாவதாக, மாகாணங்களில் ஓரளவிற்கு பொறுப்புள்ள அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டது.

1919–ஆம் ஆண்டையச் சட்டம் ஏற்படுத்திய முக்கிய சீர்திருத்தங்களைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

## இந்தியாவின் மத்திய அரசாங்கம்

உயர் சட்டமன்றக் கவுன்சில் கலைக்கப்பட்டு அந்த இடத்தில் சட்டமன்றமும் மாநில கவுன்சிலையும் கொண்ட ஈரவை சட்டமன்றம் ஏற்படுத்தப்பட்டது.

சட்டமன்றம் நிறைவேற்றிய ஒரு சட்டமுன்வரைவு கவர்னர் ஜெனரலின் ஒப்புதலைப் பெறவேண்டியிருந்தது. கவர்னர் ஜெனரல் தனது ஒப்புதலை அளிக்கவோ அல்லது மறுக்கவோ அல்லது அந்த சட்டமுன்வரைவை அரசரின் பார்வைக்கு வைக்கவோ உரிமை பெற்றிருந்தார். கவர்னர் ஜெனரல் பிறப்பிக்கும் ஆட்சித்துறைக் கட்டளைகளுக்கு சட்டத்திற்குரிய வலிமை இருந்தது. அவருடைய கட்டளைகள் 6 மாத காலத்திற்குத்தான் செல்லுபடியாகும் என்றாலும் அவர் அவற்றைப் புதுப்பித்துக் கொள்ளவும் உரிமை பெற்றிருந்தார்.

கவர்னர்–ஜெனரலின் கவுன்சில் 7 அங்கத்தினர்களைக் கொண்டிருந்தது. ஒவ்வொரு அங்கத்தினரும் ஒவ்வொரு துறைக்குத் தலைமை தாங்கிப் பொறுப் பேற்றிருந்தனர். கவர்னர் ஜெனரலும் அவரது கவுன்சிலும் தான் மத்திய ஆட்சிக் குழுவாக அமைந்து இக்குழு சட்டமன்றத்திற்கு எந்தவிதத்திலும் பொறுப்பாயிருக்க வில்லை. கவர்னர் ஜெனரல் இந்தியாவிற்கான அரசுச் செயலாளருக்கு எல்லா விஷயங்கள் பற்றியும் செய்தி அனுப்ப வேண்டும். அரசுச் செயலாளர் பாராளுமன்றத்தின் சார்பில் தனது

பொறுப்பை நிறைவேற்றுவார். இவ்வாறு கவர்னர் ஜெனரல் இந்திய அரசாங்கத்திற்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே ஒரு பாலமாக விளங்கினார்.

## மாகாண நிர்வாகமும் இரட்டை ஆட்சியும்

1919–ம் ஆண்டுச் சட்டத்தின் ஒரு சிறப்பான அம்சம் அது ஏற்படுத்திய இரட்டை ஆட்சியாகும். இம்முறை நிர்வாகத்தின் மூலம் மாகாணம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் யாவும் "ஒதுக்கப்பட்ட விஷயங்கள்" என்றும் "மாற்றப்பட்ட விஷயங்கள்" என்றும் இரு வகைகளாகக் பிரிக்கப்பட்டன. இவ்விருவகை விஷயங்களும் இருவகை ஆட்சிப் பிரிவுகளின் பொறுப்பின் கீழ் அளிக்கப்பட்டன. இரண்டு முதல் நான்கு வரையுள்ள உறுப்பினர்களைக் கொண்டதும் கவர்னருக்குப் பொறுப்புடையதுமான கவர்னரின் கவுன்சில் ஒதுக்கப்பட்ட விஷயங்களுக்குப் பொறுப்பானது. இந்த விஷயங்கள் யாவும் கவர்னரின் கவுன்சிலிடமிருந்தே துவங்கின. மாகாணச் சட்டமன்றக் கவுன்சிலர்களுக்குள்ளிருந்து கவர்னரால் நியமிக்கப்பட்ட அமைச்சர்கள் மாற்றப்பட்ட விஷயங்களுக்குப் பொறுப்புடையவர்கள். இவ்வாறாக, மாகாண நிர்வாகம் முழுவதும் பொறுப்பான அமைச்சர்களின் பொறுப்பிற்கு விடப்படவில்லை என்பதை அறியலாம். இருப்பினும் பொறுப்பான அரசாங்கம் ஏற்படுவதில் ஒரு தொடக்கத்தை ஏற்படுத்தியது என்பது குறிப்பிடத்தக்கது.

மாகாணச் சட்டமன்றம் இயற்றிய ஒரு சட்டமுன்வரைவு அந்த மாகாணத்தின் கவர்னரின் ஒப்புதலையும் கவர்னர் ஜெனரலின் ஒப்புதலையும் பெற வேண்டும்.

மாகாண ஆட்சிக்குழு இரு பிரிவுகளாக விளங்கியது. ஒரு பிரிவு கவுன்சிலில் கவர்னரையும் மற்றொரு பிரிவு அமைச்சர்களையும் கொண்டதாக விளங்கின. கவுன்சிலில் கவர்னர் ஒதுக்கப்பட்ட விஷயங்களுக்குப் பொறுப்பாகவும் செயல்பட்டார். கவர்னர்–கவுன்சில் சட்டமன்றத்திற்குப் பொறுப்புடையடவர்களன்று; சட்டமன்றம் அவர்களுடைய கொள்கைகளைக் குறை கூறலாம். ஆனால் தங்களுடைய கருத்துக்களை ஏற்றுக் கொள்ளுமாறு அவர்களை கட்டாயப்படுத்த முடியாது. அதே நேரத்தில் மாற்றப்பட்ட விஷயங்களுக்குப் பொறுப்புடைய அமைச்சர்கள் சட்டமன்றக் கட்டுப்பாட்டிற்குட் பட்டவராவர். இவ்வாறு அமைச்சர் பொறுப்புமுறை மாகாண நிர்வாகத்தில் ஏற்படலாயிற்று. மேலும் கவர்னர், இரு சாராருக்கும் விருப்புடைய விஷயங்களை விவாதிக்கும் பொருட்டு கவுன்சிலர்களும் அமைச்சர்களும் இணைந்த கூட்டத் தொடரினைக் கூட்டவும் செய்யலாம். இது மாதிரியான கூட்டத் தொடர்கள் அரசாங்கம் கூட்டாகச் செயல்பட ஓரளவு வசதியளித்தன எனலாம்.

இரட்டையாட்சி முறை தோல்வியடைந்தது. இதன் தோல்விக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் முக்கியமானவை பின் வருமாறு:

1) சட்டமன்றத்திற்குப் பொறுப்பான அமைச்சர்களும் கவர்னருக்குப் பொறுப்பான கவுன்சிலர்களுக்குமிடையே முரண்பாடு வளர்ந்தது.

2) அமைச்சர்கள் சட்டமன்றத்தின் நம்பிக்கை இருக்கும் காலமளவு தான் பதவியிலிருக்க முடியும். ஆனால் பொதுவாக அவர்களுக்குச் சட்டமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவு இல்லாததால் அவர்கள் அலுவலர் – அங்கத்தினர்களையே நம்பியிருக்க வேண்டியதாயிற்று.

3) பொறுப்பான அரசாங்கத்தின் சிறப்பு அம்சமான கூட்டுப் பொறுப்பினை அமைச்சர்கள் உணர முடியவில்லை.

4) கவர்னருக்கும் அரசுச் செயலருக்கும் கூடுதலான அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருந்தமையால் அமைச்சர்கள் தங்களுடைய துறைகள் மீது திறம்பட்ட கட்டுப்பாட்டினை மேற்கொள்ள முடியவில்லை.

5) நிதி கவர்னருடைய கவுன்சிலர் ஒருவரின் கீழ் இருந்தமையால் "மாற்றப்பட்ட விஷயங்கள்" சம்பந்தப்பட்ட காரியங்களுக்குத் தேவையான நிதி ஒதுக்கீடுகள் செய்யப்படவில்லை. இதனால் சட்டமன்றத்தால் இக்காரியங்கள் சம்மந்தப்பட்ட வரையில் திறம்பட்ட கட்டுப்பாடு மேற்கொள்ள முடியவில்லை.

1935–ஆம் ஆண்டு இந்தியா அரசுச்சட்டம் இரண்டு கோட்பாடுகளைக் கொண்டிருந்தது.

1) பிரிட்டிஷ் இந்தியாவையும், இந்திய மாநிலங்களையும் கொண்டதொரு அகில இந்தியக் கூட்டாட்சியை உருவாக்குதல்.

2) மாகாணங்களுக்கு சுயாட்சி வழங்கி, பொறுப்புள்ள அரசாங்கங்களை உருவாக்குதல்.

## கூட்டாட்சி ஆட்சித்துறை

கூட்டாட்சி அரசாங்கத்தின் தலைவர் இந்திய கவர்னர் ஜெனரல். அவர் பிரிட்டிஷ் தலைமை அமைச்சரின் ஆலோசனையின்படி பேரரசரால் நியமிக்கப்படுவார். அவர்தம் இந்தியாவின் வைஸ்ராயுமாவார். அவர் அதிக அளவு அதிகாரங்களையும் செல்வாக்கையும் பெற்றிருந்தார். திட்டமிடப்பட்ட கூட்டாட்சி அரசாங்கத்தில் பொறுப்புத்தன்மை இருக்க வேண்டுமென்ற கருத்தின் அடிப்படையில் இச்சட்டம் மத்தியில் இரட்டை ஆட்சியை உருவாக்கியது. ஆகையால், கூட்டாட்சியின் சட்டமியற்றும் அதிகார அட்டவணை (Reserved Subjects) என்றும், மாற்றப்பட்ட அதிகாரங்கள் (Transferred Subjects) என்றும் இரண்டு பிரிவுகளாகும். கவர்னர் ஜெனரல் கவுன்சிலில் இருந்து பணியாற்றுகின்ற பொழுது அயல் நாட்டு உறவு, திருச்சபை தொடர்பு, நிதி போன்ற ஒதுக்கீடு செய்யப்பட்ட அதிகாரங்களின் நிர்வாகத்திற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு பொறுப்புடையவர் ஆவார். ரெயில்வே, தபால் தந்தி, சட்டம், வர்த்தகம் போன்ற மாற்றப்பட்ட அதிகாரங்கள் மத்தியச் சட்டமன்றப் பேரவையிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. மாற்றப்பட்ட அதிகாரங்கள் அமைச்சர்களது பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும், கவர்னர் ஜெனரல் பிரிட்டிஷ் இந்தியாவின் அமைதியைப் பாதுகாக்கும் பொருட்டு மாற்றப்பட்ட அதிகாரங்களின் மீது தன்னுடைய மேலுரிமை அதிகாரங்களைப் பயன்படுத்தலாம்.

மக்களாட்சி நிலவும் நாடுகளிலுள்ள ஆட்சித்துறைத் தலைவர்களில் மிக்க வலிமை வாய்ந்தவர் கவர்னர் ஜெனரல்தான் என்று சொல்லத் தேவையில்லை. நிர்வாகத்தின் மையக் கல்லாக விளங்குபவர் அவரே. இந்தியப் பாதுகாப்பு மற்றும் அயல்நாட்டுக் கொள்கை ஆகியவற்றின் மீது அவருக்குள்ள அளவுகடந்த அதிகாரமும், தன் விருப்புரிமை அதிகாரமும் சிறப்புப் பொறுப்புக்களும் அவரை ஒரு வலிமைமிக்க சர்வாதிகாரியாக ஆக்கியுள்ளன. "ஹிட்லர் அல்லது முஸோலினி கொண்டிருந்த அனைத்து அதிகாரங்களையும் அவர் கொண்டிருந்தார். தன்னுடைய பேனா முனையினால் அரசியலமைப்பை அழித்து விட்டு சட்டங்கள் இயற்றுவதற்குண்டான உத்தரவைப் பிறப்பிக்கலாம்" என்று சர் வின்டைன் சர்ச்சில் குறிப்பிடுகிறார்.

## கூட்டாட்சிச் சட்டமன்றம்

கூட்டாட்சிச் சட்டப்பேரவை (Federal Assembly) மாநிலங்கள் மன்றம் (Council of State) என்ற இரு சபைகளைக் கொண்டது. கூட்டாட்சிச் சட்டமன்றம் கூட்டாட்சிச் சட்டப்பரேவை கீழவை. மாநிலங்கள் குழு மேலவை. கூட்டாட்சிச் சட்டப் பேரவை 375 உறுப்பினர்களைக் கொண்டது. இவர்களில் 250 உறுப்பினர்கள் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்தும், 125 உறுப்பினர்கள் இந்திய மாநிலங்களிலிருந்தும் வகுப்புவாரி அடிப்படையில் மாகாணங்களின் சட்டப்பேரவையிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். கூட்டாட்சிச் சட்டப் பேரவையில் ஹிந்து, முஸ்லீம், சீக்கியர் என்ற வகுப்பினர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் அதே வகுப்பினரால்தான் மாகாணச் சட்டப் பேரவையிலிருந்து நிரப்பப்பட வேண்டும். மாநிலங்கள் குழு 260 உறுப்பினர்களைக் கொண்டது. இவர்களில் 156 உறுப்பினர்கள் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்தும், 101 உறுப்பினர்கள் கூட்டாட்சி மாநிலங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படுவர். மாநிலங்களின் பிரதிநிதிகளைஅந்தந்த மாநில ஆட்சியாளர்கள் நியமனம் செய்வர். பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகளில் சிறுபான்மையினர் தாழ்த்தப்பட்டோர், பெண்கள் ஆகியோருக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் வைஸ்ராய் ஆறு உறுப்பினர்களை நியமனம் செய்வார். மீதமுள்ள உறுப்பினர்கள் வகுப்புவாரி அடிப்படையில் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவர்.

ஒரு சில சிறிய விஷயங்கள் நீங்கலாக மற்ற எல்லா விசயங்களிலும், நீதி விஷயங்கள் உள்பட இரண்டு சபைகளுக்குமிடையே சட்டமியற்றுவதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் வைஸ்ராய் இரண்டு சபைகளின் இணைப்புக் கூட்டத்தைக் கூட்டலாம். இரண்டு சபைகளும் சேர்ந்து ஒரு சட்டமுன்வரைவை நிறைவேற்றினால் வைஸ்ராய் அந்த சட்டமுன்வரைவிற்கு தன்னுடைய ஒப்புதலைத் தர வேண்டும் அல்லது நிராகரிக்க வேண்டும் அல்லது அதனை அரசருடைய பார்வைக்கு ஒதுக்கி வைக்க வேண்டும். வைஸ்ராயினால் ஒப்புதல் வழங்கப்பட்ட சட்டத்தை ஓராண்டு காலத்திற்கு வைஸ்ராயின் கவுன்சில் அனுமதிக்காமல் இருக்கலாம்.

## கூட்டாட்சி நீதித்துறை

இந்திய மாநிலங்கள், பிரிட்டிஷ் மாகாணங்கள் ஆகியவற்றின் மீது அதிகாரம் கொண்ட கூட்டாட்சி நீதிமன்றம் ஒன்றை நிறுவுவதற்கு 1935–ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டம் வழி வகுத்தது. கூட்டாட்சி நீதிமன்றம் ஒரு தலைமை நீதிபதியையும் 6 நீதிபதிகளையும் கொண்டிருந்தது. இவர்கள் நியமனம் செய்யப்பட்டார்கள். 65 வயது வரையிலும் இவர்கள் பதவியில் இருக்கலாம். கவர்னர் ஜெனரல் தன் விருப்புரிமையின் அடிப்படையில் தற்காலிகத் தலைமை நீதிபதியை அல்லது ஒரு நீதிபதியை நியமனம் செய்யலாம். கூட்டாட்சி நீதிமன்றம் முதல் நிலை, மேல் முறையீடு, ஆலோசனை கூறுதல் ஆகிய மூன்று வகையான அதிகாரங்கள் பெற்றிருந்தது.

கூட்டாட்சியிலுள்ள எல்லா நீதிமன்றங்களும் கூட்டாட்சி நீதிமன்றத்தைச் சார்ந்தவைகளாகும். கூட்டாட்சி நீதிமன்றம் தன்னுடைய செயல்முறைகளுக்கான விதிமுறைகளை உருவாக்கியதோடு வழக்கு விசாரணைகளையும் ஒழுங்குபடுத்தியது. இந்தியாவின் கூட்டாட்சி நீதிமன்றம் இந்தியத் தலைமை நீதிமன்றம் அல்ல. கூட்டாட்சி நீதிமன்றத்தின் அனுமதி கிடைத்தால் வழக்குகளை பிரிட்டிஷ் பிரிவு கவுன்சிலுக்கு மேல் முறையீடு செய்யலாம். இந்தியக் கூட்டாட்சி நீதிமன்றம் பெருமளவிற்கு தனித்தியங்கக் கூடியதாகவும், அதிகாரம் வாய்ந்ததாகவும் விளங்கியது.

# மாகாண அரசாங்கம் (Provincial Government)

## மாகாண ஆட்சித்துறை

மாகாண அரசாங்கங்களின் அமைப்பும் பண்பும் 1935–ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தால் ஓரளவுற்கு மாற்றியமைக்கப்பட்டது. மாகாண சுயாட்சி, கூட்டாட்சி ஆகிய கருத்தின் அடிப்படையில் ஒரு புதிய அமைப்பை அச்சட்டம் முன்மொழிந்தது. மாகாணங்களில் பொறுப்புள்ள அரசாங்கத்தையும், அரசாங்கப் பணிகளில் அதிக அளவு சுயாட்சியையும் அச்சட்டம் புகுத்தியது. மாகாணங்களில் இரட்டை ஆட்சி ஒழிக்கப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றத்திற்கு பொறுப்புடைய அமைச்சர்களிடம் மாகாண அரசாங்கங்களின் நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. மாகாண ஆட்சித்துறை கவர்னரையும், அமைச்சர் குழுவையும் கொண்டிருந்தது. கவர்னர் அரசரால் நியமிக்கப்பட்டார்.

இரட்டை ஆட்சி ஒழிக்கப்பட்டதால், சாதாரண வேளைகளில் கவர்னர் தன்னுடைய அமைச்சர்களின் ஆலோசனைப்படி நடக்க வேண்டியிருந்தது. அச்சட்டம் கவர்னருக்கு வழங்கிய அதிகாரங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1) தன் விருப்புரிமை 2) தன் சுய தீர்ப்பின் அடிப்படை 3) தன் அமைச்சர்களது ஆலோசனையின்படி செயல்படுதல். தன் விருப்புரிமையின் அடிப்படையில் செயல்படும்பொழுது அமைச்சர்களது ஆலோசனைகளை கேட்க வேண்டியதில்லை. கவர்னர் தன்சுய தீர்ப்பின் அடிப்படையில் செயல்படும் பொழுது அமைச்சர்களது ஆலோசனையைக் கேட்க வேண்டும். ஆனால் அவ்வாலோசனைப்படி அவர் நடக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. கவர்னர் தன்னுடைய அமைச்சர்களை நியமிக்கவும், விலக்கவும் அதிகாரம் கொண்டிருந்தார். அவர் அமைச்சர் குழு கூட்டங்களில் கலந்து கொள்வதோடு மட்டுமின்றி தன் விருப்புரிமை அதிகாரத்தின் அடிப்படையில் அக்கூட்டங்களுக்குத் தலைமை தாங்கவும் செய்யலாம்.

கவர்னர் தன்னுடைய விருப்புரிமை அதிகாரத்தில் கீழ் சட்டமன்றத்தின் கீழ்சபையைச் கூட்டவும், ஒத்திப்போடவும், கலைக்கவும் முடியும். அவர் ஒவ்வொரு சபையிலும் தனியாக அல்லது இரண்டு சபைகளின் இணைப்புக் கூட்டத்தில் உரை நிகழ்த்தலாம். இரண்டு சபைகளுக்குமிடையே சட்டமியற்றுவதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் இரு சபைகளின் இணைப்புக் கூட்டத்தைச் கூட்டி அதனைத் தீர்க்கலாம். அவருடைய கையொப்பம் பெற்றதற்குப் பின்னர்தான் எந்த ஒரு சட்டமுன்வரைவும் சட்டமாகும். அவர் அவசர உத்தரவுகள் பிறப்பித்து அதனை கவர்னருடைய சட்டங்களாகக் கொண்டு வரலாம். நிதி விவகாரங்களில் அவர் போதிய அளவு அதிகாரம் கொண்டிருந்தார். மாகாணத்தினுடைய வருடாந்திர வரவு செலவுத் திட்டம் தயாரிப்பது அவருடைய கடமையாகும். கவர்னருடைய பரிந்துரை இல்லாமல் எந்தவொரு மானியக்கோரிக்கையும் செய்ய முடியாது. இவ்வளவு அதிகாரங்களுக்கும் மேலாக சில சிறப்புப் பொறுப்புகளும் அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. இச்சிறப்பு அதிகாரத்தைப் பொறுத்தமட்டில் அவர் ஏகபோக அதிகாரம் கொண்டிருந்தார். நெருக்கடிநிலை அதிகாரங்களும் அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்கின்ற பொழுது மாகாணங்களை நிர்வாகம் முழுவதும் அவருடைய நேரடிக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்படும். நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்ட நாளிலிருந்து ஆறு மாதங்கள் வரை அமலில் இருக்கும். அதற்குப் பின்னால் பாராளுமன்றம் அனுமதித்தால் தொடர்ந்து நீடிக்கும். எப்படியாயிருப்பினும் மொத்தம் மூன்று ஆண்டுகளுக்கு நெருக்கடி நிலை அமுலில் இருக்க முடியும்.

தன் விருப்புரிமை அதிகாரமும் சிறப்புப் பொறுப்புக்களும் கவர்னரது நிலையை மிகவும் வலிமையுடையதாக்கின. மேலே கூறப்பட்ட அதிகாரங்களை வைத்துப் பார்க்கின்ற பொழுது கவர்னர் பெயரளவிலான ஆட்சித் துறைத் தலைவராக மட்டுமின்றி, மாகாண நிர்வாகத்தின் பல்வேறுபட்ட பணிகளைச் செய்ய வேண்டியவராகக் காணப்பட்டார். மாகாண அரசாங்க நிர்வாகத்தில் அவருடைய பங்கு மிகவும் முக்கியமானதாகும்.

### மாகாணச் சட்டமன்றம்

வங்காளம், பம்பாய், சென்னை, ஐக்கிய மாகாணங்களில் பீஹார் ஆகிய மாகாணங்களில் சட்டமன்றம், சட்டமேலவை, சட்டமன்றப் பேரவை என்ற இரண்டு சபைகளைக் கொண்டிருந்தது. பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், சிந்து, ஒரிஸ்ஸா ஆகிய மாகாணங்களில் சட்டமன்றம், சட்டமன்றப் பேரவை என்ற ஒரு சபையை மட்டும் கொண்டிருந்தது. சட்டமன்றப் பேரவை உறுப்பினர்களின் எண்ணிக்கை 50–லிருந்து 200 வரையிலும் இருந்தது. அவர்கள் 5 ஆண்டு காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

சட்டமன்றங்கள் தங்களது செயல்முறையில் ஓரளவு தாழ்வாகக் காணப்பட்டாலும், 1935–ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டம் அதனுடைய செயல் நடவடிக்கைகளைப் போதுமான அளவிற்கு அமைப்பு அதிகாரங்கள் ஆகியவற்றில் முன்னேற்றத்தை உண்டாக்கியது என்பதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை.

### மாகாண நீதித்துறை

அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, மத்திய மாகாணம், சிந்து, வடமேற்கு எல்லை மாகாணம் ஆகியவை நீங்கலாக மற்ற மாகாணங்களில் ஒரு உயர் நீதிமன்றத்தை உருவாக்குவதற்கு 1935–ஆம் ஆண்டுச் சட்டம் வழிவகுத்தது. பம்பாய், கல்கத்தா, சென்னை ஆகிய மாகாணங்களின் உயர்நீதிமன்றங்கள் மற்ற உயர்நீதிமன்றங்களை விட உயர்வானவையாகும். இம்மாகாண உயர்நீதிமன்றங்கள் மேல் முறையீடு, முதல் நிலை அதிகாரங்களைக் கொண்டிருந்தன. ஆனால் மற்ற உயர்நீதிமன்றங்கள் பெரும்பாலும் மேல் முறையீடு சம்பந்தப்பட்ட அதிகாரங்கள் மட்டும் கொண்டிருந்தன. உயர் நீதிமன்றங்கள் தங்கள் கட்டுப்பாட்டிற்குட்பட்ட மற்ற நீதிமன்றங்களது பணிகள் சம்பந்தப்பட்ட விதிமுறைகளை உருவாக்குகின்றன.

### நிர்வாக வளர்ச்சி

1773 ஆம் ஆண்டுவரை நிர்வாகமுறை இந்தியாவில் ஓரிடத்தில் அமையாமல் இருந்து வந்துள்ளது. மூன்று மாகாணங்களான சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகியவை கிழக்கிந்தியக் கம்பெனியின் கட்டுப்பாட்டில் இருந்தன. ஒவ்வொரு மாகாணமும் தனித்தனி ஆளுகை மன்றத்தால் (Governor-General in Council) இங்கிலாந்தின் கம்பெனியின் பொறுப்பின்கீழ் செயல்பட்டு வந்துள்ளன. எனவே முழுமையாக மூன்று மாகாணங்களையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் 1773 ஆம் ஆண்டு வரை எவ்வித அமைப்பிலும் இடம் பெறவில்லை. பின்னர் 1773 ஆம் ஆண்டு முதல் 1861 ஆம் ஆண்டு வரை மூன்று மாகாணங்களையும் கட்டுப்படுத்தும் மைய அதிகாரம் ஏற்பட்டது. ஏனெனில் மாகாணங்களில் அமைதியைக் காக்கவும், போர்புரியவும் அவசியமேற்படவே மூன்று மாகாணங்களையும் நெருக்கமாகக் கண்காணிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் கம்பெனியின் நிர்வாகத்தையும் ஆங்கிலேயப் பாராளுமன்றம் எடுக்கவேண்டியதாயிற்று..

1784 ஆம் ஆண்டுச் சட்டம் இந்திய விவகாரங்களைகக் கண்காணிப்பது ஆங்கிலேய பாராளுமன்றத்தின் பொறுப்பாயிற்று. பின்னர் 1833ஆம் ஆண்டு சாசனச் சட்டத்தின்படி மூன்று மாகாணங்களும் வங்காளத்திலுள்ள இந்திய தலைமை ஆளுநர் மன்றத்தின் கட்டுப்பாட்டிற்கு வந்தது. 1861 ஆம் ஆண்டுச் சட்டம் மாகாணங்களில் சட்டமன்றம் கொண்டுவர வழி வகுத்தது. 1859 ஆம் ஆண்டு பதவி முறைமை (Portfolio System) முறை கொண்டுவரப்பட்டது. இதனால் ஒவ்வொரு பிரச்சனையையும் தனித்தனியாகக் கவனிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. 1843 ஆம் ஆண்டு உள்துறை ஏற்பட்டது. 1855 ஆம் ஆண்டு உள்துறையிலிருந்து பொதுப்பணித்துறை உருவாக்கப்பட்டது. 1869 ஆம் ஆண்டு சட்டமன்றத் துறையின் பல்வேறு பிரிவுகளான வருவாய், வேளாண்மை, வணிகம் ஆகியன ஒவ்வொன்றும் தனித்தனி துறைகளாயின. 1870 ஆம் ஆண்டு மாயோ பிரபுவின் தீர்மானத்தின்படி நிதி மற்றும் பிற பணிகள் மாநிலத்திறகு ஒதுக்கப்பட்டன. ரிப்பன் பிரபுவின் தீர்மானம் 1882, இந்திய உள்ளாட்சி வளர்ச்சிக்கு பெரிதும் உதவிகரமாக அமைந்தது. 1909 ஆம் ஆண்டின் பிரதிநிதித்துவ அரசாங்கம், 1919 ஆம் ஆண்டின் இரட்டையாட்சி, 1935 ஆம் ஆண்டின் மாகாண சுயாட்சி ஆகியன நிர்வாகத்திற்கு அதிகக் கவனம் செலுத்த வைத்தன. 1935 ஆம் ஆண்டு அமையப்பெற்ற இந்திய நிர்வாகக் கட்டமைப்பின் பெரும்பகுதி இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் இந்திய நிர்வாகத்தில் நிலைத்து விட்டது.

மாதிரி வினா

இந்திய அரசியலமைப்பு மற்றும் நிர்வாக வளர்ச்சியை விவரி.

பாடம்–2

# இந்திய நிர்வாக நிறுவன அமைப்பு

இந்திய நிர்வாகத்தின் நிறுவன அமைப்பு முறையை நாம் பார்க்கும் பொழுது சட்டப்படியான அல்லது முறைப்படியான நிறுவன அமைப்பு முறைகளுடன் நிர்வாக நடத்தையையும் பழக்கங்களையும் பாதிக்கும் சமூகப் பொருளாதார வடிவங்களையும் ஆராய்வது அவசியமாகிறது.

1947 ஆம் ஆண்டு வரையிலும் இந்தியா ஆங்கிலேயரின் ஆட்சியின் கீழிருந்தது. சுதந்திரத்திற்குப்பின் ஏற்பட்ட மாறுதல் எதேச்சாதிகாரத்திலிருந்து மக்களாட்சிக்கு மாறிய ஒரு மாறுதலாகவே கருதப்பட வேண்டும். இந்திய நிர்வாகம் மக்களாட்சி சூழ்நிலையில் அமைந்த ஒரு நிர்வாகம் என்றே கூறவேண்டும். இதனால் கீழ்க்காணும் விளைவுகள் தோன்றியுள்ளன.

1. நிர்வாகம் மக்களுடைய பிரதிநிதிகளால் வழிநடத்தப்பட்டு கட்டுப்படுத்தப்படுகிறது. கொள்கைகள், அரசியல் தலைவரால் வல்லுனர்களைக் கலந்தாலோசித்த பிற்பாடு உருவாக்கப்படுகின்றன. இவ்வாறு அரசியல் தலைவர் கொள்கைகளை வகுத்து, நிர்வாகச் செயல்களை நிர்ணயித்து, அவைகளின் செயலாக்கத்தை மேற்பார்வையும் செய்கின்றார்.

2. மக்களாட்சி அரசாங்கத்தில் அரசுப்பணி மக்களுடைய பிரதிநிதிகளுக்குப் பொறுப்புடையது. அதாவது அரசுப்பணி அரசியல் தலைவரின் மேன்மையை ஏற்றுக் கொள்ள வேண்டும். மேலும் அது மக்களாட்சி அரசியல் முறையின் தேவைகளுக்கு ஏற்ப ஒழுக வேண்டும். நிர்வாகம் வெற்றி பெற வேண்டுமானால் அரசுப்பணியாளர்கள் அரசியல் தலைவருடன் ஒத்துழைத்துப் பணிபுரிய வேண்டும்.

3. ஒரு மக்களாட்சி அரசில் அரசாங்கம் மாறுவதற்கு இடமுண்டு. அமைச்சரவையில் மாற்றம் ஏற்படலாம். ஆனால் நிர்வாகத்தில் நிலையான அமைதியையும் தொடர்ச்சியையும் பெறவேண்டுமெனில் நிரந்தர அரசுப் பணியாளர்கள் இருத்தல் வேண்டும். ஆட்சிக்கு வரும் கட்சியின் கொள்கைகளும் சட்டங்களும் ஒருவேளை அரசுப் பணியாளர்கள் ஏற்றுக்கொள்ள முடியாதவைகளாகவும் இருக்கக் கூடும். இருப்பினும் அரசுப் பணியாளர்கள் அரசியலில் நடுநிலைமை வகித்து அரசாங்கக் கட்டளைகளை மதித்து செயல்படவேண்டுமேயொழிய அவைகளுக்கு முரணாகச் செயல்படுவார்களானால் அது ஆட்சியிலிருக்கும் கட்சியை தேர்ந்தெடுத்த பெரும்பான்மை வாக்காளருக்கு எதிராகச் செயல்படுவதாகவே கருதப்படும். எனவே அரசுப் பணியாளர்கள் நடுநிலை வகித்து நேர்மையான முறையில் அரசியல் தலைவர்களுக்கு தங்களுடைய ஆலோசனைகளை அளிக்க வேண்டும்.

4. மக்களாட்சி அரசியல் முறையின் பிறிதொரு அம்சம் யாதெனில் நிர்வாகியாக இருப்பவருக்கும் குடிமகனுக்கும் இடையே சுமூகமான உறவினை ஏற்படுத்துவதாகும். இதற்காகவேதான் ஊராட்சி அரசு நிறுவனங்களும், சமுதாய நலத் திட்டங்களும் ஏற்படுத்தப்பட்டன.

5. எல்லாவற்றிற்கும் மேலாக அரசுப் பணியாளர் உயர்தர ஒழுக்க உணர்வுடையவர் களாக இருக்க வேண்டும். அரசுப் பணியாளர் தங்களிடம் நாணயமும், ஒழுக்க உணர்வும் காணப்பட்டால்தான் நிர்வாகத்தை பொது மக்கள் ஏற்றுக் கொண்டு அதற்கு தங்களுடைய ஆதரவை நல்குவார்கள். இந்தியாவில் அரசுப் பணியில் ஊழல்களை தவிர்ப்பதற்காக

அரசாங்கம் பல்வேறு விசாரணைக் குழுக்களை நியமித்து தேவையான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. அரசுப் பணியாளர்களோ, ஊழல்களுக்குக் காரணம் அரசியல் தலையீடும் குறுக்கீடும் தான் என்று குற்றம் சாட்டுகின்றனர். அதே நேரத்தில் அமைச்சர்கள் அரசுப் பணியாளர்களின் செயல்களைக் குறை கூறுகின்றார்கள. இவ்விதமாக அரசுப் பணியாளரும் அமைச்சர்களும் ஒருவரையொருவர் குறை கூறிக்கொள்வது நிர்வாகத்தின் சீரான தன்மையை குலைப்பதாய் இருக்கிறது. இக்குறைபாட்டினை நீக்குவதற்கென பல முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஒவ்வொரு வளர்ந்து வரும் நாட்டிலும் அரசாங்கத்தின் முக்கியமான பொறுப்பு என்னவெனில் நாட்டை எல்லா நிலைகளிலும் முன்னேற்றமடையச் செய்வதாகும். இத்தகைய வளர்ச்சியுறச் செய்யும் செயலை அரசாங்கம் செய்ய வேண்டும். அரசாங்கத்தின் துவக்கமும் தலையீடும் இந்திய சமுகவாழ்வில் எந்தவொரு பெரிய மாறுதலும் ஏற்பட வாய்ப்பில்லை. அரசாங்கத்தின் பொதுநல செயல்களின் காரணமாக ஒழுங்குபடுத்தப்பட்ட செயல்களும் வளர்ச்சிச் செயல்களும் பன்மடங்கு பெருகியுள்ளன. இதன் காரணமாக அரசுப் பணியாளர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துவிட்டது. அரசுப் பணியாளர்களுக்குத் தனிப்பட்ட பயிற்சி அளிக்க வேண்டியதன் அவசியமும் உணரப் பட்டது. அரசுப் பணியில் இடம் பெற்றுள்ள தனிப்பட்ட அறிவு பெற்றவர்களும் பொது அறிவு பெற்றவர்களும் அரசாங்கத்தின் கொள்கைகளையும் திட்டங்களையும் அமல்படுத்துவது ஒருவருடொருவர் ஒத்துழைக்கவேண்டும். இத்தகைய ஒத்துழைப்பு துறைகளிடையே ஒருங்கிணைவையும் பெறுவதற்கென அரசாங்கம் பல்வேறு வழிமுறைகளை ஏற்படுத்தியுள்ளது. தலைமை அமைச்சர், அமைச்சர் குழு அமைச்சர் குழுவின் உட்குழுக்கள், அமைச்சர் குழுவின் செயலர் போன்ற கூறுகள் யாவும் அரசாங்கத்தின் பல்வேறு துறைகளுக்கும் இடையே ஒருங்கிணைவை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளன.

## இந்திய நிர்வாக முறையின் சட்ட அடிப்படை

இந்திய அரசியலமைப்பு **1950** ஆம் ஆண்டு ஜனவரி திங்கள் **26**ம் நாள் நடைமுறைக்கு வந்தது. இது ஒரு பாராளுமன்ற முறை அரசாங்கத்தை ஏற்படுத்தியது. பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் குடியரசுத் தலைவர் (President) பெயரளவில்தான் ஆட்சித் துறைத் தலைவராக இடம் பெறுகிறார். நாட்டை ஆளும் உண்மையான பொறுப்பும் அதிகாரமும் தலைமை அமைச்சரையும் அவரது அமைச்சர் குழுவையுமே சாரும்.

அரசியலமைப்பு மத்திய அரசாங்கத்தில் ஒரு குடியரசுத் தலைவரையும், ஒரு தலைமை அமைச்சரவையும் அவரது அமைச்சர் குழுவையும் நியமிக்க வழிவகை செய்கிறது. குடியரசுத் தலைவர் தேர்வாளர் குழு ஒன்றின் மூலம் மறைமுகமாக ஐந்து ஆண்டுகளுக்கெனத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அவருக்கு ஆட்சித்துறை, சட்டமன்றத்துறை, நீதித்துறை சார்ந்த அதிகாரங்களும், நெருக்கடி கால அதிகாரங்களும் அளிக்கப்பட்டுள்ளன. தேசீய, மாநில மற்றும் நிதி சம்பந்தப்பட்ட நெருக்கடி பிரகடனம் செய்ய அவருக்கு முழு உரிமையும் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவர் இவ்வதிகாரங்கள் யாவற்றையும் அமைச்சர் குழுவின் பரிந்துரையின் அடிப்படையிலேயே செயல்படுத்த முடியும். இவ்வாறு குடியரசுத் தலைவர் ஒரு பெயரளவிலான ஆட்சித் துறைத் தலைவராக விளங்குகிறார்.

உண்மையான ஆட்சித்துறை அதிகாரம் தலைமை அமைச்சரின் தலைமையின் கீழ் இயங்கும் அமைச்சர் குழுவிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. தலைமை அமைச்சர் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகிறார். தலைமை அமைச்சராக நியமிக்கப்படுபவர், மக்களவையில் பெரும்பான்மை பெற்று விளங்கும் கட்சியின் அல்லது கட்சிகளின் தலைவராவார். மற்ற அமைச்சர்கள் யாவரும் தலைமை அமைச்சரின் பரிந்துரையின் அடிப்படையில் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகின்றனர். தலைமை அமைச்சர் அந்த அமைச்சர்களிடையே அரசாங்கச் செயல்களைப் பகிர்ந்தளித்து அவர்களுடைய செயல்களை மேற்பார்வையும் செய்கிறார். துறைகளின் செயலர்கள் அமைச்சர் குழுவின் நியமனக் குழுவால் தலைமை அமைச்சரின் தலைமையின் கீழ் நியமிக்கப்படுகின்றனர். தலைமை அமைச்சர்தான் அமைச்சர் குழுவின் உட்குழுக்களில் அமைச்சர்களை உறுப்பினர்களாக நியமிக்கிறார். மேலும், தலைமை அமைச்சர் பல்வேறு துறைகளில் நிர்வாகத்தை மேற்பார்வை செய்யும் ஒரு ஒருங்கிணைவாளராகச் செயல்படுகிறார்.

அமைச்சர் குழுதான் உண்மையான ஆட்சித்துறை அதிகாரியாக விளங்குகிறது. அது கீழ்க்கண்ட ஐந்து விதமான முக்கியப் பணிகளைச் செய்கிறது.

(i) உள்நாட்டு மற்றும் வெளி விவகாரக் கொள்கைகளை உருவாக்குகிறது.

(ii) சட்டவரைவுகளுக்கான முன் மொழிதல்களை உருவாக்குகிறது.

(iii) முக்கியமான நியமனங்களை ஏற்படுத்துகிறது.

(iv) துறைகளுக்கிடையிலான சச்சரவுகளைத் தீர்த்து வைக்கிறது.

(v) அரசாங்கத்தின் பல்வேறு செயல்களையும் ஒருங்கிணைக்கிறது.

இவ்வாறு அரசாங்கத்தின் கொள்கைகளையும் திட்டங்களையும் ஒருங்கே செயல்படுத்தும் பொறுப்பு அமைச்சர் குழுவைச் சார்ந்திருக்கிறது. ஒரு கூட்டுப் பொறுப்பாக அமைந்துள்ளது. எல்லா முக்கிய துறைகளிலும் காபினட் அந்தஸ்தையுடைய ஒரு அமைச்சர் இடம் பெறுகிறார். அரசு அந்தஸ்து பெற்ற அமைச்சர் (Minister for state) காபினட் அமைச்சருக்கு உதவியாகச் செயல்படுகிறார். சிலவேளைகளில் ஒரு அரசு அந்தஸ்துடைய அமைச்சரை ஒரு துறைக்கு முழுப் பொறுப்பேற்கச் செய்வதும் உண்டு. அமைச்சர் குழுவுக்கு உதவியாக பல்வேறு நிலைக் குழுக்களும் தற்காலிகக் குழுக்களும் இருக்கின்றன. நிலைக் குழுக்கள் அமைச்சர் குழு கோரிய பல்வேறு நிர்வாகப் பிரச்சனைகளைக் கவனிக்கின்றன. நிலைக்குழுக்களில் முக்கியமானவையாக பொருளாதார ஒருங்கிணைவுக்குழு, பொருளாதாரக் கொள்கைமீதான குழு, அரசியல் விஷயங்கள் மீதானகுழு, பாராளுமன்ற விஷயங்கள் மீதான குழு போன்ற குழுக்களைக் கூறலாம்.

அரசாங்கச் செயல்கள் யாவும் அமைச்சர் மற்றும் துறைகள் மூலமாக நடைபெறுகின்றன. அமைச்சர்களுக்கும் துறைகளுக்கும் கீழ் பல்வேறு துணை அலுவலகங்களும் சார்பு அலுவலகங்களும் அமைந்துள்ளன. உதாரணமாக மத்திய புலனாய்வுத் துறை, ஒருங்கிணைவு இயக்குனர் அலுவலகம் (கம்பியில்லா தந்தி காவலகம்) அல்லது உள்துறை அமைச்சகத்திலுள்ள இணை அலுவலகங்களையும் மற்றும் சார் அலுவலகங்களையும் ஒப்பிடலாம். துணை அலுவலகங்கள் (Attached Offices) துறைகளால் உருவாக்கப்பட்ட கொள்கையின் செயலாக்கத்திற்கு வேண்டிய வழிகாட்டுதல் நல்குவதற்குப் பொறுப்பேற்று நிற்கின்றன. சார்பு அலுவலகங்கள் (Subordinate offices) ஏறக்குறைய கள அலுவலகங்கள் போன்றே பணியாற்றுகின்றன.

செயலர் என்பவர் ஒரு துறையின் நிர்வாகத் தலைவராவார். இவர் கொள்கை உருவாக்கம் முதல் எல்லா விஷயங்களிலும் அமைச்சருக்குத் தேவையான ஆலோசனைகளையும் வழங்கி அவருக்கு நிர்வாகத்தில் துணை புரிகிறார். துறையின் நிர்வாகத் திறமைக்கு இவரே பொறுப்பானவர். பலருக்கு உதவியாக இணைச் செயலர் ஒருவர் இருக்கின்றார். திறமையான நிர்வாகத்திற்கென ஒவ்வொரு துறையும் பெரும் பிரிவுகளாகவும் (wings), கோட்டங்களாகவும் (Divisions), கிளைகளாகவும் (Branches), பிரிவுகளாகவும் (sections) பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவும் ஒரு பிரிவு அலுவலரின் கண்காணிப்பிற்குக் கீழ் இயங்குகிறது. ஒவ்வொரு கிளையும் சார்புச் செயலர் (under secretary) ஒருவரின் பொறுப்பில் செயல்படுகிறது. இருகிளைகள் சேர்ந்தது ஒரு கோட்டமாகும், ஒரு கோட்டத்திற்குத் தலைவர் துணைச் செயலாளராவார் (Deputy Secretary) இணைச் செயலர் (joint secretary) ஒரு பெரும்பிரிவிற்குப் பொறுப்பானவர்.

பல்வேறு துறைகளுக்கும் இடையே ஒருங்கிணைவை ஏற்படுத்த ஒரு அமைப்புத்தேவை. இத்தேவையை அமைச்சர் குழுவின் செயலகம் நிறைவு செய்கிறது. இச்செயலகத்தின் தலைவர் ஒருங்கிணைவாளராகப் பங்கேற்கிறார். அமைச்சர் குழுவில் செயலகம்தான் அமைச்சகங்களுக்கிடையேயுள்ள பல்வேறு சச்சரவுகளையும் நீக்கி ஒற்றுமை உணர்வை உருவாக்குகிறது. நிர்வாகச் சீர்திருத்த ஆணையம்,, தனது அறிக்கையில் அரசாங்கத்தின் செயல் களங்களில் தனிப்பட்ட அறிவு பெறும் பல்வேறு கூறுகளை ஏற்படுத்தும் வகையில் அமைச்சர் குழுவின் செயலகத்தை மாற்றியமைக்க வேண்டும் என பரிந்துரை செய்தது. மேலும் இச்சீர்திருத்த ஆணையம் அமைச்சர் குழு செயலர், தலைமை அமைச்சருக்கும், அமைச்சர் குழுவுக்கும், அமைச்சர் குழுவின் உட்குழுக்களுக்கும் முக்கியமான கொள்கை விஷயங்களில் முக்கிய ஆலோசகராகச் செயல்படவேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறிற்று.

லால் பகதூர் சாஸ்திரியின் காலத்தில் தலைமை அமைச்சரின் செயலகம் உருவாக்கப்பட்டது. திருமதி இந்திராகாந்தி தலைமை அமைச்சரான பொழுது இச்செயலகம் மேலும் வலுப்பெற்றது. இச்செயலகத்தில் அனுபவம் வாய்ந்த செயலர்களும், திறமைபெற்ற தனியறிவு பெற்றவர்களும் இருப்பதால் இது அரசாங்கத்தின் அறிவுச் சின்னமாகக் கருதப்படுகிறது.

இதுகாறும் நாம் தலைமை அமைச்சர், அமைச்சர்குழு, அமைச்சர் குழுவின் செயலகம், தலைமை அமைச்சரின் செயலகம் ஆகியவற்றின் நிர்வாகப் பங்கு பற்றி ஆராய்ந்தோம். நாட்டின் நிர்வாகத்தில் பெரும் பங்கு வகிக்கும் மற்றுமோர் நிறுவனமாக பாராளுமன்றம் திகழ்கிறது. பாராளுமன்றத்தில் மக்களவை, மாநிலங்களவை என்று இரு அவைகள் உள்ளன. மக்களவை 5 ஆண்டுக்களுக்கென மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. மாநிலங்களவை மாநில சட்டமன்றங்களிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றது. பாராளுமன்றம் சட்டங்களையும், வரவு செலவுத் திட்டங்களையும் நிறைவேற்றி நிர்வாகத்துறைகளை மேற்பார்வை செய்கிறது. அமைச்சர் குழுவின் உறுப்பினர்கள் தனியாகவும் கூட்டாகவும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர்கள். பாராளுமன்றம் கொள்கை விஷயங்களிலும் அன்றாட நிர்வாகச் செயல்களிலும் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்துகிறது. பாராளுமன்றக் குழுக்கள் நிர்வாகச் செயல்களைப் பரிசீலனை செய்ய பாராளுமன்றத்திற்கு உதவி செய்கின்றன.

பாராளுமன்றத்திற்கு அடுத்தாற்போல் நிர்வாகத்தில் பங்கு பெறும் ஒரு நிறுவனமாக நீதித்துறையைக் கூறலாம். நீதித் துறையின் தலைமை இடத்தில் தலைமை

நீதிமன்றம் (Supreme court) விளங்குகிறது. ஒவ்வொரு மாநிலத்திலும் நீதித்துறையின் தலைமை மன்றமாக உயர்நீதிமன்றம் (High court) விளங்குகிறது. நிர்வாகச் செயல்களின் சட்டமாக்கம் இந்த நீதிமன்றங்களில் பரிசீலனை செய்யப்பட வழிவகை செய்யப்பட்டுள்ளது. இந்நீதி மன்றங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சிறப்பாணை (writ) அதிகாரங்கள், மற்றும் நீதிப்புனராய்வு (judicial review) அதிகாரங்கள் மூலம் நிர்வாகத்தின் மீது நீதித்துறை கட்டுப்பாடு செலுத்துகிறது.

அடுத்து கருத்தில் கொள்ள வேண்டியது நாட்டின் கூட்டாட்சித் தன்மையாகும். கூட்டாட்சி அமைப்பு இந்திய நிர்வாகத்திற்கான அமைப்பு முறையை அளிக்கிறது. இந்திய அரசியலமைப்பு, மத்திய மாநிலங்களுக்கிடையே சட்டமியற்றும் அதிகாரங்களை மத்திய பட்டியல், மாநிலப் பட்டியல், இணைப்புப் பட்டியல் என்னும் மூன்று பட்டியல்களில் அமைத்துள்ளது. மத்தியப் பட்டியலில் அளிக்கப்பட்டுள்ள பொருள்கள் மீது சட்டமியற்ற மத்திய அரசாங்கம் முழு அதிகாரம் பெற்றுள்ளது. மாநில அரசுகளுக்கு மாநிலப் பட்டியல்களில் அளிக்கப்பட்டுள்ள பொருள்கள் மீது சட்டமியற்ற அதிகாரம் வழங்கப் பட்டுள்ளது. மத்திய மாநில அரசாங்கங்கள் இரண்டுமே இணைப்புப் பட்டியலில் அளிக்கபட்டுள்ள பொருள்கள் மீதான சட்டமியற்ற அதிகாரம் பெற்றுள்ளன. ஆனால் இணைப்புப் பட்டியலில் கூறப்பட்டுள்ள பொருள் ஒன்றின் மீது இரண்டு அரசாங்கங்களுமே சட்டமியற்றியிருந்தால் இரண்டிற்குமிடையே சச்சரவு ஏற்படின் மத்திய அரசாங்கம் இயற்றிய சட்டமே நிலைநிறுத்தப்படும். சில சந்தர்ப்பங்களில் மத்திய பாராளுமன்றம் மாநில பொருள்கள் மீதும் சட்டமியற்றலாம். அரசியலமைப்பு ஒரு வலிமை மிகுந்த மத்திய அரசாங்கத்தை ஏற்படுத்த வழிவகை செய்கிறது. கடந்த ஆண்டுகளில் இந்திய அரசியல் முறையில் ஏற்பட்ட மாறுதல்களின் விளைவாக மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் அதிகரித்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியப் பொது நிர்வாகம் ஜனநாயகத் தளத்தில் கட்டியெழுப்பப்பட்டதாகும். மத்தியிலும் மாநிலங்களிலும் நிர்வாகம் அரசியலமைப்பின் அடிப்படையில் நடைபெறுகிறது. நிர்வாகம் முழுவதும் அரசுப் பணியாளர்களால் நடத்தப்படுகிறது. ஒரு ஜனநாயக அரசியல் முறையில் எப்பொழுதுமே அரசாங்கம் நிலையாக இருக்கும் என்பதற்கில்லை. இதனால் நிர்வாகத்திலும் நிலையான தன்மை என்றுமே ஒரு கேள்விக்குறியாக அமைந்து விடுகிறது. ஆனால் அரசுப் பணியாளர்கள் நிரந்தரமானவர்கள் என்பதால் நிர்வாகமும் நிலையாக இருந்துவருகிறது. இவ்வாறு நிர்வாகத்தின் நிலைப்புத் தன்மையும் வெற்றியும் அரசுப் பணியாளர்களின் திறமையை பொறுத்து அமைகிறது. எனவே, நிர்வாகத்தின் வெற்றி அரசுப் பணியாளர்களின் திறமையையும், அரசியல் தலைவர்களின் நாணயத்தையும், வாக்காளர்களுடைய அயரா விழிப்புணர்வையும் பொறுத்தது என்பது குறிப்பிடத்தக்கது!

### மாதிரி வினா

இந்திய நிர்வாகம் அரசியல் அமைப்பில் எவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது ?

## பாடம்–3 மத்திய செயலகம்

இந்திய நிர்வாக வரலாற்றில் ஆளும் அதிகாரம் என்பதை ஒருவர் கையில் கொடுக்காமல் ஒரு குழுவிடம்தான் கொடுத்துள்ளனர் என்பது மிகவும் சிறப்பான அம்சமாகும். 1773 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட ஒழுங்குபடுத்தும் சட்டமானது மாகாணங்களைக் கட்டுப்படுத்தும் உயர் அதிகாரமொன்றை உருவாக்கியது. இதுதான் ஆட்சித்துறை, 1950 ஆம் ஆண்டில் புதிய அரசியலமைப்பு உருவாகும்வரை இது தொடர்ந்தது. 1950 ஆண்டிற்குப் பின்னர் குடியரசுத் தலைவர் ஆட்சித்துறைத் தலைவராக மாறினார். அவருக்கு ஆலோசனையும் உதவியும் செய்ய அமைச்சரவை, பிரதம அமைச்சர் தலைமையில் உருவானது. இந்த அமைச்சரவையில் ஒவ்வொரு அமைச்சரும் துறையின் தலைவர் துறைத் தலைவருக்கு உதவியாக நிர்வாகத் தலைவர் செயலராக இருக்கின்றார். இவ்விருவரையும் கொண்டதுதான் மத்திய செயலகம்.

### மத்திய செயலகம் (Central Secretariat)

நிர்வாக அமைப்பின் வரிசையில் உச்சியாக, உயர்மட்டமாக விளங்குவது மத்திய செயலகமாகும். இங்கு தான் நாட்டின் நிர்வாக அதிகாரங்கள் முழுவதும் உள்ளன. அனைத்து அதிகாரங்களையும் கொண்டு இது விளங்குவதால், நாட்டின் அனைத்துப் பகுதிகட்கும் தன்னுடைய அதிகாரத்தை பகிர்ந்து, பரப்பி வைத்துள்ளது. இவ்வாறு முக்கியமானதாக மத்திய செயலகம் உள்ளது. இது ஏற்பட்ட வரலாறு, வளர்ந்த விதம், ஆற்றும் பணிகள் குறித்து சிறிது காண்போம். இன்றைய நிலையில், அரசாங்கத்தின் செயல்கள் அதிகரித்துக் கொண்டே வருவதாலும், நிர்வாகமும் சிக்கல் நிறைந்ததாக, பல்வேறு பிரச்சனைகளை உள்ளடக்கி இருப்பதாலும், அரசாங்கத்தின் கொள்கைகளை வரையறுக்க, இதன் பணி அத்தியாவசியமானதாக இன்று விளங்குகிறது.

### மத்திய செயலகம் வளர்ந்த முறை:

இந்தியா சுதந்திரம் பெற்றபின்னர், செயலகத் துறைகளின் எண்ணிக்கையானது படிப்படியாக உயர்ந்து கொண்டே வந்துள்ளது. இதற்கு முக்கிய காரணம் யாதெனில், மக்கள் நல்வாழ்வு அரசாங்கமாக இந்திய அரசு மாறியதுதான் ஆகும். ஆங்கிலேயர்கள் காலத்தில் நசுக்கப்பட்டு இருந்த இந்தியர்களின் தேவைகள், சுதந்திரத்திற்குப் பின்னர் வெளிவரத் தொடங்கின. இருப்பினும் பொதுவாகவே 1940–ஆம் ஆண்டிற்குப் பின்னர், துறைகளின் எண்ணிக்கையானது பெருகத் தொடங்கிவிட்டன. இரண்டாம் உலகப்போர் ஏற்படுத்திய நெருக்கடியாலும், அரசியலின் நெருக்கத்தினாலும் தலைமை ஆளுநர் மன்றத்தில் (Governor - General - in - Council) உறுப்பினர்கள் எண்ணிக்கை உயர்ந்தது. ஆனால் புதிதாகத் துறைகள் எதுவும் உருவாக்கப்பட வில்லை. ஆகவே இருக்கின்ற துறைகள் இரண்டாகவும், மூன்றாகவும் பிரிக்கப்பட்டன. உதாரணமாக பாதுகாப்புத் துறையையும், தொடர்பு துறையையும் எடுத்துக் கொள்வோம். பாதுகாப்புத் துறையானது போர்த்துறை (War Dept.) மற்றும் பாதுகாப்புத்துறை என இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இதுபோல் தொடர்புத் துறையானது–போர் போக்குவரத்துத் துறை, அஞ்சல் துறை மற்றும் விமானத்துறை எனப் பிரிக்கப்பட்டது. இவ்விதமாகத் துறைகளின் எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கியது.

இந்தியாவில் 1947–ம் ஆண்டு வரையிலும் சுமார் 18 செயலகத் துறைகள் தான் இருந்தன. இது 1957–ம் ஆண்டில் 25 ஆகவும், தற்போது 40க்கும் அதிகமாக உள்ளன. இது தவிர செயலகமற்ற அமைப்புக்களின் தலைமையிடங்கள் சுமார் 569க்குமேல் உள்ளன.

1956லிருந்து 1966–ம் ஆண்டிற்குள்ளாக 51 சதவிகிதம் பணியாளர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. 1948–ம் ஆண்டிலிருந்து 1967–ம் ஆண்டிற்குள்ளாக உயர்மட்ட அதிகாரிகளின் எண்ணிக்கை 64 லிருந்து 209 ஆக உயர்ந்துள்ளது. உயர்மட்ட அதிகாரிகள் என்பதில் செயலர்கள், கூடுதல் செயலர்கள், சிறப்புச் செயலர்கள், கூட்டுச் செயலர்கள் போன்றோர்கள் அடங்குவர். இதே மாதிரியாக, துணைச் செயலர்கள் (Deputy Secretary) எண்ணிக்கையானது 89 லிருந்து 303 ஆகவும், சார்புச் செயலர்கள் (Under Secretary), 214 லிருந்து 457 ஆகவும் உயர்ந்துள்ளனர். 1948ம் ஆண்டிலிருந்து 1965–ம் ஆண்டுவரையிலும் 443 லிருந்து 2493 ஆக பிரிவு அலுவலர்கள் (Section Officers) எண்ணிக்கைகள் உயர்ந்துள்ளன.

இந்தியா சுதந்திரம் பெற்ற பொழுது 1,157 இந்திய அரசுத் துறைப் பணியாளர்கள் (ICS) இருந்தனர். இதில் 549 இந்தியர்கள் இடம் பெற்று இருந்தனர். சுதந்திரத்திற்குப் பின்னர் 451 இந்திய அரசுத்துறைப் பணியினரே எஞ்சியிருந்தனர். இதில் 418 இந்தியர்களும், 33 ஆங்கிலேயர்களும் தான் ஆகும். தற்போது இந்திய நிர்வாகப் பணியினர்கள் 3000க்கும் மேல் உள்ளனர். இந்திய அரசுத்துறைப் பணியின் கடைசி உறுப்பினர் திரு. முகர்ஜி என்பார் 1980–ம் ஆண்டில் பதவி ஓய்வு பெற்றார். தற்போது இந்திய அரசுத்துறைப் பணியும் (ICS) கிடையாது.

செயலர்கள் 1939 ஆம் ஆண்டு 9 பேர்கள்தான் இருந்தனர். தற்போது 50க்கும் மேற்பட்டோர் உள்ளனர். கூடுதல் செயலர்கள் 8 பேர்கள், தற்போது 200க்கு வந்துவிட்டனர். துணைச் செயலர்கள் 12 லிருந்து 350க்கும், உதவிச் செயலர்கள் 16 லிருந்து 500க்கும் வந்து விட்டனர். இவ்வாறாக பணியாளர்களின் எண்ணிக்கையானது மிகவும் அதிகரித்துள்ளன. காரணம் யாதெனில், வளர்ச்சிப் பணிகளைச் செயல்பட வைக்க வேண்டியது இவர்களது தலையாய கடமையாகும். செயலகப் பணியாளர்கள் கொள்கை உருவாக்கத்திற்கு வேண்டிய செய்திகள், ஆதாரங்கள் போன்றவற்றைக் கொடுக்கின்றனர். அமைச்சர்கள் போதிய அனுபவம் பெறாதவர்களாக இருப்பதால் அவர்களுக்கு ஆலோசனை கூறி, நாட்டை நடத்த வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகவும் இருப்பதால், இவர்கள் பணி மிகவும் இன்றியமையாதது.

அமைச்சர்களுக்கும் செயலர்களுக்கும் நேரடித் தொடர்பினை ஏற்படுத்துகின்ற இடம் செயலகம். அமைச்சர்களை செயலர்கள் தினந்தோறும் நேருக்குநேர் பார்த்து பிரச்னைகளை ஆராய்ந்து முடிவு எடுக்க வேண்டிய சூழ்நிலையில் உள்ளனர். இவர்களது தொடர்பானது நெருக்கமானது. தனித்தனியே பதவி அந்தஸ்தில் பிரிக்கலாமே தவிர, செயலில், தனித்துப் பிரிக்க முடியாது. ஏனெனில் இன்று கொள்கை உருவாக்கம்கூட, செயலக பலவந்தத்தினால் உருவாக்கப்படுகிறது. தன்னலக் குழுக்கள் கூட (Pressure Groups) தங்களது செல்வாக்கை இங்கு வளர்த்துள்ளனர். ஆகவே செயல் தன்மையில் எளிதாகப் பிரிக்க முடியாது. அரசாங்கப் பணியாளர்கள் தங்களது கடமைகளை ஆற்ற வேண்டும். அதனால் கிடைக்கின்ற பெயரும் புகழும் அரசாங்கத்திற்குத் தான் செல்லும். தனிநபருக்கு செல்லாது என்பதை பெயரில்லாத் தன்மை (animosity) என்பர். செயலர்களது பணியும் இது போலத் தான் உள்ளது. பிரச்னைகளை விவாதித்து, தீர்த்து, செயல்களை கூட்டாகச் செய்ய வைக்கின்ற இடம் செயலகமாகும். அதன் முக்கிய பணிகள் சிலவற்றைக் காண்போம்.

1. அமைச்சர்களுக்குக் கொள்கை வகுத்தலில் ஆலோசனை கூறுதல், நேரத்திற்கு நேரம் தேவைப்படுகின்ற சமயங்களில் கொள்கைகளை மாற்றி அமைத்தல்.

2. சட்டங்கள், ஒழுங்கு விதிகள், ஒழுங்கு முறைகள் ஆகியவற்றை அமைத்துக் கொடுத்தல்.

3. திட்டங்களைப் பகுதிவாரியாக அமைத்து, செயல் திட்டங்கள் உருவாக்குதல்.

4. அமைச்சகங்களில் வரவுசெலவுத் திட்ட மதிப்பீடுகளைத் தயாரித்து செலவுகளைக் கட்டுப்படுத்துதல். நடைமுறை செயல்திட்டங்களுக்கு நிர்வாக இசைவினைப் பெறல், நடைமுறை செயல்திட்டங்கள் முந்தைய செயல்திட்டங்களில் மாற்றமேதும் செய்தால் அதற்கு அனுமதி பெறவேண்டும்.

5. கொள்கைகள், செயல் திட்டங்கள் ஆகியவை செயலாக்கப்படுவதைக் கண்காணித்தலும், கட்டுப்படுத்தலும்.

6. கொள்கைகளை ஒருங்கிணைத்தல், மாநில அரசாங்கங்களுடன் தொடர்பு கொண்டு, அரசாங்கத்தின் பிற பிரிவுகளுக்கும் உதவி செய்து ஒருங்கிணைத்தல்.

7. அமைப்புகளின் நிர்வாகத் திறமையையும், பணியாளர்களின் திறமையையும் அதிகரிக்க பூர்வாங்க நடவடிக்கைகளை ஏற்படுத்துதல்.

8. பாராளுமன்ற பொறுப்புக்களைச் சரிவர செய்வதற்கு அமைச்சர்களுக்கு உதவுவது.

பாராளுமன்றப் பொறுப்புகள் என்பதில், கொள்கைகள் பலத்த கண்டனத்திற் குள்ளாகும் போது, அவற்றிற்கு பொருத்தமான காரணங்கள், விளக்கங்கள் போன்றவை கொடுத்து, கொள்கைககளைக் காப்பதில் செயலகம் சிறப்பான பணியாற்றுகிறது. செயலகப் பணியாளர்கள் நேரடியாக பாராளுமன்றத்தில் பதில் சொல்ல முடியாது. ஆனால் பாராளுமன்றக் கேள்விகளுக்கு பதில்களை தயாரித்து, அமைச்சர்களிடம் கொடுத்து கொள்கைகளைக் காக்கின்றனர். பாராளுமன்றம் நடைபெறுகின்ற பொழுது, செயலகப் பணியாளர்கள் பார்வையாளர்களாக அதிகாரிகளுக்கென ஒதுக்கப்பட்ட இடங்களில் அமர்ந்து கவனித்துக் கொண்டு இருப்பர். சில சமயங்களில், அதாவது, வரவு செலவுத்திட்ட கூட்டத் தொடரில், ஒவ்வொரு மானியமும் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளும் போது, அந்தந்த துறையின் செயலர் மற்றும் பிற உயர் மட்ட அதிகாரிகள் பார்வையாளர்களாக இருந்து விவாதத்தை உன்னிப்பாகக் கவனிப்பர். அங்கு கொள்கை தாக்குதலுக்குள்ளாகும் போதும், தவறான செய்திகள் வெளியிடும் போதும் அவற்றை அமைச்சருக்குச் சுட்டிக் காட்டுவர். இவ்வாறு பாராளுமன்றப் பொறுப்புகளைச் செவ்வனே செய்ய செயலகம் உதவுகிறது.

செயலகமானது மூன்று வகையான செயல்களைச் செய்து வருகின்றது. அவை,

1. செயலகமில்லாத அமைப்புக்கள் இல்லாத இடங்களில் எல்லா வேலைகளையும் செய்வது.

2. செயலகமில்லாத அமைப்புக்கள் உள்ள இடங்களில் அனைத்து வேலைகளையும் செய்வது.

3. பல பணிகளைச் செய்வது.

முன் கூறிய செயல்களை விவரமாக விளக்க வேண்டுமாயின், நாம் வர்த்தக அமைப்பை உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். இதில் குறிப்பாக பன்னாட்டு வியாபாரத்தை மேற்கோளுக்கு எடுத்தால், பஞ்சாலை, சணல் ஆகியவை முதல் வகைச் செயலில் அடங்கும். நிலை நாட்டல், அலுவலக மேலாண்மை, போன்ற செயல்கள் இரண்டாம் வகைச் செயலில் அடங்கும். நிதிக்கட்டுப்பாடு மூன்றாம் வகைச் செயலாகும். பொதுவாக இம் மூன்று வகைச் செயல்களில் இரண்டாம் வகையும் மூன்றாம்

வகையும் ஒன்றாகக் கலந்து இருக்கும். முதல்வகைச் செயலானது 44 சதவிகிதமும், இரண்டாம் வகைச் செயல் 30 சதவிகிதத்தையும், 26 சதவிகிதம் மூன்றாம் வகையையும் சேர்த்து உள்ளது என்பதை அறிக. இதில் 30 சதவிகிதச் செயல்கள் இரண்டாம் வகையும் மூன்றாம் வகையையும் சேர்ந்ததாகும். இவ்வாறு பல பணிகளும் செயல்படக்கூடிய இடமாகச் செயலகம் திகழ்கின்றது.

நிர்வாகச் சீர்த்திருத்த ஆணையமானது மத்திய செயலகப் பணிகள் பொதுத்தன்மை நிறைந்த வளர்ச்சிக்கேற்ப அறிவியலர்கள், புள்ளியியலர்கள், பொறியியலர்கள் போன்ற தனித்தன்மையாளர்களைச் சேர்க்க வேண்டுமென்று பரிந்துரை செய்துள்ளது. அமைச்சகப் பணியாளர்கள் நிர்வாகத்தின் தொடர்ச்சியையும், முடிவாக்கம் செய்வதில் முக்கிய பங்கினையும் வகிக்கக் கூடியவர்கள். இவர்கள் குறைந்த எண்ணிக்கையில், அதிகத்தகுதி நிறைந்தவர்களாக பணியுரிமை (tenure) அடிப்படையில் நியமிக்கப்பட்டுச் செயல்பட்டு வந்தனர். இன்று அமைச்சகப் பணியாளர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமாகிவிட்டது. ஆனால் தகுதித்திறமை குறைந்துவிட்டதென குறை கூறப்படுகின்றது. நிர்வாகத் தொடர்ச்சி, முடிவாக்க நடவடிக்கைகளில் போதுமான கவனம் இல்லையென்றும் கூறியுள்ளது. செயலகம் என்றாலே கொள்கை உருவாக்கம் என்ற நிலை சிறிது குறைந்து, செயலாக்கப் பணியில் கவனம் செலுத்துவது ஏற்கப்படக் கூடியதல்ல. இருப்பினும் கொள்கை உருவாக்கமும், செயலாக்கமும் செய்யக் கூடிய பிரிவாக மத்திய செயலகம் விளங்குவது ஒரு குறைதான். மேலும் செயலகமில்லாத செயலாக்க அமைப்புக்கள் ஏராளமாக வளர்ந்துள்ளன. ஆலோசனை அமைப்புக்களாக, ஆய்வு, பயிற்சி செயலாண்மைகள், நிர்வாக பொதுத்துறை நிறுவனங்கள், ஆணையங்கள், இணையங்கள் என பல வித்தியாசமான அமைப்புக்கள் செயலகத்தில் வளர்ந்துள்ளன. இவற்றை முழுமையாக முறையாகப் பயன்படுத்தினால் செயலகம் தன்னுடைய பணியை மட்டுமே செய்யும்.

## செயலக அமைப்பு

செயலர்

(சிறப்பு, கூடுதல் செயலர்கள்)

பெரும்பிரிவு

இணைச் செயலர்

(இணைச் செயலர் நிர்வாகம்)

இணைச் செயலர்கள் : 'A ' முறை செயல்களைக் கவனிப்பவர் — அலுவலகம்

இணைச் செயலர்கள் : 'B' முறை செயல்களைக் கவனிப்பவர்

டிவிஷன்

(துணைச் செயலர்) — பிரிவு

பிரிவு

(சார்புச் செயலர்) — பிரிவின் அலுவலர்

இணைச் செயலர்கள் அமைச்சர்களுக்கும் செயலர்களுக்கும் கீழுள்ள தீர்மானம் இயற்றும் நிலைகளாவர். பொதுவாக, இரண்டு துணைச் செயலர்களையும் இரண்டு சார்புச் செயலர்களையும் பெற்றிருப்பதே வழக்கம்.

## செயலகம் பற்றிய திறனாய்வு

"செயலகம்" என்னும் கருத்து பற்றி எந்தவொரு திறனாய்வும் அவசியமில்லை. ஆனால் அது செயல்படும் விதம், அதன் அமைப்பு முறை அதனுடைய பணியாளர் தொகுதியின் தன்மை ஆகியவை குறித்த திறனாய்வு தேவைப்படுகிறது. செயலகத்திற்கு எதிராகக் கூறப்படும் பொதுவான கருத்துக்களை கீழ்க்கண்டவாறு கூறலாம்.

(i) செயலகம் என்பது கொள்கை உருவாக்கத்திற்குப் பொறுப்பான ஒரு அமைப்பாகும். ஆனால். இன்றைக்கு இவ்வமைப்பானது கூடுதலாக, கொள்கைச் செயலையே செய்து வருகிறது. இதன் காரணமாக செயலகம் செயலாக்க பொறுப்புடைய துறைகளின் அதிகாரங்களைக் குறைத்துவிட்டன என்பது செயலகத்திற்கு எதிராக கூறப்படும் ஒரு விஷயமாகும்.

(ii) செயலகத்தை அதன் வேலைப் பளுவின் அடிப்படையில் நோக்கினால் அதில் பணிபுரிவோரின் எண்ணிக்கை அதிகப்படியானதாக இருக்கிறது என்னும் கருத்தும் செயலகத்திற்கு எதிராக எடுத்துக் கூறப்பட்டு வருகிறது.

(iii) கொள்கையை உருவாக்க வேண்டிய ஒரு அமைப்பு வெற்றிகரமாகச் செயல்பட வேண்டுமாயின் அது நாட்டு நடப்புக்கு ஏற்ப ஒழுகுதல் வேண்டும். இதற்குச் சாதகமாக செயலகத்திற்கும் களஅலுவலகங்களுக்குமிடையே பணியாளர்கள் மாற்றம் முறைப்படி நடைபெற வேண்டும். ஆனால் இத் தத்துவம் முழுமையாக கடைப்பிடிக்கவில்லை என்பதும் ஒரு குறையாகவேயுள்ளது.

(iv) செயலகத்தின் செயல்களில் ஏற்படும் காலதாமதம் அடுத்துக் கூறப்படும் ஒரு குறையாகும். செயலக நடவடிக்கைகளில் கடைப்பிடிக்கப்படும் நடைமுறைகள் நெகிழாத் தன்மையோடு இருப்பதே இதற்கான முக்கியக் காரணம் என்றும் சுட்டிக்காட்டப்படுகிறது.

நிர்வாகச் சீர்த்திருத்த ஆணையம் தனது அறிக்கையில் செயலகத்தின் போக்கு முறையை திருத்தி அமைப்பதற்காகக் கீழ்க்காணும் சீர்த்திருத்தங்களைப் பரிந்துரை செய்தது.

1. ஒரு அமைச்சகத்தின் பெரும்பாலான செயல்களைச் செய்ய பொறுப்புடைய மற்றும் கொள்கை உருவாக்கத்துடன் கூடுதல் தொடர்புடைய செயலகமில்லாத பிறதுறை அமைப்புக்களை அந்த அமைச்சகத்தின் செயலகப் பிரிவுடன் ஒன்றிணைக்க வேண்டும்.

2. இப்பொழுது நடைமுறையில் காணப்படும் செயலாக்கத் துறை அமைப்புகளுக்கும் கொள்கை உருவாக்கத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு தொடர வேண்டும்.

மாதிரி வினா :

மத்திய செயலகத்தின் அமைப்பு மற்றும் அதன் பணிகளை விவரி.

## பாடம்–4 அமைச்சகத்தின் அமைப்பு

## (Organization of a Ministry)

இன்றைய நாளில் அரசாங்கமானது வேறுபட்ட பல செயல்கள் செய்யப்படக் கூடியதாக, பல பொறுப்புக்களைத் தாங்கி உள்ளது. மக்களது குறைகள் தீர்க்கப்படவும், மக்களது வாழ்க்கைத் தரம் மேம்படவும் அரசாங்கம் பலவித முயற்சிகளை எடுத்துக் கொண்டு வருகிறது. இதனால் அரசாங்கத்தின் கடமைகள் மிகுதியாக அதிகரித்துக் கொண்டு வருகின்றன. ஆகவே இக்கடமைககளை முறையாகத் தொடர்ந்து செய்யப்படுவதற்காக, கடமைகள் ஒதுக்கீடு செய்யப்பட்டு, ஒவ்வொரு கடமைக்கும் ஒருவரையோ, ஒரு குழுவையோ பொறுப்பாக்கி அமைக்கப்பட்டுள்ளது. இந்த வகையில்தான் முதன் முதலாக அமைச்சகங்கள் ஏற்படுத்தப்பட்டன. இந்த அமைச்சகங்கள் கடமைகளுக்கேற்றவாறு மறுபடியும் சிறுசிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. இச்சிறு பிரிவுகள் தான் இன்று துறைகள் என்று அழைக்கப்படுகின்றன. ஆகவே அமைச்சகம் என்பது விரிவானது. இதற்குள்ளாக அமைவதுதான் துறைகள் ஆகும். அமைச்சகமானது ஒரு துறையை மட்டும் கொண்டிருக்கலாம் அல்லது பலதுறைகள் கொண்டதாகவும் இருக்கும்.

ஒவ்வொரு அமைச்சகத்திற்கும் தலைமை உண்டு. இத்தலைமை இரண்டு வகை உண்டு. ஒன்று அரசியல் தலைமை மற்றொன்று நிர்வாகத் தலைமை. அரசியல் தலைமையாளர் தான் அமைச்சர் எனப்படுவர். மக்களாட்சியில் மக்கள்தான் எஜமானர்கள். ஆகவே மக்களது பிரதிநிதி, அதாவது அமைச்சர் அமைச்சகத்திற்கு தலைமையானவர். அமைச்சர் மக்களின் பிரதிநிதியாக இருக்கலாம். நிர்வாகத்தைப் பற்றித் தெரிந்தவராகத்தான் இருப்பார் என்று சொல்ல முடியாது. ஆகவே அமைச்சருக்கு உதவியாகவும், அமைச்சகத்தின் நிர்வாகத்திற்கு பொறுப்பானவராகவும் ஒரு தலைவர் இருப்பார். இவர்தான் அரசாங்கத்தின் செயலாளராகும்.

அமைச்சகத்தைப் பொறுத்து, கூட்டுச் செயலர், இணைச் செயலர் போன்ற பதவிகளும் உண்டு. இவர்கள் ஏறத்தாழ செயலர் அந்தஸ்து பெற்று இருந்தாலும், அத்துறையில் செயலருக்குக் கீழ்தான் பணியாற்ற வேண்டும். ஆனால் இவர்களுக்கென தனித்தனி பொறுப்புக்கள் ஒதுக்கப்பட்டிருக்கும். கூட்டுச் செயலர் அல்லது இணைச் செயலர் பொதுவாக பணியாளர் குழாம் மற்றும் அலுவலக மேலாண்மை ஆகியவற்றைக் கவனித்துக் கொள்கின்ற பொறுப்புடையவர்களாக இருப்பர். இவர்களுக்குக் கீழாக, உதவி, துணை அல்லது சார்பு செயலர் ஆகியோர்கள் உண்டு. இவர்கள் செயலர் மற்றும் பிற கூட்டு, இணைச் செயலர்களுக்கு உதவியாக இருப்பர். இவர்கள் அமைச்சகத்திலுள்ள பல்வேறு சிறுசிறு பிரிவுகளுக்குப் பொறுப்பானவர்கள். இவர்களுக்குக் கீழ் பிற பணியாளர்கள் முறையே கண்காணிப்பாளர், உயர்நிலை எழுத்தர், தட்டச்சர், உதவியாளர், ஏவலாளர்கள் போன்றோர் இடம் பெறுவர். இவர்கள் அனைவரும் கூடி, ஒத்துழைத்து செயல் பட்டால்தான் அமைச்சகத்தின் வேலையானது சீராகச் செயல்பட முடியும்.

மேலும் அமைச்சகங்களைத் தாங்கிப் பொறுப்பேற்று நடத்தக் கூடியவர்களாகச் செயலர்கள் இருப்பதால், அவர்கள் மிகுந்த அனுபவம் கொண்டவர்களாக, திறமையாகச் செயல்படக்கூடிய செயல் வல்லுநர்களாக இருக்கவேண்டும். அமைச்சர்களுக்கு ஆலோசனை கூறச் கூடியவர்களாக இருப்பதால் பிரச்சனைகளைத் தெளிவாக எடுத்துக்கூறி, தீர்மானம் செய்ய வைக்கவேண்டும். அமைச்சரிடம் கூறினால், தவறாக எண்ணுவாரோ என்று பிரச்சனைகளைப் பயத்தால் சொல்லாமலிருக்காமல், நாட்டின் முன்னேற்றத்திற்கு

பணியாற்றுகிறோம் என்ற எண்ணத்தில் உள்ளதை உள்ளபடியே சொல்ல வேண்டும். மனிதர்கள் ஆசைக்கு அடிபணிந்தவர்கள்தான் என்றாலும், ஒவ்வொருவரும் பெறுகின்ற ஊதியமானது மக்களது பணம். மக்கள்தான் எஜமானர்கள். மக்களுக்குத்தான் உழைக்கிறோம் என்ற எண்ணம் அதிகாரிகள் மத்தியில், குறிப்பாக உயர்மட்டத்தில் ஏற்படவேண்டும். அப்போதுதான் துணிவு ஏற்படும். உண்மையாகச் செயல்பட முடியும்.

அமைச்சகமானது கோட்டங்கள் (Divisions), கிளைகள் (Branches), பிரிவுகள் (Sections) என்று பிரிக்கப்படுகின்றது. உதவியாளர்கள், உயர்மட்ட எழுத்தர், கீழ்மட்ட எழுத்தர், தட்டச்சர்கள் மற்றும் நாட்குறிப்பாளர்கள்(Diarists) ஆகியோர்கள் பிரிவில் அடங்குகின்றனர். இவர்களுக்கு பிரிவுத் தலைவர் உண்டு. இரண்டு பிரிவுகள் அடங்கப் பெற்றதாக கிளை அமையும். கிளைக்கு சார்பு செயலர் (Under Secretary) தலைவராக உள்ளார். இரண்டு கிளைகள் அடங்கியது ஒரு கோட்டமாகும். கோட்டத்திற்கு உதவிச் செயலர் (Deputy Secretary) தலைமை ஏற்றுள்ளார். முக்கியமான கொள்கைத் தீர்மானங்களை செயலர் அல்லது கூட்டுச் செயலரின் மூலமாகத் தான் எடுக்கவேண்டுமென நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு துறையும் மறுபடியுமாக உயர்மேலாண்மை (Top level Management), இடை மேலாண்மை (Middle Management), மற்றும் கீழ்மட்ட மேலாண்மை அல்லது செயல்களம் (Shop floor) எனப் பிரிக்கப்படுகின்றது. இந்தியாவைப் பொறுத்த அளவில் இம்மூன்று பிரிவுகள் அறுதியிட்டு வரையறுக்கபடவில்லை. அகில இந்தியப் பணிகள், மத்தியப் பணிகள் மற்றும் மத்திய பணிகள் உயர் மேலாண்மையிலும், மத்திய செயலகப் பணிகள் இடைமேலாண்மையிலும், செயல் எல்லைப் பணிகள் மற்றும் பிற அமைச்சகப் பணிகள் (Ministerial Services) ஆகியன கீழ்மட்ட மேலாண்மையிலும் அடங்கப் பெறுகின்றன. அரசியல் தலைமையிலும் நிர்வாகத் தலைவர் மற்றும் அவருக்குக் கீழ் உள்ள உதவிச் செயலர் வரையிலும் உயர்மேலாண்மையில் அடங்குவர். இவர்கள் கொள்கைகளை உருவாக்கி, கட்டுப்பாடும், வழிகாட்டலும் செய்வது இவர்களது பணியாகும். கீழ்மட்ட மேலாண்மையானது செய்திகளைத் திரட்டிக் கொடுக்கின்றது. இடைமேலாண்மை செய்திகளை கொள்கை உருவாக்கலுக்காக உயர்மேலாண்மைக்கு அனுப்பி வைக்கின்றது. இவ்விதமாக துறையானது அமையப் பெற்றுள்ளது.

இந்தியாவில் அரசாங்கத்துறைகள் மிகவும் துரிதமாக வளர்ச்சியடைந்துள்ளன 1958–ம் ஆண்டில் நான்கு துறைகள் இருந்தன. வெளிநாட்டு விவகாரம், உள் நாட்டு விவகாரம்,நிதித்துறை மற்றும் இராணுவம் ஆகிய நான்கு துறைகளாகும். பின்னர் 1869ப் ஆண்டில் 6 துறைகளாகவும், 1919–ம் ஆண்டில் 9 துறைகளாகவும், 1937–ம் ஆண்டில் 1 ஆகவும், 1945–ல் 21 ஆகவும், 1946–ல் 19 ஆகக்குறைந்தன. பின்னர் 1947–ல் 18 ஆகக் குறைந்தன. இந்தியா நல்வாழ்வு செயல்களை மேற்கொள்ள ஆரம்பித்ததால், 1952–ல் 2 ஆகவும், 1967–ல் 41 ஆகவும், 1973–ல் 51 ஆகவும் தற்போது 2004–ல் 64 ஆகவும் உயர்ந்துள்ளன. அமைச்சகங்களைச் சில நேரங்களில் திருத்தி அமைக்கின்றபோது, ஒரு அமைச்சகத்தின் துறை பிறிதொரு அமைச்சகத்துறைக்கும் ஏற்றவாறு, பெருகிக் கொண்டு வந்துள்ளன.

## ஒரு அமைச்சகத்தின் செயல்முறை

ஒரு அமைச்கத்தின் மத்திய பதிவகம் (Registry) அமைச்சகத்திற்கு வரும் செய்திகள் மற்றும் கடிதங்கள் ஆகிய எல்லாவற்றையும் பெற்று பல்வேறு பிரிவுகளுக்குப் அவைகளை அனுப்பிவைக்கிறது. பிரிவு டயரியாளர் (diarist) மத்திய பதிவகத்திலிருந்து

வரும் செய்திகளை பிரிவு அலுவலருக்குச் சமர்ப்பிக்கிறார். பிரிவு அலுவலர் இந்தப் பெறுகைகளை முதன்மைச் செய்திகள் மற்றும் துணைச் செய்திகள் என்று வகைப்படுத்துகிறார். மூல அல்லது புதிய வேலைகள் தொடர்பான செய்திகள் முதன்மைச் செய்திகள் வகையினைச்சேரும். இந்த முதன்மைச் செய்திகள் நீண்ட சோதனைக்குரிய முதன்மைச் செய்திகள் என்றும் உடனே கவனிக்கப்படக் கூடியவை என்றும் மேலும் இரு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன. இவ்வாறு வகைப்படுத்திய பிறகு பிரிவு அலுவலர் ஒவ்வொரு செய்தியையும் அதற்குரிய உதவியாளருக்கு அனுப்பிவைக்கிறார். பிரிவு அலுவலரின் தனி கவனத்திற்குரிய விஷயங்களானால் அவரே அதைக் கவனிக்கிறார். அல்லது அதை கவனிக்கும் உதவியாளருக்கு தனிப்பட்ட முறையில் வேண்டிய வழி காட்டுதலை நல்குகிறார். ஏதேனுமொரு விஷயத்தின் மீது அவசர நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்று பிரிவு அலுவலர் கருதினாரெனில் தனது மேலதிகாரியின் பார்வைக்கு அதனை வைக்கிறார். டயரியாளர் பிரிவு அலுவலரிடமிருந்து திரும்பி வரும் எல்லா செய்திகளையும் டயரியில் குறிப்பிட்டு அவைகளைச் சம்பந்தப்பட்ட உதவி யாளர்களுக்கு அனுப்பி வைக்கிறார். உதவியாளர் பெறுகைகளைப் பார்வையிட்ட பிறகு அது சம்பந்தப்பட்ட கோப்புகளையும், பிற கடிதங்களையும் சேர்க்கிறார். மேலும் அவர் அது சம்பந்தப்பட்ட விதி முறைகளையும் ஆராய்கிறார். இறுதியில் அவருடைய குறிப்புடன் அந்த கோப்பினை பிரிவு அலுவலருக்குச் சமர்ப்பிக்கிறார். பிரிவு அலுவலர் அந்த அந்த கோப்பினை ஆராய்ந்து தனது குறிப்புடன் தனக்கு மேல் அதிகாரியான சார்புச் செயலரின் பார்வைக்கு அதை அனுப்பி வைக்கிறார். அந்த பிரச்சனை கொள்கை சம்பந்தப்பட்டதெனில் சார்புச் செயலர் அதனை துணைச் செயலரின் பார்வைக்கு எடுத்துச் செல்வார். துணைச் செயலர் அந்த பிரச்சனை சம்பந்தப்பட்ட ஆணைகளைப் பிறப்பிப்பார் அல்லது இணைச் செயலரின் பார்வைக்கோ அல்லது செயலரின் பார்வைக்கோ வைக்கிறார். பொதுவாக இணைச்செயலர் அல்லது செயலரின் பார்வைக்கு வைக்கப்படும் கோப்புகள் கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்தவையாக அல்லது கொள்கை சம்பந்தப்பட்டவைகளாக இருக்கின்றன. இவ்வாறு இவர்களிடம் சமர்ப்பிக்கப்படும் விஷயங்களை இவர்கள் அமைச்சரின் பார்வைக்கு வைக்கின்றனர். அமைச்சர் அதன் மீது தீர்மானம் எடுக்கவும் செய்யலாம் அல்லது அமைச்சர் குழுவின் முடிவிற்கு விடவும் கூடும்.

உதாரணத்திற்கு உள்துறை அமைச்சரவையை எடுத்துக் கொண்டு அதன் அமைப்பை ஆய்வோம்.

மாதிரி வினா :

அமைச்சக அமைப்பு பற்றி விவரி.

பாடம் –5

# உள்துறை அமைச்சகம்

## (Ministry of Home Affairs)

உள் துறை அமைச்சகமானது நாட்டின் அமைதியையும் ஒழுங்கையும் கட்டிக் காக்கும் பொறுப்பு வாய்ந்ததாக உள்ளது. இது அரசுப் பணிகள் அனைத்தையும் மேலாண்மை செய்யக் கூடியதாகவும் உள்ளது. இவை தவிர, யூனியன் பிரதேசங்களை நிர்வகிக்கும் பொறுப்பையும் இது கொண்டுள்ளது.

அரசுப்பணிகளைப் பொறுத்த அளவில் அனைத்துப் பணிகளையும் ஒழுங்குபடுத்தும் கடமையைக் கொண்டுள்ளது. எல்லாப் பணிகளுக்கும் பொதுவாக, தரமான ஆட்சேர்ப்பு, பயிற்சி முறைகளை ஏற்படுத்திப் பராமரிப்பது, பதவி உயர்வு, ஒழுங்கு, பணிக் கட்டுபாடுகள் போன்றவற்றைச் செய்வதற்கு விதிமுறைகள் வகுப்பது இதன் கடமையாகும்.

உள்நாட்டு அமைதியைப் பராமரிப்பது இதன் முக்கிய செயல். இந்தியக் கூட்டாட்சி மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்கள் என இரு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளதை அறிவோம். இதில் யூனியன் பிரதேசத்தைப் பொறுத்த அளவில், நிர்வாகம், ஒழுங்கு, அமைதியைக் காப்பது உள்துறையாகும். ஆனால் மாநிலங்களைப் பொறுத்த அளவில் நிர்வாகம், சட்டம், ஒழுங்கு ஆகியன மாநிலத்தைச் சார்ந்தவை. ஆகவே மத்திய அரசு மாநிலங்களுக்கு அமைதி, ஒழுங்கு தொடர்பாக ஆலோசனைகளைக் கூறும். இச்செயல்களில் ஒருங்கிணைந்து செயல்படும். ஏனெனில் நிர்வாகம் மாநிலத்தில் உள்ளது. இருப்பினும் இந்தியா முழுமைக்கும் அமைதி காக்கும் பணி இதனிடத்தில் விடப்பட்டுள்ளதால். உள்துறை எல்லா மாநிலங்களையும் கண்காணிக்கிறது. ஒரு பெரிய பிரச்னை எனில் உடனே தலையிட்டு, சட்டம், ஒழுங்கை நிலைநாட்டிவிடும். எல்லா மாநிலங்களிலிருந்தும் இத்துறை செய்திகளைச் சேகரிக்கும். ஆகவே எப்போதும் விழிப்போடு இருக்கக் கூடிய துறையாக இது விளங்குகிறது. விஞ்ஞான மற்றும் தொழில் நுணுக்க அமைச்சகங்களில் தீர்மானங்கள் இயற்றப்படும் பொழுது தனிப்பட்ட அறிவு படைத்தவர்களை உட்படுத்துதல் வேண்டும்.

நாடு விடுதலை பெற்றது முதற்கொண்டு செயலக அமைப்பை மாற்றியமைக்க பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. வேலைச் செய்முறை, தீர்மானம் இயற்றும் நிலைகள், பணிகளையும் அதிகாரங்களையும் ஒப்படைத்தல் போன்ற விஷயங்களில் சீர்த்திருத்த முறைகளை கையாளுவதே இன்றைய முக்கியத் தேவையாகும்.

உள்துறையின் பணிகளில் சிலவற்றைக் காண்போம்.

1. அரசுப் பணிகளைப் பராமரிப்பது.
2. ஒழுங்கு, அமைதி காப்பது.
3. யூனியன் பிரதேசங்களைப் பராமரிப்பது.
4. வெளிநாட்டினர்கள் தொடர்பான குடியுரிமை, பத்திரிகை சட்டங்கள், தேசீயம் முதலியவற்றை ஒழுங்குபடுத்துதல்.
5. பத்திரிக்கைகள், அச்சகங்கள், நூல்கள் மற்றும் பத்திரிக்கைகள் சம்பந்தமான சட்டங்களை நிர்வகிப்பது.

6. நூல்கள் மற்றும் பிறபோன்ற பதிப்புக்களை கடல் தீர்வை சட்டப்படி தடைசெய்தல்.

7. மத்திய பணிகளை நிர்வகித்தல், அவற்றின் பணிக்கட்டுப்பாடுகளை வரையறுத்தல், மத்திய அரசுப்பணி தேர்வு ஆணையத்தின் விவகாரங்களைக் கவனித்தல், பணிகளின் பொதுவான ஆட்சேர்ப்பு, ஒழுங்கு, பணிக்கட்டுப்பாடுகளின் பொதுவான தரங்களைப் பராமரித்தல், இந்திய பொருளாதாரப் பணி, இந்தியப் புள்ளியியல் பணி, தொழில் மேலாண்மைக் குழாம் மற்றும் மத்திய செயலகப் பணிகள் ஆகியவற்றை நிர்வகிக்க நேரடிப் பொறுப்பினை இவ்வமைச்சகம் கொண்டுள்ளது.

இவை தவிர, கீழ்க்கண்ட சில வேலைகளையும் செய்கின்றது.

அ) அரசாங்கத்தின் பல்வேறு பணிகளுக்கு தாழ்த்தப்பட்ட இனத்தவர்களுக்கும், பழங்குடி வகுப்பினர்களுக்கும் இட ஒதுக்கீடு சரியாகச் செய்யப்படுகின்றனவா என்பதைக் கவனித்தல்.

ஆ) இராணுவ வீரர்களுக்கும், பணி நீக்கம் செய்யப்பட்டவர்களுக்கும் மற்றும் பிற நாடுகளிலிருந்து குடி பெயர்ந்த மக்களுக்குச் சிறப்புச் சலுகைகள் செய்ய ஆவன செய்வது.

இ) அரசாங்கத்திற்கும் பணியாளர்களுக்குமிடையே தீர்க்கப்படாத பிரச்சனை களை கூட்டு ஆலோசனை மற்றும் கட்டாயத் தீர்வு மன்றங்கள் ஏற்படுத்தி தீர்த்து வைப்பது. இதனால் அரசாங்கத்திற்கும் பணியாளர்களுக்குமிடையே சீரான ஒத்துழைப்பைப்பெற முடியும்.

8. இந்தியக் குடியரசுத் தலைவர், உதவி குடியரசுத் தலைவர், அமைச்சர்கள், உதவி அமைச்சர்கள், ஆளுநர் ஆகியோர்களின் ஊதியம், சிறப்புரிமைகள், சலுகைப்படிகள் ஆகியவை குறித்து நிர்வகிப்பது, தலைமை நீதிமன்றத்தின் நீதிபதிகள், தலைமை நீதிபதி, உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகள், தலைமை நீதிபதி, தேசியக் கொடி, ஆளுநர், குடியரசுத் தலைவர் ஆகியோர்களின் கொடிகள் சம்பந்தமான ஒழுங்கு முறைகளை நிர்வகிப்பது.

9. மக்கள் தொகை கணக்கெடுப்பு, உள்நாட்டுப் பாதுகாப்பு மற்றும் பிற எச்சரிக்கை நடவடிக்கைகளைச் செய்தல்.

10. காவல் கல்விக் கழகத்தைப் பராமரிப்பது.

11. மத்திய புலனாய்வுத் துறையினைப் பராமரிப்பது, செய்திகள் சேகரித்தல்.

மேலே கூறப்பட்டுள்ள அனைத்து வேலைகளையும் செய்ய, இந்த அமைச்சகமானது கீழ்கண்ட பிரிவுகளைக் கொண்டதாக உள்ளது. இவை ஒவ்வொன்றும் துணைச் செயலரின் பொறுப்பில் உள்ளது. அப்பிரிவுகளான:

1. வெளிநாட்டுப்பிரிவு
2. நிர்வாக புலனாய்வுப் பிரிவு
3. நிலைநாட்டல்
4. கணக்குகள்
5. அகில இந்தியப் பணிகள்
6. யூனியன் பிரதேசங்கள்
7. நிர்வாகம்
8. பணிகள்
9. நீதிவகை
10. திட்டமிடல்

11. மத்திய பணிகள்
12. காவல்
13. அவசர கால நிவாரணங்கள்
14. வெளிநாட்டவர்கள்
15. நிர்வாகச் சீர்திருத்தப்பிரிவு

இவை தவிர்த்து இந்த அரசாங்கத்தின் சில இணை அலுவலகங்களாவன:

1. மத்திய அரசுப் பணி ஆணையம்.
2. மத்திய புலனாய்வுப் பிரிவு
3. இந்திய நிர்வாகப் பணிகளின் பயிற்சிப் பள்ளி—முசோரியிலுள்ள லால் பகதுார் சாஸ்திரி ஆட்சியியல் கல்விக் கழகம்.
4. தலைமைப் பதிவாளர் அலுவலகம், புதுடில்லி.
5. டில்லி சிறப்பு காவல் படையினர்.

இந்த அமைச்சரவையின் துணைமை அலுவலகங்கள்:

1. காவல் பிரிவின் ஒருங்கிணைப்புச் செயலகம்.
2. செயலகப் பயிற்சிப் பள்ளி
3. தேசிய காவல்துறை கல்விக் கழகம்
4. தேசிய தீயணைப்புப் பணி கல்லூரி, இராம்பூர்
5. மத்திய அரசாங்கக் கருவூலம், திருவனந்தபுரம்
6. மத்திய ஆயுதப்படை (Central Reserve Police)

இவ்வாறுதான் உள்துறை அமைச்சகம் அமைக்கப்பட்டு செயல்பட்டு வருகின்றது.

மாதிரி வினா :

உள்துறை அமைச்சகத்தின் பணிகளை விவரி.

## பாடம் – 6 அமைச்சரவைச் செயலகம் (Cabinet Secretariat)

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் அமையப்பட்டு, செயல்பட்டு வந்த தலைமை ஆளுநரின் (Executive Council of the Viceroy) செயல் மன்றம்தான் இன்றைய அமைச்சரவைச் செயலகமாகும். இதற்கு முன்னர் இந்தியாவின் நிர்வாகம் பற்றிய அனைத்து செயல்களையும் தலைமை ஆளுநர் மன்றமானது (Governor-General-in-Council) கவனித்துக் கொண்டு வந்தது. இந்த தலைமை ஆளுநர் மன்றத்தில் உள்ள உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் ஒரு வகைக் கடமைக்குப் பொறுப்புடையவர்களாகத் திகழ்ந்து வந்தனர். நாட்டின் மிகமுக்கிய பிரச்சனைகள் மட்டுமே மன்றத்தின் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டன. முக்கியமான பிரச்சனைகள் மன்றத்தில் சீராகக் கலந்து, ஆலோசிக்கப்பட்டு, கூட்டாக முடிவுகள் அல்லது தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இம்முறையானது 1861–ம் ஆண்டில் சட்ட ரீதியாக (Council Act of 1861) அங்கீகரிக்கப்பட்டுவிட்டது.

தலைமை ஆளுநரின் செயல் மன்றமானது இவ்வாறாக 1861–ம் ஆண்டு உருவாக்கப்பட்டது. இந்த செயல் மன்றத்திற்கு தலைமை ஆளுநரின் தனி உதவியாளர் தலைமை வகித்து வந்தார். ஆனால் இவர் தலைமை ஆளுநர் மன்றக் கூட்டங்களில் கலந்து கொள்வதில்லை. இந்த முறையானது 1935–ம் ஆண்டு வரையிலும் நீடித்தது. வில்லிங்டன் பிரபு (Lord Wiilingdon) முதன் முதலாகத் தனது தனிச் செயலரை கூட்டங்களுக்கு அழைத்துச் சென்று, தனது அருகாமையில் அமர்த்திக் கொண்டார். இது மாதிரியாகவே பின் வந்த பலரும் செய்யலாயினர். ஆகவே 1935–ம் ஆண்டு தலைமை ஆளுநரின் தனிச் செயலரின் அந்தஸ்தானது செயல் மன்றத்தின் செயலாளராக உயர்த்தப்பட்டது. இந்த தலைமை ஆளுநரின் தனிச் செயலர், அதாவது செயல்மன்றத்தின் செயலாளர்தான் இன்றைய அமைச்சரவைச் செயலாளர் ஆவார். இவ்வாறாக அமைச்சரவைச் செயலாளர் பதவி உருவாயிற்று.

அமைச்சரவைச் செயலகமானது அமைச்சரவைக் கூட்டங்கள் மற்றும் அதன் குழுக்கூட்டங்கள் ஆகியவற்றை நடத்த முழுப் பொறுப்பு வாய்ந்தது. கூட்டங்களின் நடவடிக்கைக் குறிப்பெடுப்பது, தீர்மானங்கள் முதலியவற்றை பராமரிப்பது போன்ற பணிகளைக் கொண்டு உள்ளது. அமைச்சரவைக் குழுக்களில் சில: அமைச்சரவை கூட்டுத்திட்டக்குழு, அமைச்சரவை பாதுகாப்புக்குழு, பொருளாதாரக்குழு, வெளிவிவகாரங்கள் குழு, அமைச்சரவை நியமன உதவிக் குழு போன்றவை முக்கியமான அமைச்சரவைக் குழுக்கள் ஆகும்.

### அமைச்சரவைச் செயலர்

அமைச்சரவைச் செயலகத்தின் தலைவர் அமைச்சரவைச் செயலர் ஆவார். இது 1950 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இப்பதவியை அரசாங்கம் அரசுப் பணியாளர்களில் மூத்த அனுபவமுடையவரைத்தான் நியமிக்கிறது. இங்கிலாந்தில் தகுதியின் அடிப்படையில் இப்பதவி தேர்வு செய்யப்படுகிறது. மேலும் இந்தியாவில் இப்பதவிக்கு வருபவர்கள் கூடிய மட்டும் தங்கள் பணியின் கடைசிப் பணியாகவே அமைந்துள்ளது. இங்கிலாந்தில் 22 ஆண்டுகள் அமைச்சரவைச் செயலராக இருந்துள்ளனர். இந்தியாவில் இது மூன்று ஆண்டுகள்தான் அதிகபட்சப் பதவிக்காலமாக அமைந்துள்ளது.

அமைச்சரவைச் செயலரின் பணிபற்றி கோபாலசாமி அய்யங்கார் அறிக்கை 1949 கூறுவதாவது: இவர் நிர்வாகப் பதவிகளில் உயர்ந்த அந்தஸ்து உள்ளவர். இவர் எல்லாத் துறைகளின் ஒத்துழைப்பைப் பெறக் கூடியவராக அமைச்சரவைச் செயலகத்தின் தலைவராக இருக்கவேண்டும். பிரதம அமைச்சர் காட்டும் ஆர்வத்திற்கேற்ப அனைத்துத் துறைகளின் நடவடிக்கைகளைத் தக்க நேரத்தில் எடுக்கவல்லவராக இருக்கவேண்டும். நிர்வாகச் சீர்த்திருத்த ஆணையமும், அமைச்சரவைச் செயலரின் நிலையை உயர்த்த வேண்டும் என பரிந்துரை செய்துள்ளது. பிரதம அமைச்சருக்கு முதன்மை ஆலோசகராக, கொள்கை முடிவெடுக்க உதவக்கூடியவராக இருக்கவேண்டும். கேரா மத்திய அரசாங்க நடவடிக்கைகள் அனைத்திற்கும் இவர் பிரதமரின் கண்களாகவும், காதுகளாகவும் இருக்கவேண்டும் என்கிறார்.

அமைப்பு மற்றும் முறை (O & M) பிரிவானது 1954–ம் ஆண்டு அமைச்சரவைக் செயலகத்தில் இணைப் பிரிவாக இணைக்கப்பட்டது. நிர்வாகத்தில் திறமையை வளர்க்க வேண்டும் என்பதே இதன் முக்கிய பணியாகும். இது தவிர, மத்திய புள்ளியியல் அமைப்பு தொடர்பான வேலைகளிலும் இச் செயலகம் கொண்டதாக உள்ளது. அவை,

1. தலைமைச் செயலகம்
2. அமைப்பு மற்றும் முறைப் பிரிவு
3. இராணுவப் பிரிவு
4. பொருளாதாரப் பிரிவு

அமைச்சரவை தலைமைச் செயலகமானது, அமைச்சரவை ஒருங்கிணைப்புப் பிரிவு, நிர்வாகம் மற்றும் பொதுப்பிரிவு என பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. அமைச்சரவை மற்றும் அதன் குழுக்கள் ஆகியவற்றின் கூட்டங்கள் நடத்துவதற்கு மிகவும் முக்கியமான பிரிவு இது ஆகும்.

அமைப்பு மற்றும் முறை என்ற பிரிவானது நிர்வாகத் திறமையை வளர்க்க முயற்சிக்கும் பிரிவாகும். நிர்வாகத்தில் ஒவ்வொரு பிரிவும் என்ன வேலை செய்கின்ற தென்பதுடன், எவ்வாறு செய்கிறது, எந்த வகையில் செய்தால் சிறப்பாகச் செய்யலாம், எந்த முறையைக் கடைப் பிடித்தால் சிக்கனத்தைப் பெறலாம் என்பன போன்ற பிரச்சனைகளைச் சீராக ஆராய வல்லது இப்பிரிவாகும். எனவே அமைப்பையும், செயல் முறைகளையும் ஆராய்ந்து, கருத்துக்களையும், பரிந்துரைகளையும் இப்பிரிவு வழங்கும்.

இப்பிரிவானது பிரதம மந்திரியின் கீழாகச் செயல்படுகிறது. இப்பிரிவின் பணிகளில் சில.

1. தலைமையையும், ஊக்குவிப்பையும் நிர்வாகப் பிரிவுகளுக்கு வழங்குகிறது.

2. அனைத்துத் துறைகளுக்குமென பொதுவாகச் செய்திகளைச் சேகரித்து வைத்தல்.

3. ஒத்துழைப்பையும், ஒருங்கிணைப்பையும் ஏற்படுத்தும் வகையில் திறமையாகப் பரிந்துரைகள் செய்தல்.

இப்பிரிவு தேவை என்பதை கோர்வாலா என்பவர் 1952ம் ஆண்டு தெளிவுபட விளக்கினார். அதன் விளைவாக இப்பிரிவு ஏற்படுத்தப்பட்டது. இப்பிரிவு பொதுவாக அனைத்து துறைகளிலும் அமையப் பெற்ற ஒன்றாகவே உள்ளது. இதிலிருந்து இதன் முக்கியத்துவம் விளங்குகிறதல்லவா ?

அமைப்பு மற்றும் முறைப் பிரிவிற்கு இயக்குநர் ஒருவர் தலைமை தாங்கி செயல்படுத்தி வருகிறார். இவருக்குத் துணையாக துணை இயக்குநர், உதவி இயக்குநர் போன்றோர் உதவி புரிகின்றனர். இவர் உள்துறை அமைச்சகத்திற்கு கூட்டுச் செயலராகவும் இருக்கக் கூடியவராகும். ஒவ்வொரு துறையிலும் அமைப்பு மற்றும் முறைப் பிரிவுகள் அமைந்துள்ளன. இவற்றிற்கு துணைச் செயலர்கள் பொறுப்பு ஏறறுள்ளனர். அமைப்பு மற்றும் முறை அதிகாரிகளோடு கலந்து பேசி, கருத்துக்களைப் பகிர்ந்து சீரான முடிவிற்கு வருகின்றனர். இந்த முடிவுகள் பின்னர் செயலாக்கப்படுகின்றன. இவர்கள் பல துறைகளுக்கும் சென்று, பார்வையிட்டு, ஆலோசனைகள் வழங்குகின்றனர். பார்வையிடும்போது, துறைகள், வரையறுக்கப்பட்ட விதி முறைகளைப் பின்பற்றுகின்றனவா? என்பதைப் பார்த்து, ஏதேனும் குறைபாடுகள் இருந்தால் அவற்றைக் களையவும், சிறப்பாக செயல்பட சில ஆலோசனைகளையும் கூறுகின்றனர். இவர்கள் கருத்தைத் துறைகள் பொதுவாக ஏற்றுக் கொள்கின்றன. அப்படியில்லையேல் அதற்குரிய காரணங்களைச் சீராக விளக்க வேண்டும். இவ்வாறாக அமைப்பு மற்றும் முறைப்பிரிவு நிர்வாகத் திறமையை வளர்க்க உதவுகிறது.

பாதுகாப்பு தொடர்பான பல பிரிவுகளின் செயல்களில் சம்பந்தப்பட்ட பிரச்சனைகளை ஆராயக் கூடியது பாதுகாப்புப் பிரிவாகும். உதாரணமாக, அமைச்சர்களின் பாதுகாப்புக்களைப் பராமரித்தல், கூட்டங்கள் நடத்த உதவி புரிதல் போன்ற செயலக வேலைகளைச் செய்வது இதன் பணியாகும் இதே மாதிரியாக, பாதுகாப்பு அமைச்சர்களின் குழு, இராணுவ தலைமையாளர்கள் குழு, இராணுவ முக்கிய பணியாளர்குழு, அதிகாரிகளின் குழு, பொருள் வழங்கு முக்கிய அதிகாரிகளின் குழு, கூட்டுத்திட்டக்குழு, கூட்டுப் பயிற்சிச்குழு, கூட்டு நிர்வாகத் திட்டமிடல் குழு, கூட்டுப் புலனாய்வு குழு போன்ற குழுக்களின் கூட்டம் தொடர்பான வேலைகளைச் செய்வதுவும் இப்பிரிவின் முக்கிய கடமைகளாகும்.

பொருளாதாரப் பிரிவானது, பாதுகாப்புப் பிரிவைப் போல் பொருளாதாரம் தொடர்பான செயலக வேலைகளைக் கவனிக்கின்றது. அமைச்சரவையின் பொருளாதார, உற்பத்தி மற்றும் பகிர்வுக்குழு, பொருளாதாரச் செயலர்களின் குழு மற்றும் பிற குழுக்களின் கூட்டங்கள் நடத்த ஏற்பாடு செய்தல், குறிப்பெடுத்தல், பராமரித்தல் போன்ற செயல்களைச் செய்கின்றது.

அமைச்சரவை செயலகத்தின் இணைப்பு அலுவலகமாக மத்திய புள்ளியியல் அமைப்பு உள்ளது. இது 1951–ம் ஆண்டு மே மாதம் ஏற்படுத்தப்பட்டது. இதன் முக்கிய பணிகள் சிலவற்றைக் காண்போம்.

1. வருடாந்திர புள்ளியியல் சுருக்கம் (Annual Statistical Abstract), மாதாந்திர புள்ளியியல், வாராந்திர புள்ளியியல் வெளியீடு, அலுவலகப் புள்ளியியல் வழிகாட்டிகள் (Guide) போன்றவற்றை தயாரித்து வெளியீடு செய்வது.

2. ஐக்கிய நாடுகளின் புள்ளியியல் பிரிவு, பன்னாட்டு பொருளாதார புள்ளியியல் விபரங்கள் குறித்த வேலைகளில் ஈடுபடுவது.

3. மத்திய, மாநில அரசாங்க அமைச்சகங்களை ஆராய்வது, அன்றாட, புள்ளியியல் பணிகளில் ஈடுபட பயிற்சியளிப்பதுவும் ஒன்றாகும்.

4. வளர்கின்ற பொருளாதார நிலையைச் சுட்டிச் காட்டும் வகையில் வரைபடங்கள் மூலம் தெரிவித்தல்.

5. புள்ளியியல் பிரச்சனைகள் குறித்து துறைகளிடைக் கூட்டங்கள் நடத்துதல், புள்ளியியல் விபரம் குறித்து அமைச்சகங்களுக்கு ஆலோசனை கூறல்.

6. அரசாங்கச் செயலாண்மைகள் மற்றும் அமைச்சகங்கள் ஆகியவற்றின் புள்ளியியல் பணிகளை ஒருங்கிணைத்தல்.

7. தேசீய புள்ளியியல் அமைப்புக்களுடன் தொடர்ந்து கவனம் செலுத்தி, மாற்றங்களுக்கேற்ப புதிய அணுகுமுறைகளை கடைப்பிடித்தல்.

8. சீராக, அன்றாட புள்ளிவிபரங்கள் எளிதிலும் விரைவிலும் கிடைக்க சீரான வழிமுறைகளைக் கண்டுபிடிக்க ஆய்வு செய்தல்.

அமைச்சரவையின் புள்ளியியல் ஆலோசனையாளரின் கீழ் இப்பிரிவு செயல்படுகிறது. இவருக்கு பல உதவியாளர்கள் துணைபுரிகின்றனர்.

ராஜஸ்தான் நிர்வாகச் சீர்த்திருத்தக் குழு (1963) பரிந்துரை செய்தது யாதெனில், ஒரு துறைக்குப் பொறுப்பான அமைச்சர் தலைமைச் செயலரை கலந்தாலோசிக்க வேண்டும் என்பதும், நடைமுறையிலிருக்கும் விதிமுறைகளுக்கு மாறுபட்ட புதிய திட்டங்கள் மற்றும் விதிகள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் யாவும் தலைமைச் செயலர் மூலமாகவே நடைபெறவேண்டும் என்பதுமாகும்.

முடிவாகக் கூறினால், தலைமைச் செயலர் பல்வேறு பணிகளைச் செய்து மாநில நிர்வாகத்தில் ஒரு முக்கியமான ஒருங்கிணைவாளராக விளங்குகிறார். இவ்வாறு மாநில நிர்வாகத்தில் தலைமைச் செயலர் பதவி ஒரு முக்கிய பொறுப்பான பதவியாக விளங்குகிறது. எனவே, இந்தப் பதவியை நிரப்புவதில் அதிகக் கவனம் செலுத்துவது அவசியமாகிறது. இப்பதவியின் காலவரம்பு குறுகியதாக இருத்தல் கூடாது என்றும், இப்பதவியில் நியமிக்கப்படுபவர் ஓய்வு பெறுவது வரையிலும் தொடர்ந்து பதவியிலிருக்க வேண்டும் என்றும் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது. மேலும், ஓய்வு பெறும் தலைமைச் செயலரை அவருடைய சேவையை தொடர்ந்து பெறும் நோக்குடன் மேல் சபையில் உறுப்பினராக்குவதற்கு அரசியலமைப்பில் திருத்தம் மூலம் வேண்டிய வழிவகைகளை ஏற்படுத்த வேண்டும் என்றும் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### மாதிரி வினா

அமைச்சரவைச் செயலகத்தின் முக்கிய பணிகள் யாவை?

## பாடம்–7 மத்திய–மாநில உறவுகள்
## (Relation between the Union and the States)

கூட்டாட்சி முறையிலான அரசாங்கத்தை இந்திய அரசியலமைப்பு உருவாகியுள்ளது. மத்திய அரசாங்கத்திற்கும், மாநில அரசாங்கங்கட்கும் இடையே செய்யப்படும் அதிகாரப் பங்கீடு (division of powers) தான் கூட்டாட்சிமுறை அரசாங்கம் கொண்டுள்ள சிறப்புப் பண்புகளிலொன்று. அதிகாரப் பங்கீட்டைப் பொறுத்த மட்டில் இந்திய அரசியலமைப்பு 1935–ம் வருட இந்திய அரசுச் சட்டத்தை முன் மாதிரியாகக் கொண்டுள்ளதை நாம் காணமுடிகிறது. இதற்கேற்பச் சட்டமியற்றும் அதிகாரம் யாவும் மத்திய அரசுப்பட்டியல் மாநில அரசுப் பட்டியல், பொதுப் பட்டியல் என்ற வடிவத்தில் மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கட்கும் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. 97 விஷயங்களைக் கொண்ட மத்திய அரசுப் பட்டடியலில் பாதுகாப்பு, அணுசக்தி, விமானப் போக்குவரத்து, நாணயமடித்தல், போதைப் பொருள், புகைவண்டிப் போக்குவரத்து, தபால் தந்தி போன்றவை காணப்படுகின்றன. மாநில அரசுப் பட்டியலில் 66 விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒழுங்கு, காவல் துறை, சிறைச்சாலைகள், உள்ளாட்சி, வேளாண்மை, சுகாதாரம் போன்றவை இப்பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளன. 47 விஷயங்களை உள்ளடக்கிய பொதுப்பட்டியலில் குற்றவியல் சார்ந்த சட்டம், குற்றவியல் நடவடிக்கை முறை, குடிமுறை நடவடிக்கை முறை, திருமணம், விவாகரத்து, ஒப்பந்தங்கள் போன்ற விஷயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. மேற்கூறிய மூன்று பட்டியல்களிலும் உள்ளடங்காத எஞ்சியுள்ள அதிகாரங்கள் யாவும் மத்திய அரசிற்கு அளிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

மத்திய அரசுப்பட்டியலில் உட்படுத்தப்பட்டுள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் அதிகாரம் மத்திய பாராளுமன்றத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. மாநில அரசுப்பட்டியலில் காணப்படும் விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் முழு உரிமை மாநிலச் சட்டமன்றங்களைச் சாரும். பொதுப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் வலிமை மத்திய அரசிற்கும் மாநில அரசாங்கட்கும் உள்ளது. இதற்கேற்ப மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டமொன்றின் எப்பகுதியேனும் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்திற்கு முரண்பாடாகத் தென்படின் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் மட்டுமே செல்லுபடியாகும் என்று அரசியலமைப்பின் 254–வது விதி கூறுகின்றது.

### சட்டமியற்றல் சம்பந்தப்பட்ட உறவுகள்:

மாநில அரசுப்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் முழு உரிமை மாநிலச் சட்டமன்றங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள போதிலும் பாராளுமன்றமும் இப்பட்டியல் சம்பந்தப்பட்ட சட்டங்களை இயற்றலாம் என்று அரசியலமைப்பின் விதிகளில் சில குறிப்பிடப்பட்டுள்ளன.

முதலாவதாக, பாராளுமன்றம் நாட்டு நலனை கருத்திற்கொண்டு மாநில அரசுப்பட்டியல் சம்பந்தப்பட்ட விஷயங்களில் சட்டமியற்றலாம் என்று 249–வது விதி கூறுகின்றது. மாநில அரசுப்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள ஒரு விஷயம் சம்பந்தப்பட்ட சட்டமொன்றை தேசிய நலன் கருதிய பாராளுமன்றம் இயற்றவேண்டும் என்று பாராளுமன்றத்தின் மேலவை தனது மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரு பகுதியின் ஆதரவுடன் தீர்மானமொன்றை நிறைவேற்றினால் அச்சட்டத்தை இயற்றும் அதிகாரம் பாராளுமன்றத்தைச் சாரும். மேற்கூறிய தீர்மானத்தின் காலவரையறை ஒரு ஆண்டு என்ற போதிலும் அதனை எத்தனை முறை வேண்டுமெனினும் புதுப்பித்துக் கொள்ளலாம்.

இங்ஙனம் இயற்றப்படும் சட்டங்கள் இத்தீர்மானம் காலாவதியாகி ஆறுமாதங்கள் முடிந்தபின் செல்லுபடியாகாது.

இரண்டாவதாக, அரசியலமைப்பின் 250–வது விதிக்கேற்ப அவசர நிலைப் பிரகடனம் செய்யப்படும்பொழுது மாநில அரசுப்பட்டியலில் உள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் கொண்டிருக்கும். இங்ஙனம் பாராளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்கள் அவசரகாலப் பிரகடனம் முடிவுற்று ஆறு மாதங்கள் கழிந்தபின் செல்லுபடியாகாது.

மூன்றாவதாக, மாநில அரசுப்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள விஷயங்களில் ஏதாவது ஒன்று குறித்துப் பாராளுமன்றம் சட்டமியற்ற வேண்டும் என்று இரண்டு அல்லது அதற்கதிகமான மாநிலங்கள் ஒரு தீர்மானமெடுத்தால் அதற்கேற்ப இப்பட்டியல் சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் கொண்டிருக்கும் என்று அரசியலமைப்பின் 252–வது விதி கூறுகின்றது. மாநிலங்களில் ஒப்புதலுடன் அவற்றிற்குச் சட்டமியற்றும் அதிகாரத்தை அரசியலமைப்பு பாராளுமன்றத்திற்கு வழங்கியுள்ளது.

நான்காவதாக, ஏதாவது ஒரு நாட்டுடனோ அல்லது நாடுகளுடனோ இந்தியா செய்து கொண்டுள்ள ஒப்பந்தங்கள், அல்லது உடன்படிக்கைகளைச் செயல் படுத்துவதற்கென நாட்டின் ஏதாவது ஒரு பகுதிக்காகவோ, அல்லது நாடு முழுவதற்குமாகவோ சட்டமியற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் கொண்டுள்ளது என்று 253–வது விதி கூறுகின்றது.

ஐந்தாவதாக, ஒரு மாநிலத்தில் ஆட்சி செயல்பட முடியாத சூழ்நிலை தோன்றினால் அம்மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரமனைத்தையும் பாராளுமன்றத்தின் அதிகாரத்திற்குட்பட்டோ, அல்லது பாராளுமன்றத்தாலோ நிர்வகிக்கப்படலாம் என்று குடியரசுத் தலைவர் பிரகடனப்படுத்தினால் அதற்கேற்ப மாநில அரசுப்பட்டியல் சம்பந்தப்பட்ட சட்டங்களை இயற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் கொண்டிருக்கும் என்று அரசியலமைப்பின் 356–வது விதி கூறுகின்றது.

மேற்கூறியவை மட்டுமின்றி, மத்திய அரசு மாநில அரசுகளின் அதிகாரங்களைத் தள்ளுபடி செய்யக்கூடிய அளவுக்கு அதிகாரம் கொண்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது. எடுத்துக்காட்டாக மத்திய அரசின் சட்டத்தின் வாயிலாக ஒரு மாநிலத்தின் எல்லைகளை மாற்றியமைக்கலாம். ஒரு மாநிலத்தின் எல்லைகளை மாற்றியமைத்து ஒரு புதிய மாநிலத்தைப் பாராளுமன்றம் சட்டத்தின் மூலமாக உருவாக்கலாம். மேலும் மாநிலங்களின் பெயர்கள், எல்லைகள், நிலப்பரப்பு ஆகியவற்றை மாற்றியமைக்கவும் பாராளுமன்றத்திற்கு அதிகாரமுண்டு.

இதுவரை கூறியவற்றின் அடிப்படையில் பார்க்கும் பொழுது மாநில அரசுகளைவிட மத்திய அரசுதான் வலிமை வாய்ந்தது என்பது புலப்படுகின்றது. பெருமளவு அதிகாரத்தைக் கொண்டதாக நமது மத்திய அரசு காணப்படுகின்றது. அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ள மூன்று அதிகாரப் பட்டியல்களிலுமுள்ள எவ்விஷயத்தைக் குறித்தும் சட்டமியற்றும் அதிகாரத்தை மத்திய அரசு கொண்டுள்ளது. இதுமட்டுமின்றி, எஞ்சியுள்ள அதிகாரங்கள் சம்பந்தப்பட்ட சட்டங்களை இயற்றவும் அது அதிகாரமுடையதாகத் திகழ்கின்றது. மாநிலப் பட்டடியலினின்று எல்லா விஷயங்களையும் பொதுப்பட்டியலுக்கு மாற்றி அதனை விரிவாக்க முடியும் என்ற நிலையும் காணப்படுகின்றது. உதாரணமாக, 42–வது அரசியலமைப்புத் திருத்தத்திற்கேற்ப கல்வி, வனம் போன்றவை மாநிலப் பட்டியலினின்று பொதுப்பட்டியலுக்கு மாற்றப்பட்டுள்ளன.

## நிர்வாகம் சம்பந்தப்பட்ட உறவுகள்:

மாநில அரசுகளின் நிர்வாகத்தை மத்திய அரசு கட்டுப்படுத்துவதற்கு உகந்த முறையில் மத்திய அரசிற்கும் மாநில அரசுகட்கும் இடையிலான உறவுகள் இந்தியாவில் உருவாக்கப்பட்டுள்ளன. இரு குறிக்கோள்களுக்கென இவ்வித அமைப்பு காணப்படுகின்றதெனலாம். மத்திய பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகார வரம்பிற்குட்படும் விஷயங்களை மத்திய ஆட்சித்துறையின் சீரான கட்டுப் பாட்டிற்குட்படுத்துவது முதல் குறிக்கோள். மத்திய மாநில நிர்வாக அமைப்புக்களிடையே பூசல்கள் எழும் வாய்ப்புக்களைக் குறைப்பது இரண்டாவது குறிக்கோள்.

மத்திய பாராளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களுக்கு ஒத்துப்போகக் கூடிய முறையிலும், மத்திய அரசின் ஆட்சித்துறை அதிகாரத்திற்கு முரண்பாடு இல்லாத முறையிலும் மாநிலங்கள் தமது அரசின் துறை சம்பந்தப்பட்ட பணியாளர்களை பயன்படுத்த வேண்டும் என்று அரசியலமைப்பு குறிப்பிடுகின்றது.

தேசிய அல்லது ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த போக்குவரத்து சம்பந்தப் பட்டவற்றை உருவாக்குவதிலும், பராமரிப்பதிலும், புகைவண்டிப் போக்குவரத்து நெடுஞ்சாலைகள், கால்வாய் போக்குவரத்து போன்றவற்றிற்குப் பாதுகாப்பு அளிப்பதிலும் மாநில அரசுகள் எங்ஙனம் செயல்பட வேண்டுமென்று மத்திய ஆட்சித் துறை வழிமுறைகள் வழங்கலாம். மேற்கூறிய பணிகளுக்கெனச் செலவிடப்படும் அதிகப்படியான தொகையை மத்திய அரசு மாநில அரசுகட்கு அளிக்கவேண்டும.

உள்நாட்டுக் குழப்பம், அயல்நாட்டுத் தாக்குதல் போன்றவற்றினின்று மாநில அரசுகட்கு மத்திய அரசு பாதுகாப்பு அளிக்கவேண்டும். மேலும், மாநில அரசுகள் அரசியலமைப்பிற்கேற்பச் செயல்படுகின்றனவா என்று கண்காணிப்பதும் மத்திய அரசின் கடமையாகும்.

நதிகள், பள்ளத்தாக்குகள் சம்பந்தமாக எழக்கூடிய வழக்குகளில் தீர்ப்பளிப்பதற்குத் தேவையான சட்டங்களை இயற்றும் அதிகாரத்தை அரசியலமைப்பின் 262–வது விதி பாராளுமன்றத்திற்கு அளிக்கின்றது. மேற்கூறிய வகைப்பட்ட வழக்குகளை உச்சநீதிமன்றம் உட்பட எல்லா நீதிமன்றங்களின் அதிகார வரம்பிற்கும் அப்பாற்பட்டவை ஆக்குவதற்குத் தேவையான சட்டமியற்றும் அதிகாரத்தையும் பாராளுமன்றம் கொண்டுள்ளது.

ஒரு சில மாநிலங்கள் அல்லது எல்லா மாநிலங்களும், அல்லது மத்திய அரசும் ஒன்று அல்லது அதற்கு அதிகப்பட்ட மாநிலங்களும் அக்கறை கொண்டுள்ள விஷயங்கள் அல்லது பிரச்சனைகளை விசாரணை செய்து பரிந்துரை செய்வதற்கென மாநிலங்களுக்கிடையிலான மன்றம் ஒன்றை உருவாக்குவதற்கான அதிகாரத்தை 263–வது விதி குடியரசுத் தலைவருக்கு அளித்துள்ளது.

மேற்கூறியவை நீங்கலாக தேர்தல்கள் யாவற்றையும் மேற்பார்வை செய்து நடத்தும் பொறுப்பு குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படும் தேர்தல் ஆணையத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. எல்லா மாநிலங்களின் வரவு செலவு சம்பந்தப்பட்ட கணக்குகள் இந்திய தணிக்கைத் துறைத் தலைவரது கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவையாகும். மாநிலங்களில் செயல்படும் உயர்நீதிமன்றங்களின் அமைப்பு மத்திய அரசுப்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள விஷயமாகும். மேலும், இந்நீதிமன்றங்களில் பணிபுரியும் நீதிபதிகளை நியமிப்பதும், மாற்றம் செய்வதும், பதவியினின்று நீக்கம் செய்வதும் குடியரசுத்

தலைவராகும். மாநில ஆட்சி அமைப்பில் பணிபுரியும் உயர்மட்ட அதிகாரிகள் யாவரும் அனைத்திந்தியப் பணியைச் சேர்ந்தவராவர்.

## நிதி சம்பந்தப்பட்ட உறவுகள்:

எந்தெந்த வரிகள் விதிக்கப்படலாம் என்று தனியாக எதுவும் நமது அரசியலமைப்பில் குறிப்பிடப்படவில்லை. வரிவிதிக்கும் அதிகாரம் சட்டமியற்றும் அதிகாரத்துடன் இணைந்துள்ளது எனலாம். வரிவிதிக்கத்தக்க விஷயமெதுவும் பொதுப்பட்டியலில் கொடுக்கப்படவில்லை.

மாநிலப்பட்டியல் சம்பந்தப்பட்ட வரிகள் யாவும் மாநிலங்களுக்குச் சொந்தமானவை யாகும். மத்திய அரசால் விதிக்கப்படும் வரிகள் அவ்வாறல்ல மத்திய அரசால் விதிக்கப்படும் வரிகளில் பல மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. முழுமையாகவோ, அல்லது பகிர்ந்தளிக்கப்பட்டோ மாநிலங்களுக்குக் கிடைக்கப்பெறும் நான்கு வகையான மத்திய வரிகள் அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. அவை பின் வருமாறு:

### (அ) மத்திய அரசிற்கு மட்டுமே உரித்தான வரிகள் :

சுங்கவரி, இணைவரி, உடைமை மொத்த மதிப்பீட்டு வரி, வருமானவரியின் மேல் வரி, மருந்துவகைகள், சோப்பு பவுடர், போன்றவை, போதைப் பொருட்கள் ஆகியவை நீங்கலாக இதர பொருட்கள் மீது விதிக்கப்படும் வரி.

### (ஆ) மாநிலங்களுக்கு உரித்தான வரிகள்:

நில வருவாய், வேளாண்மை வருமான வரி, நிலபுலன்கள் மீதான சொத்துரிமை வரி, கனிப்பொருள் உரிமை வரி, அபின், வண்டிகள் வரி, தொழில், வணிகம், வேலை, அலுவல் ஆகியவற்றின் மீது வரி, விற்பனை வரி.

### (இ) மத்திய அரசால் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு மாநிலங்கட்கு அளிக்கப்படும் வரிகள்:

வேளாண்மை நிலம் தவிர இதர சொத்துரிமை சம்பந்தப்பட்ட வரி மரண வரி, பயணிகள், பொருட்கள் போன்றவற்றின் மீது விதிக்கப்படும் வரிகள், இருப்புப்பாதைப் பயணக்கட்டணம், சரக்கு கட்டணம் மீது வரி.

### (ஈ) மத்திய அரசால் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு மத்திய, மாநில அரசுகளுக்கிடையே பகிர்ந்து கொள்ளப்படும் வரிகள்:

வேளாண்மை வருமான வரி தவிர இதர வருமான வரிகள், மையப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள சுங்கவரிகள் (ஒரு சில தவிர)

சில ஆண்டுகட்கு முன்பு வரை மத்திய, மாநில அரசுகட்குப் பெரிதும் பயனுள்ளதும், இந்தியப் பொருளாதாரத்தின் அச்சாணியுமாகத் திகழ்ந்தது நில வருவாயாகும். தற்பொழுது இதன் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. இதற்கான காரணங்கள் அரசியல் சம்பந்தப்பட்டவையேயன்றிப் பொருளாதாரம் சம்பந்தப்பட்டவை அல்ல. மாநிலங்களைப் பொறுத்தமட்டில் மிக முக்கியமான வரியாகத் தற்பொழுது திகழ்வது விற்பனை வரிதான். மக்கள் அன்றாடம் பயன்படுத்தும் பொருட்கள் மீது விதிக்கப்படும் வரி ஒரு குறிப்பிட்ட

அளவிற்கு மேல் விதிக்கப்பட்டால் அவ்வரிப்பளுவைத் தாங்க மக்களால் இயலாது. மாநிலங்களின் வரவினங்கள் திருப்திகரமாக அதிகரிக்க வில்லையெனினும், பொதுநல அரசுப் பொறுப்புக்கள் காரணமாக நிர்வாகம் சம்பந்தப்பட்ட செலவினங்கள் பன்மடங்கு அதிகரித்துள்ளன. மத்திய அரசின் வருவாயைப் பொறுத்தமட்டில ஓரளவு சீரான நிலை காணப்படுகின்றது. வருமான வரி மற்றும் அதன் மீது விதிக்கப்படும் மேல் வரி போன்றவற்றினின்று மத்திய அரசு பெறும் பங்கு குறிப்பிடத்தக்க அளவு உள்ளது.

வரியல்லாத இதர வருவாயைப் பொறுத்தமட்டில் மத்திய அரசிற்கு இருப்புப்பாதை போக்குவரத்து, தபால் தந்தி, ஒலிபரப்பு, அபின், நாணயமடித்தல், மத்திய அரசால் நிர்வகிக்கப்படும் வர்த்தக, மற்றும் தொழில் நிறுவனங்கள் போன்றவற்றினின்று வருவாய் கிடைக்கின்றது.

வனம், நீர்ப்பாசனம், வர்த்தக நிறுவனங்கள், தொழிற்சாலைகள் போன்றவற்றினின்று மாநிலங்கள் வருவாய் பெறுகின்றன.

மத்திய அரசு மாநில அரசுகட்கு உதவித்தொகை அளிப்பதற்கு அரசியலமைப்பு வழி வகுத்துள்ளது. இது சம்பந்தப்பட்ட விதி 275 ஆகும். உதவித்தொகை எந்த அடிப்படையில் வழங்கப்பட வேண்டுமென்பதும், எவ்வளவு வழங்கப்படவேண்டுமென்பதும் மத்திய அரசால் நிர்ணயிக்கப்படுபவையாகும்.

கடன் வாங்குதல் சம்பந்தமாக மாநிலங்கள் கொண்டுள்ள அதிகாரங்கள் அரசியலமைப்பில் வரையறைப்படுத்தப்பட்டுள்ளன. இந்திய எல்லைக்குள் கடன் வாங்கும் அதிகாரத்தை மாநிலங்கள் கொண்டுள்ளன. இந்திய எல்லைக்கு வெளியிலிருந்து அவை கடன் வாங்க முடியாது. புதிதாக கடன் வாங்குவதற்கு முன் மாநிலங்கள் மத்திய அரசின் அனுமதியைப் பெறவேண்டும்.

மத்திய, மாநில அரசுகட்கிடையேயுள்ள நிதி சம்பந்தப்பட்ட உறவுகள் குறித்துக் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்குவதற்கென அவ்வப்பொழுது நிதி ஆணையமொன்றை நியமிப்பதற்கு அரசியலமைப்பு வழி செய்துள்ளது. ஐந்து, அல்லது அதற்குக் குறைவான ஆண்டுகட்கென நிதி ஆணையம் நியமிக்கப்படுகின்றது. இதுவரை 11 நிதி ஆணையங்களை நமது குடியரசுத்தலைவர் நியமித்துள்ளார். பின் வரும் மூன்று விஷயங்கள் குறித்துக் குடியரசுத் தலைவருக்கு பரிந்துரைகள் செய்வது இவ்வாணையத்தின் பொறுப்பாகும். முதலாவதாக, வரியாகக் கிடைக்கப் பெறும் மொத்த வருவாயை மத்திய அரசும், மாநில அரசுகளும் பகிர்ந்து கொள்ளும் முறை. இரண்டாவதாக, மத்திய தொகு நிதியினின்று மாநிலங்களுக்கு உதவி மானியம் அளிப்பதில் கடைப்பிடிக்க வேண்டிய நியதிகள். மூன்றாவதாக, நிதி ஆணையத்தின் பரிசீலனைக்கு அளிக்கப்படும் இதர விஷயங்கள். மேற்கூறியவை சம்பந்தமாக இவ்வாணையம் குடியரசுத் தலைவருக்குப் பரிந்துரையளிக்கலாம்.

மத்திய அரசிற்கும் மாநில அரசுகட்கும் இடையேயுள்ள உறவுகள் சம்பந்தப் பட்டவையாக நிதிஆணையம் மட்டுமின்றி இதர அமைப்புக்களும் உள்ளன. அவற்றிலொன்று திட்ட ஆணையமாகும். திட்ட ஆணையம் தோன்றியதன் பயனாக நிதி ஆணையத்தின் நிலை பாதிக்கப்பட்டுள்ளது எனலாம். ஆனால் இந்திய நிர்வாகத்தில் இவ்வாணையம் கொண்டுள்ள பங்கும், மத்திய, மாநில அரசுகளுடன் இவ்வாணையம் கொண்டுள்ள உறவும் தெளிவாக்கப் படவில்லை. இவ்வாணையத்தின் தெளிவற்ற நிலையும், அதன் அதிகாரப் பரப்பும் அதனை மத்திய மாநில அரசுகட்கான பொருளாதார அமைச்சர் குழுவாக வளரச் செய்துள்ளன எனலாம்.

மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகள் சம்பந்தப்பட்டயாவற்றையும் ஆராய்வதற்கென திரு எம்.சி. செதல்வாட் அவர்களின் தலைமையின் கீழ் ஒரு குழுவை நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் நியமித்தது. இக்குழுவின் அறிக்கை நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்திற்குச் சமர்ப்பிக்கப்பட்டது. இவ்வறிக்கையை அடிப்படையாகக் கொண்டு நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் அதன் அறிக்கையை 1969–ம் ஆண்டு ஜூன் மாதம் 19–ம் தேதி சமர்ப்பித்தது. மத்திய அரசிற்கும், மாநில அரசுகட்கும் இடையே தோன்றியுள்ள பிரச்சினைகள் ஆட்சியையும், நிதி விவகாரங்களையும் சம்பந்தப்பட்டவையேயன்றி அரசியலமைப்பு சம்பந்தப்பட்டவை அல்ல என்று இவ்வாணையம் தனது கருத்தைத் தெரிவித்தது. அரசியலமைப்பில் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்று இவ்வாணையம் பரிந்துரைக்க வில்லை. நிதி, நிர்வாகம் ஆகியவை சம்பந்தமாக மாநிலங்கள் கொண்டுள்ள அதிகாரங்கள் அதிகரிக்கப்படவேண்டும் என்று இவ்வாணையம் பரிந்துரை செய்துள்ளது.

மத்திய, மாநில அரசுகட்கிடையேயான உறவுகள் யாவற்றையும் பரிசீலித்து மாநிலங்களின் சுய ஆட்சி அதிகாரத்தை அதிகரிப்பதற்குத் தேவையான அரசியலமைப்புத் திருத்தங்களை பரிந்துரை செய்வதற்கென திரு. ராஜமன்னார் தலைமையின் கீழ் ஒரு குழுவை தமிழ்நாடு அரசாங்கம் 1969–ம் ஆண்டு செப்டம்பர் 22–ம் தேதி நியமனம் செய்தது. நிர்வாகச் சீர்திருத்த ஆணையம், ராஜமன்னார் குழு ஆகியவற்றின் அறிக்கைகள் எல்லோரது கவனத்தையும் கவர்ந்துள்ளன. நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் அரசியலமைப்புத் திருத்தங்கள் எதையும் பரிந்துரை செய்யவில்லை. ஆனால் ராஜமன்னார் குழு பல அரசியலமைப்புத் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்துள்ளது.

மத்திய, மாநில அரசுகட்கிடையே காணப்படும் சட்டம், ஆட்சி, நிதி போன்றவை சம்பந்தப்பட்ட உறவுகள் குறித்து அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளவற்றை இதுவரை ஆராய்ந்தோம். இவ்வுறவுகள் சம்பந்தப்பட்ட வேறு சில காரணிகளும் உள்ளன.

முதலாவதாக, மத்திய, மாநில ஆட்சிப்பொறுப்பு ஒரே அரசியல் கட்சியிடம் இருக்குமாயின் மத்திய மாநில அரசுகட்கிடையிலான உறவு சுமுகமாக இருக்க வாய்ப்பு அதிகம். கட்சி ஒருமைப்பாடும், அதற்குக்கிட்டும் பலனும்தான் இதற்குக் காரணங்கள். மத்திய மாநில ஆட்சிப் பொறுப்பை வெவ்வேறு அரசியல் கட்சிகள் வகிக்க நேரிடும் பொழுது மாநிலங்களுக்கிடையிலான உறவுகளும் மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகளும் சீர்குலைவதற்கு வாய்ப்பு அதிகம்.

இரண்டாவதாக, அரசாங்கத்தின் பல மட்டங்களின் பணிகளை ஒருமுகப்படுத்துவதற்கென மாநாடுகளைப் பயன்படுத்தும் பழக்கம் அதிகரித்துள்ளது. பொதுவான திட்டங்களை உருவாக்குவதற்கும், வளர்ச்சிக்கான திட்டங்கள் செயல்படுத்தப்படுவதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை ஆராய்வதற்கும் இம்மாநாடுகள் பயன்படுகின்றன. அரசியல் சார்புடையவை, அதிகாரிகள் மட்டத்திலானவை, தொழில் சார்ந்தவை என மூவகையாக இம்மாநாடுகளைப் பிரிக்கலாம். ஆளுநர்கள், அல்லது முதலமைச்சர்கள், அல்லது அமைச்சர்கள் பங்குபெறும் மாநாடுகள் அரசியல் சார்புடையவையாகும். அரசுச் செயலர்கள், அல்லது துணைத் தலைவர்கள் பங்கு பெறும் மாநாடுகள் அதிகாரிகள் மட்டத்திலானவையாகும். துணைவேந்தர்கள் போன்றோர் கலந்து கொள்ளும் மாநாடுகள் தொழில் சம்பந்தப்பட்டவையாகும்.

மூன்றாவதாக, மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகளைப் பொறுத்தமட்டில் மிக முக்கிய பங்கு கொண்டுள்ளவை மண்டல மன்றங்களாகும். (zonal councils). 1956 ஆம் வருட மாநிலத் திருத்தியமைப்புச் சட்டத்திற்கேற்ப உருவாக்கப்பட்டவை இம்மண்டல

மன்றங்கள். மாநில அரசுகட்கும் மத்திய அரசுக்கும் இடையே கூட்டாட்சி தொடர்புகளாகத திகழ்பவை இம்மண்டல மன்றங்கள். மாநிலங்கட்கிடையே மிகப் பரந்த அளவில் ஒத்துழைப்பும், ஒருமைப்பாடும் வளரச்செய்வதற்கென இம்மன்றங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. கோவா, டாமன், டியூ, அந்தமான், நிக்கோபா தீவுகள், மினிகாய், அமின்தீவி தீவுகள் நீங்கலாக இதர மத்திய மன்றங்கள் உள்ளன. மண்டல மன்றங்கள் எல்லாவற்றின் தலைவராகத் திகழ்பவர் மத்திய உள்துறை அமைச்சராகும். ஒரு குறிப்பிட்ட மண்டலத்தில் உட்படும் மாநிலங்களின் முதலமைச்சர்கள் அம் மண்டல மன்றத்தின் உறுப்பினராயிருப்பர். இம்மன்றத்தின் துணைத்தலைவர் பதவியை ஒரு முதலமைச்சர் இரண்டாண்டு காலத்திற்கு வகிப்பார். அதன் பின் மற்றொரு முதலமைச்சருக்கு இப்பதவி கிடைக்கும். கீழ்காணப்படும் வகையிலான ஆலோசகர்களை மண்டல மன்றங்களின் உறுப்பினராக்குவதற்கு வழி கொடுக்கப்பட்டுள்ளது.

(அ) திட்ட ஆணையத்தால் நியமிக்கப்பட்ட ஒருவர்.

(ஆ) ஒரு மண்டலத்தில் உட்படும் மாநிலங்கள் ஒவ்வொன்றின் தலைமைச் செயலர்.

(இ) மாநில வளர்ச்சி ஆணையாளர்.

நான்காவதாக, நதிப்பள்ளத்தாக்குத் திட்டக் கட்டுப்பாடு வாரியங்கள் முக்கியமானவை. பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்திற்கேற்பவும், அதில் பங்கு பெறும் இரு மாநிலங்களான பீகார், வங்காளம் ஆகியவற்றின் ஒப்புதலுடனும் 1950–ஆம் ஆண்டு தாமோதர் பள்ளத்தாக்கு இணையம் உருவாக்கப்பட்டது. இவ்விணையம் ஏராளமான அதிகாரங்களைக் கொண்டுள்ளது. கொள்கை உருவாக்கும் அதிகாரமும், நிர்வாக அதிகாரமும் இவ்விணையத்திற்கு உள்ளன. இந்தியாவில் இத்தகைய நிறுவனம் இது ஒன்றுதான். கட்டுப்பாடு வாரியங்கள் மிகப் பயனுள்ளவை எனத் தெரிய வந்துள்ளது. நதிகள் சம்பந்தப்பட்ட திட்டங்களைக் குறுகிய காலத்தில், திறம்படவும், சிக்கனமாகவும் முடிக்க இவ்வாரியங்கள் பயன் பெறுகின்றன. இத்தகைய வாரியங்கள் மத்திய அல்லது மாநில அரசுகள் நிறைவேற்றும் தீர்மானங்கட்கேற்ப நிறுவப்படுகின்றன. திட்டங்களை மேற்பார்வை செய்யும் பொறுப்பை இவ்வாரியங்கள் நிர்வகிக்கின்றன. கோசிக் கட்டுப்பாடு வாரியம் நாகார்ஜுனசாகர் கட்டுப்பாட்டு வாரியம் போன்ற பதின்மூன்று வாரியங்கள் தற்பொழுது செயல்பட்டு வருகின்றன.

ஐந்தாவதாக, 1965–ஆம் ஆண்டு மத்திய அரசால் நிறுவப்பட்ட வட்டார மின் வாரியங்களும் மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவை நிலை நாட்டுவதில் பெரும் பங்கு வகிக்கின்றன. நமது நாட்டை வடக்கு, கிழக்கு, வடகிழக்கு, மேற்கு, தெற்கு என்ற ஐந்து வட்டாரங்களாகப் பிரித்துள்ளனர். இவ்வட்டாரங்களில் செயல்படும் வட்டார மின் வாரியங்கள் மத்திய மின் நிறுவனத்தின் கீழ் செயல்படுகின்றன. ஒரு வட்டாரத்தில் மின் உற்பத்தி அபிவிருத்தி சம்பந்தப்படடவற்றை இவ்வாரியங்கள் ஆராய்கின்றன. ஒரு வட்டாரத்தில் செயல்படும் மின்சார வினியோக அமைப்புக்களின் பணியை இவ்வாரியங்கள் ஒருமுகப்படுத்துகின்றன. இது மட்டுமின்றி மாநிலங்களிடையே பரிமாறிக் கொள்வதற்கென கிடைக்கப்பெறும் மின்சாரத்தின் அதிகப்படி அளவை இவ்வாரியங்கள் நிர்ணயம் செய்கின்றன.

மத்திய, மாநில அரசுகளிடையே நல்லுறவைப் பேணுவதற்கென பல வழிமுறைகள் அண்மைக் காலத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளன. மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகள் சம்பந்தப்பட்ட பிரச்சனைகள் அகற்றப்பட்டால்தான் வளர்ச்சிப் பணிகட்கென

அரசாங்கங்கள் அதிகக் கவனம் செலுத்தமுடியும். இப்பிரச்சனைகட்குப் பரிகாரம் காண்பதற்கென முயற்சி ஏதும் எடுக்காவிடில் மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகள் பிரச்சனை நிரம்பியவையாகவே தொடரும்.

தமிழக அரசாங்கம் 1969ஆம் ஆண்டு நீதிபதி இராஜமன்னார் தலைமையில் மதத்திய–மாநில உறவுகளை ஆராய ஒரு குழு ஒன்றை அமைத்தது. இது தனது அறிக்கையில் மாநிலங்களிடை மன்றம், ஆளுநர் பதவி நீக்கம் போன்ற பரிந்துரைகளைச் செய்தது.

மத்திய அரசாங்கம் 1983ஆம் ஆண்டு ஜீன் மாதம் செயல்பட்டு வரும் மத்திய–மாநில உறவுகளை ஆராயவும், மேம்படுத்தவும் ஏற்படுத்தப்பட்டது. நீதிபதி சர்க்காரியா தலைவராகவும், மற்றும் இரண்டு உறுப்பினர்கள் கொண்டதாக இந்த ஆணையம் அமைக்கப்பட்டது. மத்திய மாநில உறவுகள் அரசியலமைப்புக் கட்டமைப்பிற்குள் என்னென்ன மாற்றங்கள் செய்து, மத்திய மாநில உறவுகளை மேம்படுத்த முடியும் என்பதைக் கண்டறியவே இது அமைக்கப்பட்டது. இந்த ஆணையத்தின் முதல் பிரச்சனை மாநில ஆளுநர்களாகும். மாநில ஆளுநர்கள் இந்தியக் கூட்டாட்சியில் முக்கியமான இடத்தில் உள்ளனர். மத்திய அரசாங்கத்தை ஆட்சி செய்யும் அரசியல் கட்சிகள் மாநில அரசாங்கத்தை கலைக்க ஆளுநர் பதவியைத் தவறாகப் பயன்படுத்துகின்றனர் என்றும், மாநிலத்தில் குடியரசுத் தலைவர் ஆட்சியைக் கொண்டுவரவும், மாநிலச் சட்டமன்றம் நிறைவேற்றியசட்டமுன் வரைவுகளை உடனடியாக ஏற்காமல், குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்பும் தாமத (Reserve) முறையினால் பல மாநிலங்கள் இயற்றிய சட்டமுன் வரைவுகள் நிறைவேறாமல் உள்ளன என்பது மிகவும் முக்கியமான பிரச்சனை. இரண்டாவதாக திட்டமிடல் பற்றிய பிரச்சனை. மத்திய அரசாங்கம்தான் திட்டம் தயாரிக்கக் கூடிய அதிகாரம் பெற்றதாக, மாநிலங்களுக்கு உரிய கவனம் திட்டமிடலில் தரப்படவில்லை என்பதுதான் அந்தப் பிரச்சனை. மத்திய திட்ட ஆணையம் மத்திய அரசாங்கத்தின் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படுகின்றதே ஒழிய, கூட்டாட்சிக்குரிய மாநிலங்களைக் கலந்தாலோசித்தல் மிகவும் குறைவு எனவும் குறை கூறப்பட்டது. எனவே மத்திய திட்ட ஆணையம் திருத்தி அமைக்கப்பட்டு, மாநிலங்களுக்கு உரிய அதிகாரங்கள் திட்டமிடலில் தர வேண்டுமென கோரிக்கை எழுந்தவண்ணமே உள்ளது. சர்க்காரியா ஆணையம் இதுபற்றி மிகவும் கவனம் செலுத்தியது. மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் அதிகரித்துக் கொண்டே வருவதால், மாநில அரசாங்கங்கள் தங்களது அதிகாரங்களை இழந்து கொண்டே வருவதால், அதிகார மையப்பாடு உருவாகிறது என்றும், இதனைச் சரிசெய்ய வேண்டும் என சர்க்காரியா ஆணையம் உணர்ந்தது.

ஆளுநர் பதவியை ஆளும் அரசியல் கட்சிகளின் உறுப்பினர்களுக்கு வழங்கப்படக் கூடாது. ஆளுங்கட்சியைத் தவிர்த்து, பிற கட்சியினருக்கு வழங்க வேண்டும் என்று பரிந்துரை செய்தது சர்க்காரியா ஆணையம். ஆளுநர் பதவிக் காலம் முடிய, அதாவது வரையறுத்த ஐந்து ஆண்டுகள் பதவியில் இருக்க வேண்டும். அவசியமென உணர்ந்தாலொழிய, அரசியல் மாற்றங்களுக்கேற்ப ஆளுநரை மாற்றக் கூடாது. மத்திய மாநில உறவுகளைச் சுமூகமாக்க மாநிலங்களிடை மன்றம் உருவாக்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது. இந்த மன்றத்தில் மத்திய, மாநிலப் பிரச்சனைகளை விவாதிக்க வேண்டும். திட்டமிடல், வளர்ச்சி ஆகியன பற்றி விவாதிக்கக் கூடாது. நிர்வாகப் பிரச்சனைகளை மட்டுமே விவாதிக்க வேண்டும். அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள பொது வரிசை அதிகாரத்தில் உள்ள அனைத்துப் பிரச்சனைகளையும் முழுமையாக விவாதிக்க வேண்டும். மாநிலங்களுக்கிடையே உள்ள பிரச்சனைகளையும் மத்திய, மாநிலப்

பிரச்சனைகளையும் இங்கு விவாதிப்பதால் பயனுள்ள முடிவுகளை எடுக்க முடியும் என்கிறது சர்க்காரியா ஆணையம். ஏனெனில் தேசியப் பிரச்சனைகள் அனைத்தும் இங்கு விவாதிக்க முடியும். அரசிலயமைப்பின் பிரிவு 263ன்படி, அரசாங்கங்களுக்கிடையே உள்ள மன்றம் (Inter-Governmental Council) என்று பெயரிட்டு இதனை ஏற்படுத்த வேண்டும் என்கிறது இது.

கூட்டாட்சி என்பது மத்திய–மாநில அரசாங்கங்களுக்கிடையே அமைந்துள்ள ஒரு ஒத்துழைப்பு நிறுவனமுறை. இதன் மூலம் இரு அரசாங்கங்களும் ஒன்று சேர்ந்து பணிகளை நிறைவேற்ற வேண்டும். ஏனெனில் அதிகாரப் பரவல் அதிகமாக வழங்கப்பட்டு இருந்தாலும், ஒருங்கிணைந்து மத்திய சட்டங்களையும், தேசியக் கொள்கைகளையும் நிறைவேற்ற வேண்டும் என்பதுதான் அரசிலயமைப்பின் 256 மற்றும் 257 ஆகிய பிரிவுகளில் வழங்கப்பட்டுள்ள வழிகாட்டு அதிகாரம். பின்னர் மாநில அதிகாரத்தை கையில் எடுத்துக்கொள்ளும் அரசியலமைப்புப் பிரிவு 356ஐ பயன்படுத்துவதில் மிகக் கவனம் தேவை. அரசியலமைப்பில் வழங்கப்பட்டுள்ள எல்லா வழிமுறைகளும் பயன்படுத்திய பின்னர், கடைசி ஆயுதமாக பிரிவு 356 இருக்க வேண்டும். மத்திய காவலர்களை (Reserved Police) மாநிலத்தில் பயன்படுத்த, மாநில அரசாங்க ஒப்புதல் தேவை. மாநில அரசாங்க ஒப்புதலின்றி, மத்திய காவலர்களை மாநிலத்திற்கு கொண்டுவரக் கூடாது.

திட்டமிடலில் அதிகாரப் பரவல் தேவையென்பதை சர்க்காரியா ஆணையம் ஏற்றுக் கொண்டது. உள்ளாட்சி அமைப்புக்கள் ஊராட்சி அரசு நிறுவனங்கள் முழுமையாகச் செயல்பட வேண்டும். எனவே நீண்ட நாட்களாக தேர்ந்தெடுக்கப்படாமல் உள்ளாட்சிகள் இருக்கக் கூடாது. முறையாகத் தேர்தல் நடத்தி, உள்ளாட்சி அமைப்புக்கள் முழுவீச்சில் செயல்பட வேண்டும். மக்கள் பங்கேற்பு மக்களாட்சிக்குத் தேவையான ஒன்று. எனவே மத்திய, மாநில அரசாங்கங்கள் செயல்படுத்தும் திட்டங்களில் மக்கள் பங்கு பெற வேண்டும்.

### பயிற்சிக்கான மாதிரி வினா:

சட்டமியற்றுவதில் மத்திய அரசும், மாநில அரசுகளும் கொண்டுள்ள உறவைத் திறனாய்வு செய்க.

## பாடம்–8 நிதி ஆணையம்

இந்திய அரசியலமைப்பில் மத்திய–மாநில நிதி உறவுகளை ஒழுங்குபடுத்தும் வகையில் தன்னிச்சையாகச் செயல்படக்கூடிய, அரசியலமைப்பு ஆணையமாக நிதி ஆணையம் அமைக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. நிதி ஆணையத்தில் தலைவரும் 4 உறுப்பினர்களும் இடம்பெறுகின்றனர். நிதி ஆணையச் சட்டம் 1951ல் தலைவர் மற்றும் உறுப்பினர் ஆகியோர்களின் தகுதிகள் வரையறுக்கப்பட்டுள்ளது. நிதி ஆணையத் தலைவர் பொது வாழ்வில் நல்ல அனுபவம் வாய்ந்தவராக இருக்க வேண்டும் என்று வரையறுக்கப்பட்டுள்ளது. தலைவருக்கு வரையறுக்கப்பட்டுள்ள தகுதி தெளிவாக இல்லை என்று குறை கூறப்படுகின்றது. இதுவரை செயலாற்றிய தலைவர்கள் பெரும்பாலும் ஆளுங்கட்சி தரப்பில் வந்தவர்களாக, திறமைசாலிகளாக இருந்தனரெனினும், குறிப்பிட்ட பிரிவுகளில் தனி அறிவிற்கு உரிய பின்னணியும், திறமையும் கொண்டவர்களெனக் கூறமுடியவில்லை. தற்போது தலைவராக உள்ள இரங்கராஜன், ரிசர்வ் வங்கியின் தலைவராக இருந்தவர் ஆவார்.

உறுப்பினர்களுக்குத் தெளிவான தகுதிகள் விளக்கப்பட்டுள்ளது.

1. உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்குரிய தகுதிகள் இருக்க வேண்டும்.
2. அரசாங்கக் கணக்குமுறை, நிதி ஆகியன பற்றி தெளிவாகத் தெரிந்தவராக இருக்க வேண்டும்.
3. பொருளாதார, அறிவு நிரம்பப் பெற்றவராக இருக்க வேண்டும்.

குடியரசுத் தலைவர் அரசியலமைப்பின் 280வது பிரிவின்படி நிதி ஆணையத்தை ஒவ்வொரு ஐந்து ஆண்டிற்கொருமுறை நியமிக்கிறார். இதன் தலைவரையும் 4 உறுப்பினர்களையும் ஐந்தாண்டு காலத்திற்கு நியமனம் செய்கிறார். அரசாங்கம் நிதி ஆணையம் என்ன செய்ய வேண்டுமென்ற குறிக்கோள்களையும் ஆணையம் அமைக்கும் போது வெளியிடுகின்றது. இவ்வாறு ஆணையம் அமைக்கப்பட்டவுடன், நிதி ஆணையம் மாநில அரசாங்கங்களுக்கு தங்களுடைய வரவு செலவு மதிப்பீடுகள் வரக்கூடிய ஐந்தாண்டுகளுக்கு எவ்வளவு தேவையென்பதைச் சமர்ப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளும். பின்னர் அவற்றை நன்கு பரிசீலனை செய்யும். பரிசீலனை செய்யுங்கால் ஏற்படும் சந்தேகங்களை மாநில அதிகாரிகளிடம் கேட்டுத் தெளிவு பெறும். மேலும் தேவை யில்லாத செலவினங்களைத் தள்ளுபடியும் செய்யும். பின்னர் நிதி ஆணையம் எல்லா மாநிலங்களுக்கும் சென்று, அவர்களது நிதி உதவி எவ்வளவு தேவை என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளும். மாநிலங்களுக்கு நிதி ஆணையம் வரும் சமயங்களில் தனிநபர்கள், அமைப்புக்கள் நிதி ஆணையத்திடம் மாநிலத்திற்கு எவ்வளவு நிதிஉதவி தேவையென்பதை வலியுறுத்துவர். பொதுவாக அனைத்துக் கோரிக்கைகள், தேவைகள் போன்றவற்றை ஆணையம் பெற்று பின்னர் பரிசீலிக்கும். இந்த பரிசீலனை டில்லியில் நடைபெறும். அதன் பின்னர் அறிக்கை குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்கப்படும். குடியரசுத் தலைவர் அமைச்சரவைக்கு நடவடிக்கை எடுக்க அறிக்கையை அனுப்பி வைப்பார். நிதி ஆணையம் என்பது அரசியலமைப்பில் கூறப்பட்ட ஒரு பாதி நீதித்துறை அமைப்பு எனலாம். இந்திய குடியரசுத் தலைவர் ஒவ்வொரு ஐந்தாண்டுக்கும் அல்லது அதற்கு முன்னும் இந்த ஆணையத்தை நியமிக்கிறார்.

## பணிகள்

குடியரசுத் தலைவருக்கு கீழ்கண்டவற்றில் பரிந்துரை செய்வது நிதி ஆணையத்தின் பணிகளாகும்.

1. மத்திய மாநில அரசுகளுக்கிடையே வருமானப் பகிர்வுகள் மற்றும் வரிகள் மூலம் பிரிக்க வேண்டிய வருமானம்.
2. மத்திய அரசினால் மாநில அரசுகளுக்கு பணிகளுக்கான உதவித்தொகை வழங்குவதற்கான விதிகள் சம்பந்தப்பட்டவை.
3. மத்திய, மாநில அரசுகளுக்கிடையேயான ஒப்பந்தங்களைத் தொடர்வது அல்லது மாற்றங்கள் ஏற்படுவது.
4. இதன் பார்வைக்கு அனுப்பப்படும் இதர விஷயங்கள்.

## நிதி ஆணையங்களின் குறிப்பிடத்தக்க ஆலோசனைகள்

அரசியலமைப்பின் மூலம் இது வரை பதினொன்று நிதி ஆணையங்கள் செயலாற்றியிருக்கின்றன.

(1) தீர்வை வரி, சொத்து வரி, வருமான வரி ஆகியவற்றின் வருமானப் பகிர்வு (2) மாநிலங்களுக்கு பணி உதவித்தொகை குறித்த விதிகள் போன்ற முக்கிய பணிகள் கவனிப்பது எல்லா நிதி ஆணையங்களின் பணியென்றாலும், சில குறிப்பிடத்தக்க பணிகளையும் இவை புரிகின்றன.

முதல் நிதி ஆணையம் (நியோகி – 1952–57)வழங்கிய ஆலோசனைகளில் சணல் பொருள்களின் ஏற்றுமதி வரி மற்றும் 'ஆ' பிரிவு மாநிலங்கள் சம்பந்தமான ஒப்பந்தங்கள் ஆகியவற்றிற்கு மாற்றாக வழங்கும் பணிகள் உதவித்தொகை போன்றவை அடங்கும்.

இரண்டாவது நிதி ஆணையம் (ஓ. சந்தானம் – 1957–62) மாநிலங்களின் கடன்கள் மற்றும் மாநிலங்களின் புகையிலை, துணி, சீனி ஆகியவற்றின் விற்பனை வரிக்குப் பதிலாக 1957–ல் அமல்படுத்தப்பட்ட கூடுதல் தீர்வை வரிகள் குறித்த விதிகள் பற்றிய ஆலோசனைகள் வழங்கியது.

இரண்டாவது ஆணையம் அளித்த ஆலோசனைகளைப் போன்றே மூன்றாவது நிதி ஆணையமும் (ஏ.கே.சந்தா – 1962–66) அளித்தது.

உற்பத்தி மற்றும் நுகர்தல் சம்பந்தமான தீர்வை மற்றும் விற்பனை வரிகளைப் பற்றிய பரிசீலனைகளை மேற்கொண்டதன் மூலம் நான்காவது நிதி ஆணையம் (ராஜமன்னார் – 1966–69) புதிய சகாப்தத்தை உருவாக்கியது.

ஐந்தாவது நிதி ஆணையம் (மஹாவீர் தியாகி 1969–74) மேலும் ஒரு சாதனை புரிந்தது. மாநிலங்களின் அதிகப்பற்று பற்றிய விஷயத்தை ஆராய்ந்து அதற்குத் தீர்வுகாணும் வழி முறைகளைக் கூறும் பணியைப் புரிந்தது.

ஆறாவது நிதி ஆணையம்(பிரம்மானந்தரெட்டி – 1973) மாநிலங்களின் கடன் நிலைகளையும், திட்டம் அல்லாத மூலதனத் தேவைகளையும், மைய அரசின் மாநிலங்களுக்கான கடன் முறைகளை ஒழுங்குப்படுத்தவும், தேசிய நிதிக்கு மைய, மாநில அரசின் நிதி ஒதுக்கீடு பற்றியும் ஆராயும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது.

ஏழாவது நிதி ஆணையம் (செலத் – 1979–84) மாநிலங்களில் ஏற்படும் இயற்கை இன்னல்களுக்காகச் செலவிடும் நிவாரண நிதியை மாநிலங்கள் எவ்வாறு பயன்படுத்துகிறது என்பதையும், வீணான செலவுகள் நடைபெறுகிறதா என்பதையும் கவனிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது.

எட்டாவது நிதி ஆணையம் (சவான் – 1984–89), மாநிலங்களின் நிதி நிலமையை உயர்த்துவதற்காக வரிகளை உயர்த்துவது பற்றி ஆராயும்படி பணிக்கப்பட்டது.

ஒன்பதாவது நிதி ஆணையம் (சால்வே 1989–95) மாநில, மைய அரசின் வரவு–செலவு பற்றிய சீரான அணுகுமுறையை மேற்கொள்ளுமபடிக் கேட்டுக் கொள்ளப்பட்டது. மைய, மாநில அரசுகளின் வருமானக் கணக்கில், மூலதன முதலீட்டிற்கு உதவும் வகையில் உபரிகள் இருக்கிறதா என்பதையும் ஆராயும்படி இவ்வாணையம் கேட்டுக் கொள்ளப்பட்டது. மைய, மாநில அரசுகளின் வருமானக் கணக்கில், மூலதன முதலீட்டிற்கு உதவும் வகையில் உபரிகள் இருக்கிறா என்பதையும் ஆராயும்படி இவ்வாணையம் கேட்டுக் கொள்ளப்பட்டது. திட்ட மற்றும் திட்டத்தில் சேராத வரவு, செலவு பற்றி ஆராயும் அதிகாரத்தையும் இது பெற்றிருந்தது. முதல் மூன்று ஆணையங்களும் ஒரே மாதிரியான பணியைப் புரிந்தாலும், நான்கு முதல் எட்டாவது ஆணையங்கள் வரை திட்டத்தின் கீழ் வராத கணக்குகளை மட்டுமே தன் பணிக்கு எடுத்துக் கொண்டது.

பத்தாவது நிதி ஆணையத் தலைவர் K.C. பந்த்.

பதினொன்றாவது நிதி ஆணையத் தலைவர் A.M. குஷ்ரு.

மேற்கூறிய நிதி ஆணையம் மேற்கொண்ட பணிகளைக் கவனித்தால் கீழ்க்கண்ட உண்மைகள் புலனாகும்.

முதலில், ஒவ்வொரு நிதி ஆணையத்துக்கும் இட்ட பணிகள் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வந்துள்ளன.

இரண்டாவதாக, ஆலோசனைக்காகப் பணிக்கப்பட்ட பணிகள் அதிகரித்தபோது, குறிப்பிட்ட பணியை மேற்கொள்ளச் சொல்லும் பழக்கம் நிரந்தரமாகி விட்டது.

கடைசியாக, நிதி ஆணையம் பார்வைக்கு அனுப்பப்படும் பணிகளில் பெரும் பாலானவை மைய அரசுக்கு மாநிலங்கள் கொடுக்க வேண்டிய கடன் பற்றியவையாகும்.

## நிதி ஆணையங்களின் பரிந்துரைகள்

நிதி ஆணையங்களின் பரிந்துரைகளை மூன்று விதமாகப் பிரிக்கலாம். 1) வரி–பகிர்வு, 2) பணித்துறை உதவித்தொகை மற்றும் 3) மாநிலங்களுக்கான மைய அரசின் கடன்கள்.

### 1. வரி – பகிர்வு

மைய, மாநிலங்களின் வரிப் பகிர்வு கீழ்க்கண்ட அடிப்படைகள் மூலம் அமைகிறது.

அ) ஒரு மாநிலத்தின் மக்கள் தொகையும், தேவையும் பொறுத்து,

ஆ) தேசீயக் கருவூலத்துக்கு மாநிலங்கள் கொடுக்கும் நிதி மற்றும் பொது நிதியிலிருந்தும் மாநிலங்கள் பெறும் பங்கைப் பொறுத்தது.

இ) உரிமை மாற்றத்தின் போது மாநிலங்களின் பின்தங்கிய நிலையைக் கருத்தில் கொண்டு அதற்கேற்ப முன்னுரிமை வழங்குதல்.

இந்தியாவில் வரிப் பகிர்வுக்குப் பல கோட்பாடுகள் பின்பற்றப்படுகின்றன. வருமான வரியின் பங்கைப் பகிர்வதற்கு மக்கள் தொகையும், வரி வசூல் தொகையும் கணக்கிடப்படுகின்றது. தீர்வை வரியின் பங்கைப் பகிர்வதற்கு மக்கள் தொகையும், பின் தங்கிய நிலையும் கணக்கிடப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட பணிக்கான மானியத்தைப் பகிர்வதற்கு ரயில்வே பயணிகள் மீதான வரிகள், ரயில்வே மூலம் வரும் வருமானம், ரயில்வே பரப்பளவு ஆகியவை கணக்கிடப்படுகிறது.

## வருமானவரியின் பகுதியும்—பகிர்வும்

வருமானவரி மைய அரசினால் விதிக்கப்பட்டு வசூலிக்கப்படுகின்றது. ஆனால் அதன் வருமானம் மாநிலங்களுக்கிடையே பகிர்ந்து கொள்ளப்படுகிறது. இது குறித்து நிதி ஆணையங்கள் இரண்டு பரிந்துரைகளை அளிக்கும்படிக் கேட்டுக் கொள்ளப்பட்டது.

1) வருமான வரியில் மாநிலங்களின் பங்கு எவ்வளவு இருக்க வேண்டும்?

2) மாநிலங்களுக்கு எந்த அடிப்படையில் அதைப் பிரித்துக் கொடுக்க வேண்டும்.

மாநிலங்களின் வருமானவரிப் பங்கு அதிகரித்துக் கொண்டே வருகிறது. முதல் நிதி ஆணையம், மொத்த வருமானவரி வருமானத்தில் 55 மாநிலங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று பரிந்துரைத்தது. அதற்குப் பின் வந்த மற்ற ஆணையங்கள் இந்தப் பங்கை முறையே 60, 66 2/3, 75, 80, 85 என பரிந்துரைத்தது.

மேற்கூறிய இரண்டாவது பரிந்துரைக்கு மக்கள் தொகையை அடிப்படையாகக் கொள்ள தீர்மானிக்கப்பட்டது. இது தனிநபர் வருமானம், முன்னேற்றம் அல்லது பின்னேற்றம் ஆகியவற்றையும் கருத்தில் எடுத்துக் கொண்டது. முதல் ஆணையம் 80% மக்கள் தொகையாகவும், 20% வரி வசூலுக்காகவும் கணக்கிட்டது. இரண்டாவது ஆணையம் இதை மக்கள் தொகைக்கு 90 சதவிகிதமாக அதிகரித்தது. பிறகு மக்கள் தொகைக்கான பங்கை 80 சதவிகிதமாக மூன்றாவது, நான்காவது ஆணையங்கள் மாற்றின. பின்னால் ஐந்தாவது, ஆறாவது மற்றும் ஏழாவது ஆணையங்கள் இதை மீண்டும் 90 சதவிகிதமாக அறிவித்தன, எட்டாவது நிதி ஆணையம் புதிய முறையை அறிவித்தது. வருமானவரிப் பங்கை 90 சதவிகிதமாக மாநிலங்கள் பெற மக்கள் தொகை, தனிநபர் வருமானம் மற்றும் வளர்ச்சி அல்லது வளர்ச்சியின்மை ஆகியவற்றை அளவு கோலாகப் பின்பற்ற பரிந்துரைத்தது.இந்த முறை பகிர்வுக்கான விகிதங்களாக 25 சதவிகிதம் மக்கள் தொகைக்கும், 25 சதவிகிதம் குறைந்த தனிநபர் வருமானத்தின் மொத்த மக்கள் தொகை பெருக்கமாகவும் இருக்க வேண்டுமென அறிவித்தது. மீதமுள்ள 10 சதவிகிதத்தை மாநிலங்கள் மீதான மதிப்பீட்டின் அடிப்படையில் அமையவேண்டும் என்றும் பரிந்துரைத்தது. பகிர்ந்து கொள்ள வேண்டிய வருமானவரிப் பங்கை கீழ்க்கண்டவாறு மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென பரிந்துரைத்தது.

1) 10 சதவிகிதம் – மாநிலங்களால் கொடுக்கப்படும் 1985–86 முதல் 1987–88 ஆண்டு வரையிலான வருமான வரித்தொகை.

2) 45 சதவிகிதம் – அந்த மாநிலத்தின் அதிகமான தனிநபர் வருமானத்தை அந்த மாநிலத்தின் 1971ம் ஆண்டின் மக்கள் தொகையினால் பெருக்கத்தினால் வரும் தொகையின் அடிப்படையில்.

3) 22.5 சதவிகிதம் அந்த மாநிலத்தின் 1971ம் ஆண்டின் மக்கள் தொகையின் அடிப்படையில்.

4) 11.25 சதவிகிதம் ஆணையத்தினால் பின்தங்கிய நிலையின் அடிப்படையில் அறிவிக்கப்படும் குறியீடு. இந்தக் குறியீடு இரண்டு அடிப்படைகளைக் கொண்டது.

   1) தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் மக்கள் தொகை

   2) விவசாயத் தொழிலாளிகளின் மக்கள் தொகை.

5) 11.25 சதவிகிதம் குறைந்த தனிநபர் வருமானத்தை 1971ம் ஆண்டு மக்கள் தொகையைக் கொண்டு பெருக்கினால் வரும் தொகையின் அடிப்படையில்.

மைய அரசின் தீர்வை வரியின் பகிர்வு

மைய அரசு தீர்வை வரியை விதிக்கவும், வசூலிக்கவும் அதிகாரமுடையது. ஆனால் இந்த வருமானத்தைப் பகிர்ந்து கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. இருந்த போதிலும், இதை மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கிறது. நிதி ஆணையங்கள் கீழ்க்கண்டவற்றிற்குப் பரிந்துரைக்கும்படிக்கேட்டுக் கொள்ளப்படும்.

1) மொத்த நிதியில் மாநிலங்களின் பங்கு.

2) மாநிலங்களுக்குப் பிரித்துக் கொடுக்கும் முறைகள்.

முதல் நிதி ஆணையம் மாநிலங்களின் பங்கை 40 சதவிகிதமாக அறிவித்தது. ஆனால் இது இரண்டாவது ஆணையத்தால் 25 சதவிகிதமாகவும், மூன்றாவது ஆணையத்தால் 20 சதவிகிதமாகவும் குறைக்கப்பட்டது. பிறகு நான்காவது, ஐந்தாவது மற்றும் ஆறாவது ஆணையங்களால் எந்த மாற்றமும் அறிவிக்கப்படவில்லை. ஏழாவது ஆணையம் இதை 40 சதவிகிதமாக மாற்றியது. எட்டாவது ஆணையம் இதை 45 சதவிகிதமாக உயர்த்தியது. ஒன்பதாவது ஆணையமும் அதே நிலையை மேற்கொண்டது.

மேலே கூறப்பட்ட இரண்டாவது பரிந்துரைக்கு 1) மக்கள் தொகையும் 2) பின் தங்கிய நிலையும் குறியீடாகக் கொள்ளப்பட்டது. முதல் நிதிஆணையம் பின் தங்கிய நிலைக்கு முக்கியத்துவம் (60%) கொடுத்தது. ஆனால் மற்ற நிதி ஆணையங்கள் மக்கள் தொகைக்கு முக்கியத்துவத்தை 20 சதவிகிதமாக இரண்டாவது ஆணையமும், 80 சதவிகிதமாக மூன்றாவது, நான்காவது மற்றும் ஐந்தாவது ஆணையங்களும், 75 சதவிகிதமாக ஆறாவது ஆணையமும் அறிவித்தன. ஏழாவது ஆணையம் புதிய முறையை 4 காரணிகளின் அடிப்படையில் மேற்கொண்டது.

1) மக்கள்தொகை 2) மாநிலத்தின் தனி நபர் வருமானத்தின் உயர்வு 3) ஏழைகளின் சதவிகிதம் மற்றும் 4) சமபங்கீட்டை வகைசெய்யும் முறை எட்டாவது ஆணையம் 90 சதவிகித வருமான வரிப் பங்கீட்டுக்கான முறைகளையே இதற்கும் அறிவித்தது. மீதமுள்ள 10 சதவிகிதத்தை பற்றாக்குறையுள்ள மாநிலங்களுக்கு அளிக்க பரிந்துரைத்தது. பணிகளுக்கான உதவித் தொகை வழங்குவதற்குப் பதிலாக பற்றாக்குறையின் அடிப்படையில் மாற்றங்களை ஏற்படுத்த இது பரிந்துரைத்தது, ஒன்பதாவது ஆணையம் மொத்த தீர்வை வரி வருமானத்தை கீழ்க்கண்டவாறு பிரிக்க பரிந்துரைத்தது.

அ) 25 சதவிகிதம் ஒரு மாநிலத்தின் 1971ம் ஆண்டு மக்கள் தொகையின் அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டும்.

ஆ) 12.5 சதவிகிதம் "மொத்த மக்கள் தொகைக்கு சரி செய்யப்படும் வருமானம்" என்ற கோட்பாட்டின் அடிப்படையில் பிரிக்கப்பட வேண்டும்.

மொத்த மக்கள் தொகைக்கு சரிசெய்யப்படும் வருமானத்தைக் கணக்கிடுவதற்கு 1982–83 முடிய உள்ள மூன்றாண்டு புதிய தொடரின்படியான சராசரி தனி மனித வருமானத்தின் அடிப்படையோடு 1971 வருடத்திய மாநிலங்களின் மக்கள் தொகையோடு கணக்கிட வேண்டும். ஒரு மாநிலத்தின் பங்கானது, அந்த மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்கு சரிசெய்யப்படும் வருமானம், எல்லா மாநிலங்களின் மொத்த மக்கள் தொகைக்கு சரிசெய்யப்படும் வருமானத்திற்கு உண்டான சதவீதத்தைக் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது.

இ) 12.5 சதவீதம், மாநிலங்களின் பின்தங்கிய நிலைகளைப் பொறுத்து விநியோகிக்கப்படுகிறது.

ஈ) 33.5 சதவீதம், ஒரு மாநிலம் 1982–83 முதல் 1984–85 முடிய உள்ள தனது மூன்றாண்டு புதிய தொடரின் படியான சராசரி தனிமனித வருமானத்திற்கும், இந்தியாவிலேயே அதிக தனிமனித வருமானம் உள்ள பஞ்சாப் மாநிலத்திற்கு உள்ள "இடைவெளி"யை (வித்தியாசம்) அந்த மாநிலத்தின் 1971 வருட மக்கள் தொகையுடன் பெருக்கி வரும் தொகைக்கு ஏற்ப விநியோகம் செய்யப்படுகிறது.

உ) மீதியுள்ள 16.5 சதவீதம், பற்றாக்குறை மாநிலங்களுக்கு, அவைகளின் எல்லாவிதமான வரிகளின் படிமுறை வருகை உரிமை மாறலின் பங்குகளைப் பொறுத்து விநியோகிக்கப்படுகிறது. ஒவ்வொரு மாநிலத்தின் பற்றாக்குறை, ஆணையம் கணக்கிடும் ஒவ்வொரு மாநிலத்தின் பற்றாக்குறையால் எத்தனை பங்கோ, அதைப் பொறுத்து விநியோகம் நடைபெறும்.

## சொத்துவரி

விவசாய நிலங்கள் அல்லாத சொத்துக்களின் மீதான சொத்துவரி, மத்திய அரசால் விதிக்கப்பட்டு, வசூல் செய்யப்படுகிறது. இதில் உண்டான தொகை அதிக அளவில் இல்லை, ஆரம்பகாலத்தில், சொத்துவரி மூலம் கிடைக்கும் தொகை மாநிலங்களுக்கே வழங்கப்பட்டு வந்தது. இவ்வாறு கிடைக்கும் நிகர தொகையில் ஒரு சதவீதம் யூனியன் பிரதேசங்களுக்கும், மீதியுள்ள தொகையை மாநிலங்கள் அனைத்தும் பகிர்ந்து கொள்ள வேண்டுமென இரண்டாவது நிதி ஆணையம் பரிந்துரை செய்தது. மூன்றாவது நிதி ஆணையம் இதில் மாற்றம் எதுவும் செய்யவில்லை. நான்காவது நிதி ஆணையம், யூனியன் பிரதேசங்களின் பங்கை 2 சதவீதமாக உயர்த்தியது. ஐந்தாவது நிதி ஆணையம் இதில் மாற்றம் எதுவும் செய்யவில்லை. ஆறாவது ஆணையம் இதனை 2.5 சதவீதமாக உயர்த்தியது. ஒரு மாநிலத்தில் உள்ள விவசாய நிலங்கள் அல்லாத சொத்துக்களின் மொத்த சொத்து மதிப்பை பொறுத்தே, சொத்துவரியில் இருந்த கிடைக்கும் நிகர தொகை பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும் என்று, ஏழாவது மற்றும் எட்டாவது மற்றும் பிற நிதி ஆணையங்கள் பரிந்துரை செய்தன.

## 2. மானிய உதவி

வருவாய்க் கணக்கில் மானிய உதவிகள், மாநிலங்களுக்கு மத்திய அரசால் வழங்கப்படுகின்றன. நிதி ஆணையங்களின் மூலம் ஒருமுகமாக மாற்றி கொடுக்கப் படுவதற்கு வரவுசெலவுத் திட்ட இடைவெளி நிதி தேவை முதலானவை கொள்கைகளாக விளங்குகின்றன. மானிய உதவிக்கான கொள்கைகளை வகுக்குமாறு, அடுத்தடுத்து வந்த நிதி ஆணையம் கேட்டுக் கொள்ளப்பட்டன. முதலாவது நிதி ஆணையம் வகுத்த கொள்கைகளை அடுத்துவந்த ஆணையங்கள் பொதுவாக பின்பற்றின. அவை வருமாறு:

1. மானிய உதவியின் நோக்கமானது, வரி படிமுறை வருகை உரிமை மாறலினால் அதிக வருமானம் கிடைக்காத மாநிலங்களுக்கு தேவையான வழிமுறைகளை பரிந்துரை செய்வதாகும்.
2. மாநிலங்களில் சமுதாயப் பணிகளின் அளவை சமன்படுத்துவது ஒரு முக்கிய நோக்கமாகும்.
3. நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு செயல்படுத்தப்படும் பொழுது செயல்களுக்கு, மாநிலங்களுக்கு உதவி செய்வதாகும்.
4. வரி முயற்சிகள், செலவுகளில் சிக்கனம் முதலானவை, ஒரு மாநிலத்திற்கு, மானிய உதவி வழங்குவதற்கு தேவையானவைகளாக கருதப்பட வேண்டும்.

சுருக்கமாக சொன்னால், மாநிலங்களின் மக்கள் தொகையால் பிரதிபலிக்கப்படும் பொதுவான தேவைகளே, வரிப்பகிர்வில் முக்கிய பங்கு வகிக்கிறது என்று நிதி ஆணையங்கள் தீர்மானித்தன. தனிப்பட்ட தேவைகள் மற்றும் பகுதிகள் மற்றும் பின்தங்கிய நிலைமையின் சமன் செய்தல் ஆகியவற்றை மானிய உதவியின் மூலமாக சரிசெய்ய வேண்டும் என்றும் அவை முடிவுசெய்தன.

முதலாவது நிதிஆணையம், மொத்த மானியத் தொகையான ரூபாய் 446.67 கோடியை, 14 மாநிலங்களுக்கு பகிர்ந்தளிக்க வேண்டும் என்று பரிந்துரை செய்தது. இரண்டாவது ஆணையம், 208.30 கோடி ரூபாய்களை 11 மாநிலங்களுக்கு பகிர்ந்தளிக்க, பரிந்துரை செய்தது. மூன்றாவது ஆணையம், அந்தத் தொகையை 244 கோடி ரூபாய் என்றும், 11 மாநிலங்களுக்கு பகிர்ந்தளிக்க வேண்டும் என்று கூறியது. ஐந்தாவது நிதி ஆணையம் 14 மாநிலங்களுக்கு 710.99 கோடி ரூபாய் விநியோகிக்கப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. ஏழாவது ஆணையம் அதிக, வரி படிமுறை வருகை உரிமை மாறல் மாநிலங்களுக்கு இருக்க வேண்டும் என்று பரிந்தரை செய்தது. எல்லா மாநிலங்கள் அல்லது குறைந்த செல்வ வளமுடைய அநேக மாநிலங்கள் வருவாய்க் கணக்கில் மிகுதியைக் கொண்டிருக்க வேண்டும் என்பதும் அதன் முடிவாகும். சிறிய மானிய உதவியாக 1610 கோடி ரூபாயை – 1173 கோடி ரூபாய் 8 பற்றாக்குறை மாநிலங்களுக்கும், 437 கோடி ரூபாய் 17 மாநிலங்களுக்கு அவைகளின் நிர்வாக நிலைமையை மேம்படுத்தவும், பரிந்துரை செய்தது.

எட்டாவது நிதி ஆணையம் பழைய நிலையிலிருந்து விலகி நின்றது. அது, பற்றாக்குறைகளை, மானிய உதவியுடன் மட்டும் இணைக்காமல் தீர்வைவரி படிமுறை வருகை உரிமை மாறலை பற்றாக்குறையுடன் இணைத்தது. எட்டாவது ஆணையம் பற்றாக்குறையிலிருந்து மேம்பட, மானிய உதவியை, வருடத்திற்கு ஐந்த சதவீத வளர்ச்சி விகிதமாக அதிகரிக்க வேண்டும் என்று முடிவு செய்தது. அதிகப்படியான பஞ்சப்படி பொறுப்புக்கள் மற்றும் வருட உயர்வுகளை கருத்தில் கொண்டு, பற்றாக்குறை மாநிலங்கள்,

1955–83 கோடி ரூபாய் மானிய உதவியாக 1985–89 வருட காலங்களில் பெறுவதற்கு தகுதி வாய்ந்தவைகளாக ஆக்கப்பட்டன. (இந்தக் காலகட்டத்தில்தான் எட்டாவது ஆணையத்தின் பரிந்துரைகள் நடைமுறைப்படுத்தப்பட்டன). ஒன்பதாவது நிதி ஆணையம், தனது முதலாவது அறிக்கையில், மிக அதிக அளவு மத்திய அரசாங்க மானிய உதவியாக 4400 கோடி ரூபாயை 1989–90ம் வருடத்திற்கு பரிந்துரை செய்தது. 10வது நிதி ஆணையம் 20,300 கோடி ரூபாயும் 11வது நிதி ஆணையம் 58,587 கோடி ரூபாயையும் மானிய உதவியாக ஒதுக்கியுள்ளது.

## 3. மாநிலங்களுக்கு மத்திய அரசின் கடனுதவி

கடன்கள், நிதி ஆணையங்களின் பொருள் மாற்றங்கள் என்ற பொருளில் வராத போதிலும், மத்திய அரசாங்கம், மாநிலங்கள் வளர்ந்து வரும் கடன் சுமையைக் குறைப்பதற்கு நிதி ஆணையங்களின் ஆலோசனையைக் கேட்டறிந்தது. இரண்டாவது நிதி ஆணையத்தின் ஆலோசனையைக் கேட்டபோது, அது, வட்டிச்சுமையை வருடத்திற்கு மாநிலத்திற்கு 5 கோடி ரூபாயில் குறைக்க வேண்டுமென்றால், கடன்களை ஒன்றுபடுத்தி, வட்டி வீதங்களை சீரமைக்க வேண்டும் என்று பரிந்துரை செய்தது. கடன் அடைப்பது சம்பந்தமாக மாநிலங்களுக்கு மத்திய அரசின் உதவி பற்றி நான்காவது நிதி ஆணையத்திடம் கேட்கப்பட்டது. வட்டி விதிப்புகள் மற்றும் கடன் கழிவு நிதியிலிருந்து கடனை அடைப்பது ஆகியவை வருவாய் செலவினங்களாக, மானிய உதவி கணக்கிடுவதற்கு எடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்று அது பரிந்துரை செய்தது. மாநில அரசாங்கங்களின் இந்திய மத்திய வங்கியின் மேல் உள்ள அங்கீகாரமற்ற அதிகப்பற்று பிரச்சனையை பரிசீலிக்குமாறும், அதனை எவ்வாறு குறைக்க வேண்டும் என்றும், ஐந்தாவது நிதி ஆணையத்திடம் கேட்கப்பட்டது. இதற்கு, ஐந்தாவது நிதி ஆணையம் வரிப்பகிர்வை அடிக்கடி வெளியிடல், கடன்களை ஒன்று படுத்துவதன் மூலம் கடனடைப்பதும் மத்திய அரசாங்க நிதி மாநிலங்களுக்கு சென்றடைவதை ஒன்றாக்குவதும், கடன்களை வெளியிடும் நேரம், குறிப்பிட்ட காலகட்டத்தில் இந்திய மத்திய அரசாங்க நிதி மாநிலங்களுக்கு சென்றடைவதை ஒன்றாக்குவதும், கடன்களை வெளியிடும் நேரம், குறிப்பிட்ட காலகட்டத்தில் இந்திய மத்திய வங்கி வரையறுத்த எல்லைகளை மீண்டும் மதிப்புரை கூறுதல் திட்டத்தின் அளவை மாற்றுதல் ஆகியவற்றை பரிந்துரை செய்தது. மாநிலங்களின் திட்டமிடப்படாத முதலீட்டு இடைவெளி, மாநிலங்களின் கடன் நிலையை மதிப்புரை செய்வது, கடனடைப்பதில் மாறுதல்கள் ஆகியவற்றைப் பறறி, ஆறாவது நிதி ஆணையத்திடம் கேட்கப்பட்டது. 19 மாநிலங்களில் மொத்தமாக 1978–79 வரை 1994 கோடி ரூபாய் இடைவெளி இருக்கும் என்று ஆறாவது நிதி ஆணையம் மதிப்பீடு செய்தது. குறிப்பிட்ட கடன்களை ஒழுங்கான பிரிவுகளில் ஒன்று சேர்த்தல், கடன் திருப்பிக் கொடுக்கும் காலத்தை அதிகரித்தல், கடன் அடைப்பதில் தற்காலிக ஒத்திவைப்பு மற்றும் சில கடன்களை ரத்து செய்தல் முதலானவற்றை அது பரிந்துரை செய்தது. மொத்தகடன் நிவாரணமாக 1970 கோடி ரூபாயை ஆறாவது நிதி ஆணையம் பரிந்துரை செய்தது. ஏழாவது நிதி ஆணையம், மாநிலங்கள் மத்திய அரசுக்கு பட்ட கடன்களை மறு குழுக்களாக மாற்றவும், 2156 கோடி ரூபாயை 1979–84 வருட காலங்களுக்கு கடன் நிவாரணமாகவும் பரிந்துரை செய்தது. எட்டாவது நிதி ஆணையம் அதிகப்பற்று கடன்கள் மற்றும் சிறுசேமிப்பு கடன்கள் திரும்பச் செலுத்துவதையும், தவிர்த்த திட்டமிடப்படாத முதலீட்டு இடைவெளியை, கடன் நிவாரண நோக்கத்திற்காக கணக்கிட்டது. அந்த ஐந்து வருடங்களுக்கு 2285.39 கோடி ரூபாயை நிவாரணமாக அது மதிப்பீடு செய்தது. 31–3–1989 அன்று மாநிலங்களின் கடன் நிலையை மறு மதிப்பீடு செய்யுமாறும் அதை சரிசெய்வதற்கு உண்டான முறைகளை பரிந்துரை செய்யுமாறும்

ஒன்பதாவது நிதி ஆணையத்திடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. 1984 – 89 வருட காலத்தில் மாநிலங்களுக்கு வழங்கப்பட்ட ஐந்து வருட கடன்களையும், 31–2–1990 அன்று நிலுவையாக இருக்கும் கடன்களையும் ஒன்று சேர்த்து, 15 வருடங்களுக்கு எல்லா மாநிலங்களுக்கும் மறு அட்டவணைப்படுத்துமாறும் ஒன்பதாவது ஆணையம் பரிந்துரை செய்தது. அது மொத்த கடன் நிவாரணமாக 975–62 கோடி ரூபாயை பரிந்துரை செய்தது. 10வது, 11வது நிதி ஆணையம் மாநிலங்களுக்கு கடன் நிவாரண நிதியை அதிகரித்துள்ளது.

## மத்திய அரசிலிருந்து மாநிலங்களுக்கு பொருள் உரிமை மாற்றல்

மத்திய அரசு மாநிலங்களுக்கு மூன்று வழிகளில் நிதியுதவி அளிக்கிறது. அவை யாவன:

அ) நிதி ஆணையங்களின் பரிந்துரைகளின் மூலம் – சட்ட ரீதியான மாற்றல்

ஆ) ஒரு சட்டத்திற்குட்படாத, திட்ட ஆணையத்தின் மூலமாக

திட்ட வாயிலான உதவியை பகிர்ந்தளிக்கும் போது, திட்ட ஆணையத்தின் காட்கில்லின் மாறுதல் செய்த வழியின் மூலம் கீழ்க்கண்டவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்கிறது.

1) 60 சதவிகித மக்கள் தொகை

2) 10 சதவீத வரிவிதிப்பு முயற்சிகள்

3) தனிமனித வருமானம் நாட்டு மட்டத்திற்கு 20 சதவிகிதம் கீழே

4) 10 சதவீத தனிப்பட்ட பிரச்சனைகள்

இ) மத்திய அமைச்சரவைகளின் வாயிலாக, குறிப்பாக நிதி அமைச்சரவை வாயிலாக

## பொதுவான நிலை

கடந்த 55 ஆண்டுகளாக, (முதலாவது ஐந்தாண்டு திட்டத்திலிருந்து ஏழாவது திட்டம் வரை) மொத்தமாக 1,49,000 கோடி ரூபாய், மத்திய அரசிலிருந்து மாநிலங்களுக்கு வழங்கப்பட்டது. அதில் 45.2 சதவீதம், அதாவது 67,348 கோடி ரூபாய் நிதி ஆணையத்தின் மூலமாக மாற்றி கொடுக்கப்பட்டது. எட்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் 1,06,500 கோடி ரூபாய் மாற்றப்பட முடிவு செய்யப்பட்டுள்ளது. இவ்வாறாக, 40 ஆண்டுகளில் பொருள் மாற்றம் (மத்தியிலிருந்து மாநிலங்களுக்கு) நடைபெற்ற நிலை, கீழ்க்கண்ட முடிவுகளை நாம் அறிந்து கொள்ள உதவி செய்கிறது.

அ) முதல் மூன்று ஐந்தாண்டு திட்டங்களில் (1951–66 வருட காலத்தில்), மத்திய அரசிலிருந்து மாநிலங்களுக்கு பொருள் மாற்றம் நடைபெற திட்ட ஆணையமே முக்கிய அங்கம் வகித்தது. கிட்டத்தட்ட, மொத்த பொருள் மாற்றத்தில் 50 சதவீதம் திட்ட ஆணையத்தின் மூலம் நடைபெற்றது. மூன்றாவது நிதி ஆணையத்தின் பார்வையில், நிதி ஆணையமானது படிமுறை வருகை உரிமைமாறல் அளவு மற்றும் மானிய உதவியை கண்டுபிடிக்க அது, மாநிலங்களின் வருவாய் செலவினங்களின் எதிர்பார்ப்புகள் மற்றும் திட்ட ஆணையத்தின் பரிந்துரையின் பேரில் ஏற்றுக் கொள்ளப்படும் வருவாய் மூலகத்தை, ஒரு ஏஜெண்டாக மட்டுமே மறுமதிப்பீடு செய்ய முடியும் என்று தெரிவித்தது. அதனுடைய பங்கு சுருங்கும்போது, நிதி ஆணையமானது, பல வழிமுறைகளை பின்பற்றி திட்ட

ஆணையத்தின் மூலம் முடிவு செய்யப்பட்டு பல கணக்குகளில் வேலை மட்டும் செய்ய வேண்டியதாகிறது என்று கருத்துரைத்தது. திட்ட ஆணையத்தின் வாயிலாக பொருள் மாற்றம் செய்வது, இந்தக் கால கட்டத்திற்கு பிறகு குறைந்தது.

ஆ) ஆரம்ப காலத்தில், நிதி ஆணையங்களின் வாயிலாக மாற்றம் செய்யப்படும் நிதியுதவியின் பங்கு குறைவாக இருந்தபோதிலும் (33.12 சதவீதமாக 1951–56ல் இருந்தது 25 சதவீதமாக 1966–69ல் குறைந்தது), பின்னால் அது படிப்படியாக அதிகரித்தது.

இ) ஆனால், கடந்த 55 ஆண்டுகளில் திட்ட ஆணையம் மற்றும் நிதி ஆணையங்களின் வாயிலாக மாற்றி செலுத்தப்படும் பொருளுதவியின் பங்கு குறைந்து, வேறு வழிகளில் அதன் பங்கு அதிகரிக்கிறது. இது, மாநிலங்கள், மத்திய அரசினை அதிக அளவு சார்ந்திருப்பதையே உணர்த்துவதாகும்.

ஈ) கிடைத்த அடிப்படை விவரத்தை நன்றாக பகுப்புமுறை செய்தபோது, மத்தியிலிருந்து மாநிலங்களுக்கு பொருள் மாற்றம் செய்தது முழுமையாக பார்க்கும் போது அதிகரித்திருந்தாலும் (ரூபாய் மதிப்பில்), மத்திய வருவாயில் அதனது விகிதமானது முதலாவது திட்டத்தில் 43 சதவீதத்திலிருந்து, ஐந்தாவது திட்டத்தில் 31 சதவீதமாகவும் 1986–87ல் 32 சதவீதமாகவும் குறைந்திருக்கிறது. அதாவது, மத்தியில் வசூலிக்கப்படும் அதிக பங்கு வருவாய், அதற்கே உபயோகிக்கப்படுகிறது. ஆனாலும் கடந்த நான்கு ஆண்டுகளில் (1987–91 வருடங்களில்) இந்தப்பங்கு 40 சதவீதத்திற்கு அதிகரித்திருக்கிறது.

உ) மத்திய அரசிலிருந்து மாநிலங்களுக்கு நிதிஆணையங்களின் மூலம் மாற்றம் செய்யப்பட்டு உதவி இரு வடிவங்களில் – வரி பகிர்வு மற்றும் மானிய உதவி – நடைபெறுகிறது. மொத்த பொருள் மாற்றங்களில் வரி பகிர்வின் பங்கு குறைந்த அளவே உள்ளது. மானியத்தின் பங்கு மொத்த பொருள் மாற்றத்தில் (அதாவது நிதிக்குழுவின் வாயிலாக நடைபெறும்) படிப்படியாக அதிகரித்துக் கொண்டு இருக்கிறது. இந்த நிலை, மாநிலங்கள் பல செயல்கள் புரிவதற்கு மத்திய அரசை சார்ந்து நிற்க வேண்டிய நிலைமையையே உணர்த்துகின்றது.

ஊ) முக்கிய பகிர்வு வரிகளானவை 1. வருமானவரி 2. மத்திய தீர்வை வரி. இந்திய அரசியலமைப்பு சட்டத்தின்படி வருமானவரியினால் கிடைக்கும் தொகையானது, மத்திய மாநில அரசுகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். மத்திய தீர்வை வரி பகிர்ந்தளிக்கப்படலாம். வருமானவரி பகிர்வு கட்டாயமாக்கப்படுகிறது. மத்திய தீர்வை வரி பகிர்வு உத்தரவின் பேரில் நடைபெறுகிறது. மத்திய தீர்வை வரியின் முக்கியத்துவம் கடந்த சில காலகட்டங்களில் பெருகியிருக்கிறது. அந்த அளவுக்கு வருமானவரியின் பங்கு குறைந்திருக்கிறது. அதாவது, கட்டாயமாக்கப்பட்ட பங்கு குறைந்து, அனுமதியின் பேரில் வழங்கப்படும் வரிப் பகிர்வு அதிகரித்திருக்கிறது.

சுருக்கமாக சொல்லப்போனால் மத்திய அசின் விருப்பப்படி கிடைக்கும் நிதியை சார்ந்து மாநிலங்கள் இயங்கும் தன்மை அதிகரித்திருக்கின்றது.

## ஒன்பதாவது நிதி ஆணையம்

ஒன்பதாவது நிதி ஆணையம் N.K.P. சால்வே அவர்களின் தலைமையின் கீழ் ஆரம்பிக்கப்பட்டது. மத்திய மாநிலங்களுக்கிடையேயும், மாநிலங்களுக்கிடையில் மட்டும் பகிர்ந்தளிக்கப்படும் வருமானவரி, (கார்ப்பரேசன் வரி அல்லாது), மத்திய தீர்வைவரி பற்றியும், மானிய உதவியின் போது கடைப்பிடிக்க வேண்டிய, அரசியலமைப்பு சட்டப்பிரிவு

275 (1)ன் தேவைக்கு ஏற்ற, விதிமுறைகளைப் பற்றிய பரிந்துரை செய்யவும், இந்த நிதி ஆணையம் கேட்டுக் கொள்ளப்பட்டது. இதற்கு முந்தைய நிதி ஆணையங்கள், எடுத்துக்கொண்ட விசயங்களிலிருந்து சில மாறுதல்களைக் கொண்டதாக இந்த நிதி ஆணையம் அமைந்திருந்தது. ஒவ்வொரு மாநிலத்தின் தனிப்பட்ட பிரச்சனையையும், மத்திய அரசின் தனிப்பட்ட தேவையையும் கருத்தில் கொண்டு, மத்திய மற்றும் மாநில வருவாய்க் கணக்கின் வரவு செலவுகளைக் கணக்கிடும் போது, முறையான வழிமுறையை பின்பற்ற வேண்டும் என்று ஆணையம் கேட்டுக் கொள்ளப்பட்டது. மத்திய மற்றும் மாநில வருவாய்க் கணக்குகளில் மூலதன முதலீட்டுக்காக அதிகமாக உற்பத்தி செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது. மேலும், மாநிலங்களுக்கிடையே, விற்பனைவரி, துணி, சர்க்கரை, புகையிலை போன்றவற்றின் மீதான வரி மற்றும் ரயில் பிரயாணக் கட்டணவரி ஒழிக்கப்பட்டபின் மாநிலங்களுக்கு கிடைத்த மானிய உதவி ஆகியவற்றிற்கு பதிலாக, அதிகப்படியான தீர்வை வரிகளின் நிகர தொகையினை பகிர்ந்தளிக்கும் போது கடைப்பிடிக்க வேண்டிய விதிகளில் மாறுதல்கள் ஏதாவது செய்ய வேண்டுமென்றால் பரிந்துரைக்கவும் கேட்டுக் கொள்ளப்பட்டது மேலும், மாநிலங்களின் கடன்நிலைமையையும், நிவாரண செலவுகளுக்கு நிதியுதவி பற்றியும் மற்றும் ஏற்பாடுகளை மறு பரிசீலனை செய்வது சம்பந்தமாகவும், ஆணையம் கேட்டுக் கொள்ளப்பட்டது.

ஒன்பதாவது நிதி ஆணையம் இரண்டு அறிக்கைகள் – ஒன்று 1989–90க்கான ஒரு வருடத்தியது; மற்றது 1990–95க்கான ஐந்து வருடத்துக்கானதாகும். (எட்டாவது ஐந்தாண்டு திட்ட காலகட்டம்) சமர்ப்பிக்க கேட்டுக் கொள்ளப்பட்டது. நிதிஆணையம், முதலாவது அறிக்கையை, தன்னுடைய பரிந்துரைகளோடு சமர்ப்பித்து, அவைகள் 1989–90ல் நடைமுறையில் இருந்தன.

இரண்டாவதும், இறுதியுமான அறிக்கை (1990–95க்கானது) இந்திய குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்கப்பட்டது. நீதிபதி A.S. குரேஷீ அதில் உள்ள பரிந்துரைகளில் சிலவற்றின் மேல் ஆட்சேபனை எழுப்பியதால், ஒட்டுமொத்தமாக அது அங்கீகரிக்கப் படவில்லை. அவருடைய கண்டனப் பகுதி அறிக்கையிலேயே காணப்படுகிறது.

## பரிந்துரைகள்

ஒன்பதாவது நிதி ஆணையம், எட்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 1,06,000 கோடி ரூபாய் மாநிலங்களுக்கு மாற்றம் செய்யப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. இது, எட்டாவது நிதி ஆணையம், ஏழாவது திட்டத்தில் மாற்றம் செய்த 45000 கோடி ரூபாயைக் காட்டிலும் இரண்டு மடங்குக்கு மேல் அதிகம்.

இவ்வாணையம், 85 சதவீதம் வருமானவரியும் 45 சதவீதம் மத்திய தீர்வை வரியும் பகிர்ந்தளிக்க வேண்டும் என்ற பழைய முறையினையே தக்க வைத்துக் கொண்டது. வரியினால் கிடைத்த தொகை அதிகரித்தபடியால், மத்திய அரசு வசூல் செய்யும் வரித்தொகையில் மாநிலங்களின் பங்கில் மாறுதல் இல்லையென்றாலும், எட்டாவது திட்டத்தின் மொத்த விநியோகமான ரூ.1,06,500 அதிகம் என்றே எதிர்பார்க்கப்படுகிறது.

அடிப்படை அளவுகோள்களான தனிமனித வருமானம், மக்கள் தொகை முதலானவற்றை விட்டுவிட்டு, நிதி ஆணையம் மத்திய சேர்க்கைக்கு படிமுறை வருகை உரிமை மாறலை, ஒவ்வொரு மாநிலத்தின் இயல்பான தேவைகளோடு இணைத்தது, மிகுதியான மற்றுப் பற்றாக்குறை மாநிலங்களுக்கிடையே உள்ள வித்தியாசங்களை இது நீக்குவதாக அமைந்திருந்தது.

ஒன்பதாவது நிதிஆணையம் அதிக பொருள் சேகரிப்பதற்கும், நிதி ஒழுங்கு முறைக்கும் மற்றும் செலவினத்தை வருவாய் அதிகரிப்பு தீர்மானங்களோடு இணைப்பு செய்யும் முறைக்கும், பல ஊக்குவிப்பு வழிகளை பரிந்துரை செய்தது. மேலும், மத்திய, மாநில வரவு செலவுத் திட்டங்களில் அதிகரிக்கும் பற்றாக்குறையினை கணிசமாகக் குறைக்க வேண்டிய தேவையினையும் வலியுறுத்தியது.

விற்பனை வரிக்குப் பதிலாக, மேலும் ஒரு தீர்வைவரி விதிப்பு நடைமுறைக்கு சாத்தியமானதா என்பதைப் பற்றியும், ஒன்பதாவது ஆணையம் ஆராய்ந்து மாநிலங்களுக்கு விற்பனை வரியினால் ஏற்படும் இழப்பை சரிக்கட்ட, தீர்வை வரியின் ஒரு பகுதியினை அவற்றிற்கு வழங்குவதற்கு ஒரு வழிமுறையை அது கண்டுபிடித்தது.

மத்திய, மாநில அரசுகளின் வருவாய் கணக்கில் வரவு செலவுகளை சமன்படுத்த மட்டுமல்லாமல், இதன் அறிக்கையானது மூலதன முதலீட்டுக்கு மிகுதியை உருவாக்க வேண்டிய தொடர் முறைகளை பரிந்துரை செய்தது.

இவ்வாணையம் இயற்கையின் பேரழிவுகளினால் ஏற்படும், நிவாரண செலவுக்காக தேசிய காப்பு நிதி ஏற்படுத்தப்பட வேண்டும் என்றும் பரிந்துரை செய்தது.

குறிப்பிட்ட நோக்க மானியங்களை இவ்வாணையம் ஆதரிக்கவில்லை முன்னேற்றத்திற்கான மானியங்களுக்காக இது தன்னுடைய ஆதரவை நல்கியது.

நீதிபதி குரேஷீ தன்னுடைய கண்டனக் குறிப்பில், ஒவ்வொரு ஐந்தாண்டு களுக்கொரு முறை குடியரசுத் தலைவர் நியமிக்கும் நிதி ஆணையத்திற்கு பதிலாக, ஒரு நிலையான நிதிஆணையம் அமைக்க அவர் வேண்டுகோள் விடுத்தார். அதன் தலைவர், நீதித்துறையிலிருந்து நியமிக்க வேண்டும் என்றும் அவர் கூறினார். மேலும், திட்டமானியங்கள் அரசியலமைப்பு சட்டம் பிரிவு 275ன் கீழ் (பிரிவு 282ல் குறிப்பிட்டபடி மொத்த மானியங்களாக இல்லாமல்), நிதி ஆணையத்தால் வழங்கப்படவேண்டும் என்றும் அந்த கண்டனக் குறிப்பில் கேட்டுக் கொள்ளப்பட்டது.

## பத்தாவது நிதி ஆணையம்

பத்தாவது நிதி ஆணையம் 1992–ஆம் ஆண்டு K.C. பந்த் தலைமையில் நியமிக்கப்பட்டது. வருவாய்ப் பங்கீடுகள் 1971–ஆம் ஆண்டு மக்கள் தொகை அடிப்படையாக வைத்து பிரிக்கப்படவேண்டுமென்று கூறியது. ஏனெனில் மக்கள் தொகை குறைப்பு நடவடிக்கையில் இறங்கிய மாநிலங்கள் 1991–ஆம் ஆண்டைக் கணக்கிலெடுத்தால் பாதிக்கப்படுமென தேசிய வளர்ச்சி மன்றம் சுட்டிக் காட்டியிருந்தது. வருமான வரியைப் பகிர்ந்தளிப்பதில் வித்தியாசமான அணுகுமுறையை இது மேற்கொண்டுள்ளது 1971–ஆம் ஆண்டு மக்கள் தொகை அடிப்படையில் 20 சதவிகிதமும், தனிநபர் வருமானத்தை அடிப்படையாக வைத்து 60 சதவிகிதமும், 5 சதவிகிதம் எல்லையை வைத்தும், 5 சதவிகிதம் இருக்கக்கூடிய வளர்ச்சி நிலை (infrastructure) வைத்தும், 10 சதவிகிதம் வரி வசூலிப்பு (tax effort) வைத்தும் பிரிக்கப்பட வேண்டுமென பரிந்துரை செய்துள்ளது. கலால் வரியைப் பகிர்ந்தளிப்பதில் 47.5 சதவிகிதம் மாநிலங்களுக்கு வழங்கப்படவேண்டுமெனக் கூறியுள்ளது. இதில் 40 சதவிகிதப் பகிர்வு வருமான வரியைப் பகிர்ந்து அளிக்கும் முறையைப் போலவும் 7.5 சதவிகிதம் பற்றாக்குறை மாநிலங்களுக்கும் வழங்கப்படவேண்டுமெனவும் கூறியுள்ளது. கூடுதல் கலால் வரியைப் பொறுத்தவரை ஒன்பதாவது நிதி ஆணைய பரிந்துரையை அப்படியே ஏற்றுக் கொண்டது.

பத்தாவது நிதி ஆணையம் மானியத்தொகை வழங்குவதில் காவல், தீயணைப்பு, சிறைச்சாலை, ஆவணக்காப்பகங்கள், கருவூலங்கள் மற்றும் கணக்குவைப்பு ஆகிய மாவட்ட நிர்வாகத்திற்கும், பெண்கள் கல்வி, ஆரம்பக் கல்விக்கு கூடுதல் வசதிகளையும், குடிநீர் வசதிக்குமாக ரூ.1360 கோடி ஒதுக்கியது. தவிர வருவாய்க் கணக்கின் பற்றாக்குறையைச் சரிக்கட்ட ரூ.7,580 கோடிகளும், துயர் துடைப்பு பணிக்காக ரூ.4,730 கோடிகளும், ஊராட்சி மற்றும் நகராட்சிகளுக்கு ரூ.5,380 கோடிகளையும் ஒதுக்கியுள்ளது. ஆகவே 1995–2000 ஆண்டுகளுக்கு மானியத் தொகையாக ரூ.20,300 கோடிகளை மொத்தமாக ஒதுக்கியுள்ளது. பத்தாவது நிதி ஆணையம் தவிர, மாநிலங்களுக்கு அவற்றின் நிதிச் செயல்பாட்டிற்கேற்ப பொதுக் கடன் நிவாரண (relief) உதவி எல்லா மாநிலங்களுக்கும் வழங்கப்பட வேண்டுமெனக் கூறியுள்ளது. ஒரிஸ்ஸா, பீகார் மற்றும் உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களுக்கு ரூ.166 கோடி மத்திய கடன் தள்ளுபடி செய்யப்பட்டது. பஞ்சாப் தீவிரவாதத்தை ஒடுக்க சிறப்புக்கடன் வசதி செய்யவும், சிறப்பு நிவாரணங்களாக மாநிலங்களுக்கு வழங்கவும் ரூ.700 கோடி 1995–2000 ஆண்டுகளுக்கு ஒதுக்க பரிந்துரை செய்தது பத்தாவது நிதி ஆணையம்.

## பதினொன்றாவது நிதி ஆணையம்

11வது நிதி ஆணையம் ஜீலை 1, 1998ல் அமைக்கப்பட்டது. இந்தியாவின் பொதுநிதியைச் சீரமைத்து, பொருளாதார நிலைத்தன்மை கொண்டுவர மத்திய–மாநில அரசாங்கங்கள் கூட்டாகச் செயல்பட வழிமுறைகளைக் காண்பது என்பது ஒரு முக்கியமான செயல் (reference) ஆகும். தவிர, மத்திய–மாநில நிதிப்பகிர்வுகள், மாநில நிதி உதவி (grants in aid) வழங்கல், மாநில நிதி ஆணையங்களின் பரிந்துரைகளுக்கிணங்க உள்ளாட்சி அமைப்புகளுக்கு துணை (supplements) நிதி வழங்கல் ஆகிய முக்கியமான பணிகள் ஒப்படைக்கப்பட்டன. இந்த 11வது நிதி ஆணையத்தின் ஆய்வு பரந்த அளவில் இந்தியப் பொருளதார நிலைத்தன்மை மற்றும் உள்ளாட்சி அமைப்புகளுக்கு நிதி வழங்கல் ஆகியன பிற நிதி ஆணையங்களிலிருந்து வித்தியாசப்படக் கூடியதாக அமைந்துள்ளது. இந்த நிதி ஆணையத்திற்கு பேராசிரியர் A.M. Khurso தலைவராக நியமிக்கப்பட்டார். இதன் அறிக்கை ஜீலை 2000த்தில் தாக்கல் செய்யப்பட்டது. இந்த ஆணையத்தின் முக்கிய பரிந்துரைகளாவன.

1. மொத்த வருமானத்தில் 37.5 விழுக்காடு நிதி மாநிலங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.
2. மக்கள் தொகை அடிப்படையில் நிதி ஒதுக்கீடு 20 விழுக்காட்டிலிருந்து 10 விழுக்காடாகக் குறைத்தது.
3. கட்டுமான மற்றும் பகுதிவாரி வளர்ச்சிக்கு முக்கியத்துவம் வழங்கி 5 விழுக்காட்டிலிருந்து 7.5 விழுக்காடாக நிதி ஒதுக்கீட்டை அதிகரித்தது.
4. வளர்ச்சி குறைவான மாநிலங்களுக்கு, வறுமையை நீக்கும் வழிமுறையாக வளர்ந்த மாநிலங்களைக் காட்டிலும் அதிக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டது.
5. உள்ளாட்சிகளுக்கு ரூ.2000 கோடிகள் மானியத் தொகை வழங்க பரிந்துரைத்தது. இதில் ஊராட்சிகளுக்கு 1600 கோடிகளும் நகராட்சிகளுக்கு 400 கோடிகளும் வழங்க வழிவகை செய்தது. எனவே 2000–2005 வரை ஐந்தாண்டுகளுக்கு மொத்தம் 10,000 கோடி ரூபாய் வழங்க நிதி ஆணையம் பரிந்துரை செய்தது.

11வது நிதி ஆணையம் அமைக்கப்பட்ட சமயம் இந்தியப் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்ட நிலையில் இருந்ததால், பொருளாதார நிலைத்தன்மைக்கு முக்கியவத்துவம் கொடுத்தது. இது மேலும் வளர்ச்சி குறைந்த மாநிலங்கள் வளர அதிக நிதி ஒதுக்கீடு செய்தது இந்த ஆணையம். வளர்ச்சி அடைந்த மாநிலங்கள் வளர்ச்சி அடைந்ததற்காக நிதி ஒதுக்கீடு குறைக்கப்பட்டது சரியானதல்ல என்ற குற்றச்சாட்டு மட்டுமல்ல, மறுபரிசீலனை செய்யவும் வைத்தன. நியாய நோக்கம் 'equity' என்ற அடிப்படையில் இதன் செயல்பாடு, பரிந்துரைகள் ஆகியன எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

தற்போது 12வது நிதி ஆணையம் திரு. ரங்கராஜன் தலைமையில் செயல்பட்டு வருகின்றது.

மாதிரி வினா :

நிதி ஆணையத்தின் அமைப்பு மற்றும் அதன் பணிகளை விவரி.

## பாடம்–9 அரசுப் பணிகள்

இந்திய அரசுப்பணி, அகில இந்தியப் பணிகள், மத்திய பணிகள், மாநிலப் பணிகளென மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றைப் பற்றிக் காண்போம்.

அகில இந்தியப் பணிகள் மத்திய மாநில அரசாங்கங்களுக்குப் பொதுவான பணியாகும். மாநில அரசாங்கத்திற்கெனத் தனிப்பணிகளும், மத்திய அரசாங்கத்தைப் பொறுத்து மத்திய பணிகள் என இருப்பதோடு, கூடுதலாக இருக்கக் கூடியவை இந்த அகில இந்தியப் பணிகள் இந்தியக் கூட்டாட்சியைச் கட்டிக்காக்கும் பணியென்பது மிகையல்ல.

அகில இந்தியப் பணிகள் 1915 ஆம் ஆண்டுச் சட்ட்த்தின்படி, இரண்டு பணிகள் அமைக்க வழி செய்யப்பட்டுள்ளது. அவை

1. இந்திய நிர்வாகப் பணி
2. இந்தியக் காவல் பணி

பின்னர் 1963 ஆம் ஆண்டு சட்டத்திருத்தத்தின்படி மேலும் மூன்று பணிகள் உருவாக்கப்பட்டன. அவை

1. அகில இந்தியப் பொறியாளர் பணி
2. அகில இந்திய வனப்பணி
3. அகில இந்திய மருத்துவ, சுகாதாரப்பணி ஆகியனவாகும்.

அகில இந்திய நிர்வாகப்பணி பணியாளர்குழாம் பயிற்சித் துறையின் கட்டுப்பாட்டிலும், உள்துறை அமைப்பின் கட்டுப்பாட்டில் காவல் பணியும், வனத் துறையின் கட்டுப்பாட்டில் வனப் பணியும் இயங்கி வருகின்றன. இந்திய நிர்வாகப் பணியென்பது (IAS) இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர் இந்திய அரசுப்பணி (ICS) யென்பதற்குப் பதிலாக 1947ல் உருவாக்கப்பட்டதாகும்.

இந்திய அரசியலமைப்பின் 312 வது பிரிவின்படி, இந்தியப் பாராளுமன்றம் அகில இந்தியப் பணிகளை உருவாக்க அதிகாரம் கொண்டுள்ளது. பாராளுமன்றம் தீர்மானம் நிறைவேற்றி அகில இந்தியப் பணிகளை, மேலவையான மாநிலங்களவையின் ஒப்புதலோடுதான் உருவாக்கவேண்டும். மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களோடு கலந்தாலோசித்துத் தான் அகில இந்தியப் பணியாளர்களின் ஆட்சேர்ப்பு, பணிக் கட்டுப்பாடுகள் ஆகியவற்றை உருவாக்க 1951 ஆம் ஆண்டு அகில இந்தியப் பணிகள் சட்டம் அதிகாரமளித்துள்ளது.

அகில இந்தியப் பணிகளுக்கான பணியாளர்களைத் தேர்வு செய்வது மத்திய அரசாங்கம்தான் ஆகும். பின்னர் தேர்வு செய்யப்பட்டவர்கள் மாநில அரசாங்கங்களில் பணிபுரிய மாநில அரசாங்கங்களுக்கு பணியாளர்களை பணிசார்பு (deputy) முறையில் அனுப்பி வைக்கின்றது. ஆனால் அகில இந்தியப் பணிகள் என்பது ஒன்றாகத்தான் கருதப்படும். ஏனெனில் இந்தியா முழுமைக்கும் அனைத்துப் பணியாளர்களுக்கும் சம அந்தஸ்து ஒரே மாதிரியான ஊதியம், உரிமைகள் ஆகிய அனைத்தும் பொதுவானவையாகும்.

அகில இந்தியப் பணிகள் மூன்று வகையான ஊதிய விகிதங்களில் இடம்பெறுகின்றன.

1. கூடுதல் நிலை ஊதியம் (Super time scale)

2. முதுநிலை ஊதியம்

3. இளநிலை ஊதியம்

இளநிலை ஊதியத்திலிருந்து பணியாளர்கள் பணியை தொடர்ந்து படிப்படியாக பதவி உயர்வுகள் பெற்று, முதுநிலை, கூடுதல்நிலை ஊதியத்தை அடைவர். அனுபவத்தின் மூலம் பதவி உயர்வுகளைப் பெறுவர். மத்திய அரசாங்கத்தின் கீழ் அகில இந்தியப் பணிகள் கட்டுப்பாட்டிற்கு இலக்காயினும், மாநிலங்கள்தான் முதலில் பணியாளர்களைக் கட்டுப்படுத்தும் உரிமைகளைக் கொண்டுள்ளன.

மத்திய பணிகள்

மத்திய பணிகள் அகில இந்தியப் பணிகளிலிருந்து வேறுபட்டவையாகும். மத்திய அரசாங்கத்தின் பணிகள், திட்டங்கள், நடவடிக்கைகள் ஆகியவற்றிற்கு பொறுப்பு வாய்ந்தவை மத்திய பணிகளாகும். மத்திய அரசாங்கப் பணிகளுக்கெனவே தேர்வு செய்யப்படக்கூடியவர்கள் இவர்கள். இவர்கள் மாநிலங்களுக்கு பணிசார் முறையில் அனுப்பி வைக்கப்படமாட்டார்கள். இவர்கள் அனைவரும் பணியாளர்குழாமில் இயங்கக்கூடியவர்கள்.

மத்திய பணிகள் இரண்டுவகைகளாக அமைந்துள்ளன. அவை,

1. மத்திய அரசுப் பணிகள்.

2. பொது அரசுப் பணிகள்

என்பனவாகும். முதல்வகைப் பணிகள் முறையே வகுப்பு I, வகுப்பு II, சார்நிலை மற்றும் கடைநிலைப் பணிகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன. சார்நிலை மற்றும் கடைநிலைப் பணிகளை வகுப்பு III, வகுப்பு IV, எனக் கருதவேண்டுமென முதல் ஊதிய ஆணையம் (1946–1949) பரிந்துரைத்தது. பின்னர் 1974ஆம் ஆண்டு Group பிரிவு E, பிரிவு B, பிரிவு C, பிரிவு D என மூன்றாம் ஊதிய ஆணையப் பரிந்துரையின்படி வகைப்படுத்தப்பட்டு செயல்பாட்டில் உள்ளது. பிரிவு Aல் 34, பிரிவு Bல் 25 பணிகளும் இடம்பெற்றுள்ளன. சில பிரிவு A பணிகள் அதற்கேற்ப B பணிகளிலும் இடம் பெற்றுள்ளன. எழுத்தர் தொடர்பான பணியாளர்கள் பிரிவு C யிலும் உடல் உழைப்புப் பணியாளர்கள் பிரிவு D யிலும் இடம் பெற்றுள்ளனர். பிரிவு A, பிரிவு B பணியாளர்கள் அரசிதழ் பதிவுபெற்ற அதிகாரிகளாகவும் பிரிவு C, பிரிவு D பணியாளர்கள் அரசிதழ் பதிவுபெறா அதிகாரிகளாகவும் அங்கிகரிக்கப்பட்டுள்ளனர்.

அகில இந்தியப் பணிகள் அவசியமா ? மாநிலப் பணிகள் போதாதா ? என்ற கேள்வி பலகாலமாகக் கேட்கப்பட்டு வருகின்றன. அகில இந்தியப் பணிகள் அவசியமானவை. ஏனெனில் நாட்டின் ஒற்றுமைக்காகப் பாடுபடக் கூடியவர்கள் இவர்கள். வட்டாரம், மொழி, இனம் ஆகிய அனைத்தையும் கடந்து பொது நலனிற்காகப் பாடுபடக்கூடியவர்கள் இப்பணியாளர்கள். நிர்வாகத் திறமைக்கு எடுத்துக் காட்டாக ஆங்கிலேயர்கள் காலத்திலிருந்து இன்று வரை மெய்ப்பித்த பணி அகில இந்தியப் பணிகளாகும். இவர்கள் மத்திய அரசாங்கத்திலும் மாநில அரசாங்கங்களிலும் பணியாற்றுவதால், நிர்வாகத்தில் ஒரே சீரான தன்மையைப் பராமரிக்க முடிகின்றது. கூட்டாட்சியில் உள்ள மத்திய, மாநிலப் பிரச்சனைகள் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்கின்றது இது. இவர்கள் ஒற்றுமையுடனும், கூட்டாகவும் நிர்வாகத்தில் பங்கு பெறுகின்றனர். இந்தியாவில் மதிப்புமிக்க பணியாக அமைந்துள்ளது இப்பணி. இதன்

அந்தஸ்து, மரியாதை மக்களால் அங்கிகரிக்கப்பட்டுள்ளது. பாரபட்சமின்றி, சுதந்திரமாக இயங்கக்கூடிய பணி இது. மாநில அரசாங்கம் குடியரசுத் தலைவரின் ஆட்சிக்கு வரும்போது ஆளுநரின் ஆலோசகர்களாக நியமிக்கப்படுவார்கள் அகில இந்தியப் பணியாளர்கள்.

அகில இந்தியப் பணிகள் குறித்து டாக்டர் அம்பேத்கார், சர்தார் வல்லபாய் படேல் போன்ற தலைவர்கள் புகழ்ந்துரைத்துள்ளனர். சர்தார் வல்லபாய் படேல் இந்தியப் பணிகளின் முதன்மைப் பணி அகில இந்தியப் பணிகளெனப் பாராட்டியுள்ளார். நல்வாழ்வு அரசில் அகில இந்தியப் பணி அவசியமானதென 1966 ஆம் ஆண்டு மதிப்பீட்டுக்குழு கூறியுள்ளது. நிர்வாகச் சீர்த்திருத்த ஆணையம் அகில இந்தியப் பணிகளின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியதோடு, கல்வி, சுகாதாரம், நீர், போன்றவற்றிற்கும் அகில இந்தியப் பணிகள் உருவாக்கப்படவேண்டுமென்று கூறியுள்ளது. சர்க்காரியா ஆணையம் (1983–1987) அரசியலமைப்பு உருவாக்கியவர்களின் எதிர்பார்ப்புகளுக்கிணங்க பாராட்டும்படியான பணிகளை அகில இந்தியப் பணிகள் ஆற்றிவருகின்றன என்கிறது.

இருப்பினும் அகில இந்தியப் பணிகள் ஆங்கிலேயர்களால் ஏற்படுத்தப்பட்டவை. அவர்களின் நலனிற்காக, எதேச்சதிகாரமாகச் செயல்பட்டவை. அதிகாரம் அனைத்தையும் மையமாக்கி, அதிகப்படியான அதிகாரங்களைக் கொண்டதாக அமைந்துள்ளவை என்று குறை கூறப்படுகின்றது. இப்படிப்பட்ட பணி இன்றைய நம்முடைய மக்களாட்சிக்கு அவசியமா ? என்றும் கேள்வி எழுப்புகின்றனர்.

இந்தியா ஒரு கூட்டாட்சி நாடு. அகில இந்தியப் பணிகள் என்பது கூட்டாட்சிக்கு எதிரான ஒன்று. ஏனெனில் மாநிலங்களின் சுயாட்சியைப் பாதிக்கவல்லது இது. எனவே தான் 1971ல் நிறுவப்பட்ட இராஜமன்னார் குழு அகில இந்தியப் பணிகளான இந்திய ஆட்சித்துறைப் பணி, இந்தியக் காவல் பணி ஆகியவற்றை நீக்கவேண்டுமென பரிந்துரை செய்தது. மாநில அளவிலான அமைச்சக பொறுப்பான்மையை மீறக்கூடியது இது எனவும் குறை கூறலாம். இந்திய மாநிலங்கள் அனைத்தும் ஒரே மாதிரியானவை அல்ல. சமப் பிரதிநதித்துவம் வழங்கப்படவேண்டுமென்பது இயலாத செயல். மேலும் அகில இந்தியப் பணியாளர்களுக்கு அதிகமான மதிப்பும் மரியாதையும் ஊதியமும் இருப்பதால், மாநிலப் பணியாளர்களின் மனஒழுங்கு பாதிக்கின்றது. எனவே மாநிலப்பணிகளுக்கும் அகில இந்தியப் பணிகளுக்குமிடையே வித்தியாசம் அதிகமாக உள்ளது. மேலும் அகில இந்தியப் பணிகள் அதிகமாக தனித்தன்மைக்கும் இடமளிக்கவில்லை. இதனால் தனித்தன்மை யாளர்களுக்கு மேலாக இருக்கும் நிலை நிர்வாகப் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது.

அகில இந்தியப் பணிகளை மேலாண்மை செய்வதற்காக மத்திய அமைச்சரவைச் செயலரின் தலைமையில் ஓர் ஆலோசனை அமைப்பு ஏற்படுத்த வேண்டுமென சர்க்காரியா ஆணையம் பரிந்துரை செய்துள்ளது. அகில இந்தியப் பணிகள் மேம்பாடு தொடர்பாக மத்திய–மாநிலங்களோடு கலந்து ஆலோசனை பெறுவதுதான் இதன் பணியாகும். அகில இந்தியப் பணிகளின் பதவி உயர்வு, பதவி மாற்றம், பதவி நீக்கம் ஆகியவற்றில் புறக்கணிக்கப்பட்டுள்ளது (dissuaded) மாநில அரசாங்கம். தவிர, அகில இந்தியப் பணிகளின் தேர்வு பயிற்சி, பணியமர்த்தல், பதவி உயர்வு போன்ற செயல்களை இன்னும் மேம்படுத்த வேண்டும். பொதுத்தன்மையாக உள்ள நிலைக்கு ஈடாக தனித்தன்மை யாளர்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும். ஏனெனில் இன்றைய தொழில் வளர்ச்சி, தொழில் நுட்பம் ஆகியவற்றிற்கு உரிய கவனம் செலுத்த வேண்டும்.

மாதிரி வினா :

- அரசுப் பணிகளின் வகைப்பாட்டை விளக்கு.

## மத்திய அரசுப் பணி ஆணையம்

1919–ஆம் ஆண்டைய இந்தியச் சட்டத்தின் 96வது பிரிவின் அடிப்படையில் இந்தியாவில் முதலாவது ஒரு மத்திய அரசுப் பணியாளர் அமைப்பு 1926–ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இவ்வாணையத்தில் ஒரு தலைவர் உட்பட ஐந்து அங்கத்தினர்கள் இடம் பெற்றனர். இவ்வங்கத்தினர்கள் இந்திய அரசுச் செயலாளரால் நியமனம் செய்யப்பட்டனர். 1935–ஆம் ஆண்டைய இந்தியச் சட்டத்தின் வாயிலாக மாகாண அரசுப்பணி ஆணையங்கள் தோற்றுவிக்கப்பட்டது. இன்று மத்தியில் ஒரு மத்திய அரசுப்பணி ஆணையமும், ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு அரசுப்பணி ஆணையமும் செயல்பட்டு வருகின்றது.

மத்திய மற்றும் மாநில அரசுப்பணி ஆணையங்களைப் பற்றி இந்திய அரசியலமைப்பில் தெளிவாக எடுத்தியம்பியுள்ளது. இந்திய அரசியலமைப்பின் சிறப்பம்சமாக கருதப்படுகிறது. மத்திய, மாநில அரசுப்பணி ஆணையங்களைப் பற்றி அரசியலமைப்பின் இரண்டாவது அத்தியாயத்தில் பதினான்காவது பகுதியில் கூறப்பட்டுள்ளது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் ஒரு தீர்மானம் இயற்றி, அத்தீர்மானத்தை குடியரசுத் தலைவர் அங்கீகரித்தால், அம்மாநிலங்கள் ஒருங்கிணைந்து ஒரு இணை அரசுப்பணி ஆணையத்தை உருவாக்க அரசியலமைப்பு வழிவகுத்துள்ளது.

## அரசுப்பணி ஆணையத்தின் அமைப்பு

ஆணைய அங்கத்தினர்களின் நியமனம், பதவிக்காலம் போன்றவை அரசியலமைப்பின் 316–வது விதியில் கூறப்பட்டுள்ளது. மத்திய மற்றும் இணை ஆணையங்களின் தலைவரையும் அங்கத்தினர்களையும் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். மாநில ஆணையங்களின் தலைவர்களும், அங்கத்தினர்களும் மாநில ஆளுநர்களால் நியமனம் செய்யப்படுகின்றனர். ஆணைய அங்கத்தினர்களில் குறைந்தது பாதிப் பேர் மத்திய அல்லது மாநில அரசாங்கப் பணிகளில் பத்து ஆண்டுகள் பணி ஆற்றியவர்களாய் இருத்தல் வேண்டும். அங்கத்தினர்களின் பதவிக்காலம் ஆறு ஆண்டு என்று நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஆறு ஆண்டு நிறைவு பெறுமுன் மத்திய அரசுப்பணி ஆணையருக்கு அறுபத்தைந்து வயதும், மாநில அல்லது இணை அரசுப்பணி ஆணையருக்கு அறுபத்திரண்டு வயதும் நிரம்பினால் பதவி ஓய்வு பெற வேண்டும். மேலும், ஆறு ஆண்டு நிறைவு பெறுமுன் ஆணையர்களால் விரும்பினால், பதவியை ராஜினாமா செய்யலாம். மத்திய மற்றும் இணை அரசுப்பணி ஆணையர்கள் தங்கள் ராஜினாமாவை குடியரசுத் தலைவருக்கும், மாநில அரசுப் பணி ஆணையர்கள் தங்கள் ராஜினாமாவை மாநில ஆளுநருக்கும் சமர்ப்பிக்க வேண்டும்.

அங்கத்தினர்களை பதவி நீக்கம் செய்தல் பற்றி அரசியலமைப்பின் 317–வது விதி கூறுகிறது. ஒரு அங்கத்தினரின் அல்லது அரசுப்பணி ஆணையத் தலைவரின் தவறான நடத்தை நிரூபிக்கப்பட்டால், குடியரசுத் தலைவர் ஒரு கட்டளை பிறப்பித்து அவரைப் பதவியிலிருந்து நீக்கலாம். குடியரசுத் தலைவர் கட்டளை பிறப்பிக்க சில வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். அங்கத்தினரின் நடத்தை பற்றி தலைமை உயர் நீதிமன்றத்திடம் கருத்து கேட்கப்படுகிறது. அங்கத்தினரின் தவறான நடத்தைக்கு நடவடிக்கை மேற்கொள்ளலாம் என்று தலைமை உயர்நீதிமன்றம் ஒரு விசாரணையின் அடிப்படையில்

அறிக்கைச் சமர்ப்பித்தால், அவ்வங்கத்தினரை குடியரசுத் தலைவர் பதவி நீக்கம் செய்ய கட்டளை பிறப்பிக்கலாம். ஒரு அங்கத்தினரின் நடத்தையைப் பற்றி தலைமை உயர் நீதிமன்றம் விசாரணை நடத்தி அறிக்கை சமர்ப்பிக்கின்ற வரை அவ்வங்கத்தினரை குடியரசுத் தலைவர் தற்காலிகமாக பதவி நீக்கம் செய்யலாம்.

பின்வரும் காரணங்களுக்காக குடியரசுத் தலைவர் ஒரு ஆணைய அங்கத்தினரையோ அல்லது தலைவரையோ பதவியிலிருந்து நீக்கலாம்.

1. அங்கத்தினர் திவாலானவர் என்று நிருபிக்கப்பட வேண்டும்.

அல்லது

2. பதவிக்காலத்தில் வெளியில் ஊதியம் பெறும் பணிகளை மேற்கொண்ட நிலை நிருபிக்கப்பட வேண்டும்.

அல்லது

3. சரீர அல்லது மன சோர்வின் மூலம் பணியாற்றும் திறனை இழந்தவர் என்ற கருத்தை குடியரசுத் தலைவர் கொண்டிருக்க வேண்டும்.

அங்கத்தினர்கள் பிற அலுவல்களை மேற்கொள்ளுதலை அரசியலமைப்பின் 319–வது விதி தடை செய்கிறது. அரசுப் பணி ஆணையத்தின் அங்கத்தினராய் ஒரு முறை பதவி வகித்தவர், மீண்டும் ஒருமுறை அப்பதவி வகிக்க தகுதியற்றவராகிறார். மத்திய அரசுப் பணி ஆணையத் தலைவர் தனது பதவிக்காலம் முடிவுற்ற பின் மத்திய அரசாங்கத்திலோ அல்லது மாநில அரசாங்கத்திலோ எப்பதவியும் வகிக்க தகுதியற்றவர் ஆகிவிடுகிறார். மாநில அரசுப் பணி ஆணையத் தலைவர் தனது பதவிக்காலம் முடிவுற்றபின் மத்திய அரசுப்பணி ஆணையத் தலைவராகவோ அல்லது இன்னொரு மாநிலத்தின் அரசுப் பணி ஆணையத்தினரின் அங்கத்தினராகவோ தகுதிப்படைத்தவர் ஆகிறார். ஆனால் வேறு எந்த மத்திய அல்லது மாநில அரசாங்கப் பணியையும் அவரால் ஆற்ற இயலாது. மத்திய அரசுப்பணி ஆணையத்தின் சாதாரண அங்கத்தினர் அவ்வாணையத்தின் தலைவராகவோ அல்லது மாநில அரசுப்பணி ஆணையத்தின் தலைவராகவோ பதவி ஏற்க தகுதிப் பெறுகிறார். ஆனால், அவரும் மத்திய அல்லது மாநில அரசாங்கப் பணிகளை மேற்கொள்ள கூடாது. மாநில அரசுப்பணி ஆணையத்தின் சாதாரண உறுப்பினர் மத்திய அரசுப்பணி ஆணையத் தலைவராகவோ அல்லது பிற மாநில ஆணையங்களின் தலைவராகவோ நியமனம் செய்யப்பட தகுதிப் பெறுகிறார். ஆனால் அவரும் மத்திய மாநில அரசாங்கப் பணிகளை மேற்கொள்ள இயலாது. ஒரு அரசுப்பணி ஆணைய அங்கத்தினரோ அல்லது தலைவரோ அமைச்சராக முடியாது.

ஆணைய அங்கத்தினர்களின் எண்ணிக்கை, அவர்களுடைய பணிநிலை, ஆணையப் பணியாளர் சம்பந்தப்பட்ட நிலைகள் போன்றவை இணை ஆணையத்திற்கும் மத்திய அரசுப்பணி ஆணையத்திற்கும் குடியரசுத் தலைவராலும், மாநில அரசுப்பணி ஆணையத்திற்கு ஆளுநராலும் நிர்ணயிக்கப்படுகிறது. நியமனம் செய்யப்பட்டபின், அங்கத்தினர்களின் பணிநிலைகளை அவர்களுடைய பதவிக்காலத்தில் அவர்களுக்கு அதிருப்தி அளிக்கும் வகையில் மாற்றியமைத்தல் கூடாது.

## அரசுப்பணி ஆணையத்தின் பணிகள்

அரசுப்பணி ஆணையத்தின் கடமைகளும் பணிகளும் அரசியலமைப்பின் 320வது விதியில் கூறப்பட்டுள்ளது. அவைப் பின்வருபவையாகும்.

1. மத்திய, மாநில அரசாங்கப் பணிகளுக்கு ஆட்சேர்க்க போட்டித் தேர்வுகளை மததிய, மாநில அரசுப்பணி ஆணையங்கள் நடத்துதல் ;

2. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநில அரசுகளின் வேண்டுகோளுக் கிணங்க, சில விசேட தகுதிகள் தேவைப்படும் பணிகளுக்குப் பொதுவான ஆட்சேர்ப்பு நடத்த தேவையான திட்டங்களை மத்திய அரசுப்பணி ஆணையம் வகுத்தளித்தல் ;

3. பின்வரும் சில நடவடிக்கைகளில் மத்திய மாநில அரசுப்பணி ஆணையங்கள் கலந்தாலோசித்தல் அவசியமாகும். அரசுப்பணி ஆணையங்களைக் கலந்தாலோசிக்கும் செயல்களாவன ;

அ. அரசுப்பணிக்கு ஆட்சேர்ப்பு சம்பந்தப்பட்ட செயல்கள்

ஆ. பணியாளரை பணியில் அமர்த்துதல், அவர்களுக்கு பதவி உயர்வு வழங்குதல், பணி இடமாற்றம் அளித்தல் போன்றவை சம்பந்தப்பட்ட செயல்கள்

இ. மத்திய, மாநில அரசுப்பணியில் ஈடுபட்டுள்ள பணியாளர் சம்பந்தப்பட்ட ஒழுங்கு நடவடிக்கை குறித்த நடவடிக்கைகள்

ஈ. அரசுப்பணியாளர்கள் தங்கள் பணியை சட்டபூர்வமாய் மேற்கொள்ளும் போது ஏற்படும் இழப்பீடுகளை பொது நிதியிலிருந்து சரிகட்டுதல் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள்.

உ. மத்திய, மாநிலப் பணிகளை ஆற்றும்போது உடல்நலன் பாதிக்கப்பட்டால் பணியாளருக்கு பதவி ஓய்வு வழங்குதல் சம்பந்தப்பட்ட செயல்கள்

ஊ. அரசு, குடியரசுத்தலைவர், ஆளுநர் போன்றோர் பணியாளர் சம்பந்தப்பட்ட ஆலோசனைகள் கேட்டால், அவ்வப்போது தகுந்த ஆலோசனைகள் வழங்குதல் போன்றவையாகும்.

எ. அரசியலமைப்பின் 323–வது விதியின் அடிப்படையில், அரசுப்பணி ஆணையம் ஒவ்வொரு ஆண்டும் கடந்த ஆண்டு செயல்பாட்டைப் பற்றிய அறிக்கை ஒன்று சமர்ப்பிக்க வேண்டும். இவ்வறிக்கையின் நகல் ஒன்றை குடியரசுத் தலைவர் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பிக்கிறார். அந்நகலோடு அரசுப்பணி ஆணையத்தின் ஆலோசனைகள் பெறப்பட்ட விபரங்களும், சில ஆலோசனைகள் புறக்கணிக்கப்பட்ட விபரங்களும், அவ்வாலோசனைகள் புறக்கணிக்கப்பட்டதற்கான காரணங்களும் சமர்ப்பிக்கப்படுகிறது. இவ்வாறான விபரங்களுடன் மாநில அரசுப்பணி ஆணைய அறிக்கையின் நகலும், சம்பந்தப்பட்ட மாநில ஆளுநர்களால் சம்பந்தப்பட்ட மாநில சட்டமன்றங்களில் சமர்ப்பிக்கப்படுகிறது. அரசுப்பணி ஆணையத்தின் செலவினங்களுக்கான பணமும், ஆணைய உறுப்பினர்கள் மற்றும் பணியாளர்களின் சம்பளம், இதரபடிகள் போன்ற செலவினங்களுக்கான பணமும் சம்பந்தப்பட்ட அரசின் பொது இணைநிதியிலிருந்து எடுக்கப்படுகிறது.

அரசுப்பணி ஆணையங்கள் அதிகாரிகளால் நிரப்பப்படல் கூடாது. என்றாலும், அரசுப்பணிக்கு திறமையின் அடிப்படையில் பணியாளர்களை தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளதால் அதிகாரிகள் இவ்வாணையங்களில் இடம் பெறல் அவசியம். மேலும்

அரசுப்பணி ஆணைய உறுப்பினர்களுக்கு போதுமான நிர்வாக அனுபவம் தேவை. அவ்வாறான அனுபவம் பெற்றிருத்தல் தகுதிப்படைத்தோரை அரசுப்பணிக்கு தேர்ந்தெடுக்க முடிகிறது. எனவே அதிகாரிகள் அரசுப்பணி ஆணையங்களில் இடம் பெறுகின்றனர். ஆட்சித்துறையின் கட்டுப்பாடின்றி, சுதந்திரமாய் ஆணைய உறுப்பினர்கள் இயங்க வழிவகுக்கப்பட்டுள்ளது. ஆணைய உறுப்பினர்களாய் பதவியாற்றிய நபர்கள், பதவி காலம் முடிந்து பின்னர் பிற பணியாற்றுவதிலிருந்து தடை செய்யப்படுகின்றனர்.

## நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரைகள்

இந்திய ஆட்சேர்ப்பு கொள்கைகளிலும், வழிமுறைகளிலும் சீரமைப்புச் செய்ய இந்திய நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் பணியாளர் நிர்வாகம் சம்பந்தப்பட்ட தனது அறிக்கையில் சில பரிந்துரைகளைச் செய்தது. அவை பின்வருபவையாகும்.

1. மத்திய அரசுப்பணி ஆணைய உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினர் இணை அரசுப்பணி ஆணையத்திலிருந்தும், மாநில அரசுப் பணி ஆணையத்திலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

2. ஆட்சேர்ப்பு கொள்கைகள் வகுக்கத் தேவையான புள்ளி விபரங்கள் சேகரிக்கவும், ஆட்சேர்ப்பு வழிமுறைகளை திறமையாய் வகுக்கவும், திறமையை முறையாய் ஆய்ந்தறியவும் தேவையான ஆய்வுகளை நடத்த ஆராய்ச்சி மையங்கள் உருவாக்கப்படல் வேண்டும்.

3. பணிக்கு ஆட்களை நியமிக்கும் போது, நியமனம் செய்யும் அதிகாரி சம்பந்தப்பட்ட மத்திய அல்லது மாநில பொதுப்பணி ஆணைய தலைவரை கலந்தாலோசிக்க வேண்டும்.

4. விவசாயத்துறை, கல்வித்துறை போன்றவற்றிற்கு ஆட்சேர்க்க தனிப்பட்ட வழிமுறைகள் வகுத்தளிக்கப்பட வேண்டும்.

5. இந்திய நிர்வாகப் பணி, இந்திய வெளிநாட்டுப் பணி, பிற இந்திய தொழில் நுட்ப பணிகள் போன்றவற்றிற்கு பொதுவான போட்டித் தேர்வு நடத்தப்படல் வேண்டும். அத்தேர்வு எழுதுபவர்கள் தங்களுடைய பணி விருப்பத்தினை வரிசையாக குறித்து தெரியப்படுத்த வேண்டும்.

இவ்வாறான பரிந்துரைகளை முறையாய் அமுல்படுத்தும்போது, அரசுப்பணிக்கு திறமை வாய்ந்தோர் தகுதியின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்கள் நாட்டில் ஒரு முன்மாதிரியான குடிமக்களாகத் திகழ்ந்து, சேவை மனப்பான்மையுடன் அன்றாடம் பணியாற்றுவர்.

ஐந்தாவது ஊதிய ஆணையம் அரசுப் பணிகளின் உயர்மட்ட மத்திய, மாநிலங்களில் வாரியம் உருவாக்கப் பரிந்துரைத்துள்ளது. இவை நிர்வாகப் பிரச்சனைகளை ஆராய்ந்து, முடிவெடுக்கும். இம்முடிவுகளில் பிரச்சனை எழுந்தால், அவற்றிற்கு பாராளுமன்றம் முடிவு செய்ய வேண்டும்.

## மாதிரி வினா :

மத்திய அரசுப் பணி ஆணையத்தின் அமைப்பு மற்றும் பணிகளை விவரி.

## பாடம்—11 அரசுப் பணியாளர்களின் உரிமைகள்

அரசுப் பணியாளர்களின் உரிமைகளும் கடமைகளும் ஒரு நாணயத்தின் இருபக்கங்கள்போல் சேர்ந்தே இருக்கக்கூடியதாகும். உரிமையோடு கடமையும் ஒருங்கே இணைந்து செல்லக் கூடியது. உலகிலுள்ள எல்லா நாடுகளிலும் அரசுப் பணியாளர்களுக்கு உரிமை வழங்கப்பட்டுள்ளது. சுதந்திரமாகப் பணியாளர்கள் தங்கள் கடமைகளை நிறைவேற்றிட உரிமைகள் பணியாளர்களுக்குக் கட்டாயம் தேவை. உரிமைகள் பணியாளர்களுக்கு அந்தஸ்து வழங்கவல்லவை.

இந்திய அரசியலமைப்பின் 19 வது பிரிவில் குடிமக்களுக்கு அடிப்படை உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு உரிமையும் பொறுப்பையும், கடமையையும் வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன. நேர்மை, பாரபட்சமின்மை, திறமை மற்றும் ஒழுங்கு ஆகியவற்றை வளர்க்கக்கூடியது உரிமைகள் ஆகும். பொதுவாக சட்ட உரிமை, அரசியல் உரிமை, சமூக உரிமை என உரிமைகளை வகைப்படுத்துவர். இந்த உரிமைகள் அனைத்தும் அரசுப்பணியாளர்கள் தங்களது கடமையாற்றுங்கால் நிறைவு பெறக் கூடிய வகையில் அமைந்தால், அரசுப் பணியாளர்களின் பணித்திறன் மென்மேலும் அதிகரிக்கும்.

வலிமை என்பது அமைப்பில் இருக்கக் கூடியதென ஒரு சமஸ்கிருதப் பழமொழி உண்டு. பணியாளர்கள், அரசாயினும் தனியார் நிறுவனமாயினும் அனைவரும் ஒன்று சேர்ந்தால், அவர்களின் வலிமை என்னவென்பது தெரியும். எனவே இது அமைப்பால் உருவாகின்றதெனலாம்.

பணியாளர்கள் சங்கங்கள் அமைப்பது என்ற கருத்து தனியார் நிறுவனங்களி லிருந்து உருவானதாகும். தனியார் தொழிற்சாலைப் பணியாளர்கள் தங்களது ஊதியம், பணிக் கட்டுப்பாடுகள் ஆகியவற்றிற்காக அனைவரும் ஒன்று சேர்ந்து போராடினர். எனவேதான் அவர்களது ஒற்றுமையே வலிமை என்பது வெளிக்கு வந்தது. தொழிற்புரட்சிக் காலத்தின்போது, தொழிலாளர் சங்கங்கள் உருவாயின. நாளடைவில் தொழில் சங்கங்கள் அரசுப் பணியில் அரசுப் பணியாளர் சங்கங்களாக ஏற்படுத்தப்பட்டன. ஆனால் இரண்டு சங்கங்களுக்கும் இடையே அடிப்படையில் அரசாங்கத்தின் அணுகுமுறை வித்தியாசமாகவே உள்ளன. இன்றைய நாளில், சங்கங்கள் மூலமே பிரச்சனைகளைத் தீர்வு செய்ய முடியுமென்ற நிலை வளர்ந்து வருகிறது.

இங்கிலாந்தில் தொழிற்சங்கம் 1871 ஆம் ஆண்டுச் சட்டத்தின் மூலம் அங்கீகாரம் பெற்றது.. ஆனால் அரசுப் பணியாளர் சங்கங்களுக்கு அங்கீகாரம் கொடுக்கப்படவில்லை. எனவே அரசுப் பணியாளர் சங்க நடவடிக்கைகள் மிகவும் குறைவாகவே காணப்பட்டன. ஆயினும் விட்லிமன்றங்கள் 1919 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இதன் மூலம் அரசுப் பணியாளர் சங்கங்களுக்கு அங்கீகாரம் கிடைத்தது. பிரச்சனைகளை அரசாங்கமும் அரசுப் பணியாளர்களும் சேர்ந்துதான் அரசுப் பணியாளர் பிரச்சனைகளைத்தீர்வு செய்ய முடியுமென்ற நிலை உருவாக்கப்படடது. அமெரிக்க ஐக்கிய நாட்டைப் பொறுத்தவரை தனியார்களும் அரசாங்கமும் சங்கங்களைப் பற்றி எந்த அக்கறையும் எடுத்துக் கொள்ளவில்லை. 1912 ஆம் ஆண்டு சங்கங்கள் அமைப்பதற்குரிய கெடுபிடிகள் அனைத்தும் நீக்கப்பட்டன.

இந்தியாவைப் பொறுத்தவரை, சங்கங்கள் அமைத்தல் என்பது இரயில்வே துறையிலிருந்து ஆரம்பமானது. 1897 ஆம் ஆண்டு இரயில்வே தொழிலாளர்கள் அனைவரும் சேர்ந்து ஒன்றுபட்ட இரயில்வே சங்கம் என்பதை உருவாக்கினார்கள். இதில்

பர்மா இரயில்வே தொழிலாளர்களும் அடங்குவர். இது ஒரு நட்புகரமான அமைப்பாகவே அமைந்தது. 1922 ஆம் ஆண்டு முறையான இரயில்வே தொழிலாளர்களின் கூட்டமைப்பு ஏற்படுத்தப்பட்டது. பின்னர் அஞ்சல் தந்தி தொழிலாளர் சங்கம் உருவானது. 1926 ஆம் ஆண்டு அரசாங்கமே தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுத்த அங்கிகாரம் அளித்தது. படிப்படியாக சங்கங்களின் எண்ணிக்கை வளர்ந்த வண்ணமே இருந்தது. இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர், சங்கங்கள் அமைக்க அடிப்படை உரிமையே மக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

பணியாளர்கள் சங்கங்கள் அமைத்துக் கொள்ள ஊக்குவிக்கப்படுகின்றபொழுது அவர்களுக்குக் கீழ்கண்ட உரிமைகள் வழங்கப்படவேண்டுமா என்ற வினா எழுகின்றது.

1. சங்கங்கள் அமைக்கும் உரிமை;
2. வெளித் தொழிற்சங்களுடன் இணையும் உரிமை;
3. கூட்டுப்பேரம் பேசும் உரிமை;
4. நடுவர் தீர்ப்புக்குவிடும் உரிமை;
5. வேலை நிறுத்தம் செய்யும் உரிமை.

### சங்கங்கள் அமைக்கும் உரிமையும் வெளித் தொழிற்சங்களுடன் இணையும் உரிமையும்:

சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும் அவற்றைத் தொழிற்சங்கங்களுடன் இணைத்துக் கொள்ளவும் இங்கிலாந்திலுள்ள அரசுப் பணியாளர்களுக்கு உரிமை அளிக்கப்பட்டுள்ளது. இவர்கள் எந்த அரசியல் கட்சியிலும் சேரவும் முடியும். அமெரிக்காவில் வேலை நிறுத்தங்களில் ஈடுபடாத நிலையில் சங்கங்கள் அமைத்துக் கொள்ளும் உரிமை அரசுப் பணியாளர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது.

இந்தியாவில் அரசுப் பணியாளர்கள் சங்கங்கள் அமைத்துக்கொள்ளும் உரிமை பெற்றுள்ளனர். சங்கத்தை உருவாக்கியவுடன் அதன் குறிக்கோள்கள், கொள்கைகள், அமைப்பு போன்றவை துறையின் தலைவரது அங்கீகாரத்திற்கு அனுப்பப்படல் வேண்டும். அங்கீகரிக்கப்பட்ட சங்கங்களுடன் மட்டும்தான் அரசாங்கம் தொடர்பு கொள்கிறது. ஆனால் இவைகள் வெளித் தொழிற்சங்கங்களுடன் இணைய முடியாது. ஏனெனில் வேலை நிறுத்தம் செய்வதற்குள்ள உரிமை தொழிற்சங்கங்களுக்கு மட்டும்தான் உண்டேயொழிய பொதுப் பணியாளர்களுக்குக் கிடையாது. இந்தியாவில் இவை ஒரு சட்டக்கட்டுப்பாடு இல்லாவிடினும், வெளியில் உள்ளவர்களைப் பதவியில் கொண்ட சங்கங்களை அங்கீகரிக்காமல் இருக்க அரசுக்கு அதிகாரம் உண்டு. பொதுப் பணியாளர்கள் தமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், தங்களது சங்கங்களின் பணிகளைத் தாமே கவனித்துக்கொள்ளவும் ஆற்றலுடையவராதலால் அவர்களது சங்கங்கள் வெளிச்சங்கங்களுடன் இணைய வேண்டியதில்லை என்று கருதப்படுகிறது. புறமுள்ளவர்களைப் பதவிகளில் கொண்ட சங்கங்கள் அமைப்பதை அரசாங்கம் ஊக்குவிப்பதில்லை. மேலும் அரசுப் பணியாளர்கள் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டவர் களாக இருக்கவேண்டும். அவர்களுக்கு ஓட்டுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால் பொதுத் தேர்தலில் போட்டியிடும் உரிமை வழங்கப்படவில்லை.

கூட்டாகப் பேரம் பேசும் உரிமை: இவ்வுரிமை பொதுப்பணியாளர்களுக்குக் கொடுக்கக்கூடாது. தனியார் நிறுவனங்களில் உள்ள பணியாளர்களது நிலையினின்று

பொதுப்பணியாளர்கள் நிலை முற்றிலும் வேறுபட்டது. அன்றாட நிர்வாகத்தைச் சீர்குலைக்கக்கூடிய எந்த வகையான செயலிலும் கலந்து கொள்ளும் உரிமை இவர்களுக்கு இல்லை.

## நடுவர் தீர்ப்புக்கு விடும் உரிமை:

இவ்வுரிமை பொதுப்பணியாளர்களுக்குக் கொடுக்கலாம். பணியாளர்கள், அரசாங்கம் என்ற இரு சாராருக்குமிடையே ஏதேனும் தகராறு இருப்பின், நடுவர் தீர்ப்புக்கு விடுதலானது இரு சாரார்களினுடைய விருப்பத்தையும் பொறுத்துத்தான் இருக்கிறது. நடுவராக வருபவர் இரு சாரார்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டவராக இருப்பர்.

## வேலை நிறுத்தம் செய்யும் உரிமை:

இவ்வுரிமை சர்ச்சைக்குரியதொன்றாகும். இங்கிலாந்தில் அரசுப் பணியாளர்கள் வேலை நிறுத்தம் செய்யக்கூடாதெனக் கூறும் சட்டம் ஏதுமில்லை. வேலை நிறுத்தம் செய்யும் உரிமை அமெரிக்க அரசுப் பணியாளருக்கு இல்லை. பிரான்சில் வேலை நிறுத்தம் செய்யும் உரிமை அளிக்கப்பட்டுள்ளது. ஆனால் ஆஸ்திரேலியா, ஜப்பான், சுவிட்சர்லாந்து போன்ற நாடுகளில் வேலை நிறுத்தம் செய்வது சட்ட விரோதமானது.

இந்தியாவில் வேலை நிறுத்தம் செய்வதை எச்சட்டமும் தடை செய்யவில்லை. ஆனால் 1960 ஆம் ஆண்டு ஜுலை மாதமும், 1968 ஆம் ஆண்டு நவம்பர் மாதமும் மத்திய அரசாங்கப் பணியாளர்களால் செய்யப்பட்ட வேலைநிறுத்தங்கள், மக்கள் கவனத்தை இந்த முக்கியப் பிரச்சனையின் மேல் செலுத்தும்படி செய்தன. இது சம்பந்தப்பட்ட நிலையானது ஒவ்வொரு நாட்டிலும் வேறுபட்டுக் காணப்படுகிறது. இந்தியாவில் வேலை நிறுத்தம் என்பது ஒழுங்கு மீறிய செயலாகக் கருப்படுகிறது. 1955 ஆம் ஆண்டைய மத்திய அரசுப் பணியாளர் தொகுதியின் (ஒழுங்கு) விதிகள், அரசாங்கப் பணியாளர்களைத் தம்முடைய வேலைச் சூழ்நிலைகள் சம்பந்தமாக ஊர்வலங்களில் பங்கெடுத்தல் அல்லது ஏதேனுமொரு வகையில் வேலை நிறுத்தம் செய்ய முனைதல் போன்றவற்றினின்று தடுக்கின்றன.

இவ்விடத்தில் இரண்டு பிரச்சனைகள் கவனத்திற்கு வருகின்றன. 1. வேலை நிறுத்தம் செய்ய அரசாங்கப் பணியாளர்களுக்குச் சுதந்திரமளிக்கலாமா? 2. இத்தகைய வேலை நிறுத்தங்களுக்குச் சட்டம் விதிக்கலாமா?

இது சம்பந்தமாக மூன்று கருத்துக்கள் உள்ளன. தொழிற்சங்கங்களுக்கு உள்ள வேலை நிறுத்தம் செய்யும் உரிமையோடு எல்லா உரிமைகளையும் அரசுப் பணியாளர் களுக்குக் கொடுக்க வேண்டும் என்பது முதல் கருத்து. அரசாங்கப் பணியாளர்களால் செய்யப்படும் வேலை நிறுத்தங்களை முழுவதுமாகத் தடை செய்யவேண்டும் என்பது இரண்டாவது கருத்து. இவ்விரண்டு எதிர்மாறான கருக்துக்களுக்கிடையே, ஒரு சில குறிப்பிட்ட வேலை நிறுத்தங்களை மட்டும் தடை செய்ய வேண்டும் என்பது மூன்றாவது கருத்து.

முதல் கருத்திற்கு W.E. மோஷர் (W.E. Mosher) போன்ற புகழ் பெற்ற எழுத்தாளர்கள் ஆதரவளிக்கிறார்கள். வேலை நிறுத்தம் தொழிலாளர்களைப் பற்றிச் சிந்திக்க அரசாங்கத்திற்கு ஒரு வாய்ப்பு அளிக்கின்றது. பணியாளர்களது நலனை மனத்திற் கொள்ளாத அரசாங்கங்களைக் கட்டாயப்படுத்த வேலை நிறுத்தம் பயன்படுகிறது.

தகுந்த காரணங்களின்றி வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது கிடையாது. பணிபுரிதலில் நிலவும் மிகவும் கீழ்த்தரமான சூழ்நிலைகளும், அரசாங்கத்தின் இறுமாப்பில், வேலை நிறுத்தத்தைத் தூண்டுகின்றன. அரசாங்கப் பணியாளர்களுக்கும், தனியார் துறைப்பணியாளர்களுக்குமிடையே எந்தவிதமான வேறுபாடும் இருக்கக்கூடாது. வேலை நிறுத்தத்தைக் குறைப்பதற்கு, பணியாளர் பணிபுரிவதற்குகந்த சூழ்நிலைகளும், மேலாளர் பணியாளர்களது கருத்துக்களைக் கேட்கும் மனப்பாங்கும் வளரவேண்டும்.

உறுதியான வாதங்களுடன் இதற்கு மாறான கருத்தும் கூறப்படுகிறது. அரசானது ஆதாய நோக்கமில்லாதது என்றும் சமூகத்தின் எந்தப் பிரிவையும் சுரண்டப்படுவதினின்று காக்க வேண்டிய பொறுப்பினை உடையதாதலால் அவ்வரசு தன்னுடைய பணியாளர்கள் விஷயத்தில் நல்லவிதமாகவே செயல்படும் என நம்பலாம் என்றும் கூறப்படுகிறது. அரசுப் பணியாளர்களின் வேலை நிறுத்தமானது அவர்கள் யாருக்குப் பணிபுரிய வேண்டுமோ அவர்களுக்கெதிராகத் தீட்டக்கூடிய ஒரு துப்பாக்கிதான் என்று கருதப்படுகிறது.

இதற்கும் மேலாக, அரசு என்பது பல பணிகள் புரியும் ஒரு நிறுவனமாகும். முக்கியமான பணித்துறைகளில் வேலை நிறுத்தம் ஏற்பட்டால் அது சமுதாயம் முழுவதையும் பாதிக்குமாதலால் பொதுப் பணியாளருக்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமை கொடுக்கக்கூடாது. மேலும் வேலை நிறுத்தம் பணியாளர்களது ஒழுக்க உணர்வைக் கெடுத்துவிடும். பொதுப்பணியாளர்கள் எல்லாம் வல்ல அரசின் கட்டளைகட்குப் பணிந்து போக வேண்டும். இங்ஙனம் பணியாதோர் அரசாங்கத்தில் உண்மையுடன் பணிபுரிய இயலாது. மேலும் அரசுப் பணியாளர்கள் தமது குறைகளுக்குப் பரிகாரம் காண இம்முறைப் பயன்படுத்துவது நல்லதல்ல.

மூன்றாவது கருத்தினையுடையர்கள், அரசாங்கத்தின் கீழ் அத்தியாவசியப் பணியில் ஈடுபட்டுள்ள பணியாளர்களுக்கும், தொழிற்சாலைப்பணிகளில் ஈடுபட்டுள்ளவர் களுக்குமிடையே ஒரு வேறுபாட்டினை உருவாக்குகின்றனர். அத்தியாவசியப் பணியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமை வழங்கக்கூடாது என்றும் தொழிற்சாலைப் பணிகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இவ்வுரிமை இருக்கலாம் என்றும் வாதிடுகிறார்கள்.

இவ்வேலை நிறுத்தம் செய்யும் உரிமையைப் பொறுத்தமட்டில் பொதுப்பணியாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய முனைதலோ அல்லது அச்சுறுத்தலோ தவறானது எனத் திட்டவட்டமான கருத்தினை இரண்டாவது ஊதிய ஆணையம் தெரிவித்துள்ளது. மத்திய அரசாங்கத்தால் வேலை நிறுத்தத்தை முழுவதுமாகத் தடை செய்யவேண்டும் என்று பரிந்துரை செய்துள்ளது. அரசுப் பணியாளர்கள் விஷயத்தில் வேலை நிறுத்தம் தடை செய்யப்பட வேண்டும் என்பது உலக மக்களின் பொதுக் கருத்தாகும்.

வேலை நிறுத்தம் செய்வதைச் சட்டத்தால் தடை செய்ய வேண்டுமா அல்லது அரசாங்கப் பணியாளர்கள் ஒழுங்கு முறை விதிகளின் மூலம் ஏற்படுத்தப்பட்டுள்ள தடையே போதுமானதா என்பதே இப்போதுள்ள பிரச்சனையாகும். இரண்டாவது ஊதிய ஆணையம் இது பற்றி சட்டத்தில் திருத்தம் செய்வதற்கான கருத்தைக் கூறவில்லை. ஆனால் நிர்வாகச் சீர்த்திருத்த ஆணையம் அரசாங்கம் அதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்று பரிந்துரை செய்தது. 1968—ஆம் ஆண்டையச் சட்டம் அத்தியாவசியப் பணிகளில் வேலை நிறுத்தத்தைத் தடைசெய்வதற்கும், தடைசெய்யப்பட்ட வேலை நிறுத்தங்களில் பங்கு கொள்வோர் அல்லது தூண்டுபவர் அல்லது இத்தகைய வேலை

நிறுத்தங்களுக்கு தண்டனை வழங்குவதற்கான அதிகாரத்தை அரசாங்கத்திற்குக் கொடுத்துள்ளது.

### "விட்லி குழுக்கள்" (Whitley Councils) :

பணியாளர்கட்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமை அளிக்காதிருக்குமிடத்து அரசாங்கத்திற்கும் பணியாளர்களுக்குமிடையே எழும் பூசல்களுக்குப் பரிகாரம் காண உகந்ததொரு அமைப்பிற்கு வழிவகுக்க வேண்டும். ஏனென்றால், இங்கு பணியாளர்களுக்கும், வேலை கொடுப்போருக்கும் தனியார் துறையில் இருப்பதைப் போன்று நேரடியான தொடர்பு இல்லை. வளர்ந்து வரும் நாடுகளில் கூட சமீப காலத்தில்தான் இத்தகையதொரு அமைப்பிற்கு வழிவகுக்கப்பட்டுள்ளது.

1917–ஆம் ஆண்டு இங்கிலாந்தில் காமன்ஸ் சபையின் தலைவராயிருந்த விட்லி (Whitely) என்பவரது தலைமையின் கீழ் ஒரு குழு நிறுவப்பட்டது. வேலை கொடுப்போர், பணியாளர்கள் ஆகியோர் அடங்கிய இணைத் தொழில் மன்றங்களை (Joint Industrial Councils) நிறுவிப் பிரச்னைகளுக்கு முடிவுகாண வேண்டுமென இக்குழு பரிந்துரை செய்தது. இம்மன்றங்கள் முதலில் தொழிற்சாலைகளில் மட்டும் நிறுவப்பட்டன. நாளடைவில் தமக்கும் இதுபோன்ற மன்றங்கள் தேவையென அரசுப் பணியாளர்கள் குரல் எழுப்பினர். கோரிக்கையை 1919–ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8உ ஏற்றுக்கொண்ட அரசாங்கம் அதன் ஒவ்வொரு துறையிலும் விட்லி குழுக்களை நிறுவியது. "தற்போதுள்ள இங்கிலாந்தின் அரசுப் பணித்துறையில் நிகழ்ந்த மிக முக்கியமான மாற்றமே விட்லி குழுக்கள் நிறுவியது" என L.D. ஒயிட் கூறுகின்றார்.

அரசுப் பணியாளர் தொகுதியிலுள்ள விட்லி அமைப்புக்களில் தேசிய கவுன்சில் ஒன்றும், ஒவ்வொரு துறையிலும் ஒரு துறைக்கவுன்சிலும், ஒரு கவுன்சிலும், அரசாங்கம் மற்றும் பணியாளர்களிடமிருந்து சம எண்ணிக்கைகளைக் கொண்டிருக்கும். அரசாங்கப் பிரதிநிதிகள் அதிகாரிகள் வகுப்பையும், பணியாளர் பிரதிநிதிகள் நடுத்தர மற்றும் கடைநிலை ஊழியர்கள் வகுப்பையும் சேர்ந்தவர்கள், அரசாங்கப்பிரதிநிதிகளில் ஒருவர்தான் இக்குழுவின் தலைவர். பணியாளர்கள் பிரதிநிதிகளில் ஒருவர் உதவித்தலைவர். தேசியக் கவுன்சிலில் 54 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். துறைக் கவுன்சில்களும் இவ்வாறே அமைக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் அளவில் சிறியதாக இருக்கின்றன. துறையைச் சேர்ந்தவர்கள் மட்டும்தான் இக்குழுவின் உறுப்பினர்களாவர். சுமார் எண்பது பேர்கள் துறைக்கவுன்சிலில் இருக்கிறார்கள்.

பின்வருபவை விட்லிக் குழுக்களின் குறிக்கோள்களாகும்.

1. பொதுப்பணியின் திறமையை மேம்படுத்திப் பணியாளரது நலனைப் பாதுகாத்தல்.
2. அரசுப் பணியாளர்களது நிலை சம்பந்தப்பட்ட முன்வரைவுகளை முன் மொழிதல்.
3. பணியாளர்கட்கு மேலும் கல்வி புகட்ட ஊக்குவித்தல் மற்றும் உயர்ந்த நிர்வாகத்திற்கும் நிர்வாக அமைப்புக்கும் அவர்களுக்குப் பயிற்சி அளித்தல்.
4. கொள்கை உருவாக்கலில் பணியாளருக்குப் பங்களித்தல்.
5. பணிச் சூழ்நிலைகள் குறித்து எழும் பிரச்னைகளைப் பற்றி விவாதிக்க ஓர் அமைப்பை உருவாக்கல்.

6. ஆள் சேர்த்தல், பணி நேரம், பதவி உயர்வு, ஒழுக்கம், ஊதியம் மற்றும் ஓய்வுகாலம் போன்ற வேலைச் சூழ்நிலை சம்பந்தப்பட்ட பொதுக்கோட்பாடுகள் நிர்ணயித்தல்.

இக்குழுக்களில் முக்கியப் பணி அரசிற்கும் அதன் பணியாளருக்குமிடையே ஒற்றுமையை வளர்ப்பதாகும். ஆலோசனை வழங்கமட்டும்தான் இக்குழுக்களுக்கு அதிகாரம் உண்டு. எல்லா விஷயங்களும் இக்குழுக்களில் விவாதிக்கப்படுகின்றன. அங்கத்தினர் ஒரு ஒப்பந்தத்திற்கு வரவில்லையென்றால் துறையின் தலைவர் தமது இச்சைக்கேற்பச் செயல்படுகின்றார்.

## இந்தியாவில் விட்லி முறை:

1931–ஆம் ஆண்டு நிறுவப்பட்ட இந்தியத் தொழிலாளர் கமிஷனின் தலைவராக திரு.விட்லி அவர்களே இருந்தபோதும், இக்கமிஷன் தன்னுடைய அறிக்கையில் இந்தியாவின் விட்லி முறையைப் புகுத்துவதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. 20 ஆண்டுகளுக்குப் பின்னர் மத்திய ஊதியக்குழு, விட்லி குழுக்களை உருவாக்கு வதற்குரிய வாய்ப்பினையும் தேவையையும் ஆராய்ந்தது. விட்லி முறையைப் போன்ற ஏதேனுமொரு முறையில் செயலாற்றுவதற்குள்ள சந்தர்ப்பமும், அனுபவமும் இருப்பின் அது பணியாளர்கள் சங்கங்களின் அமைப்புக்கு உதவியாக இருக்கும் என்று இக்குழு நினைத்தது. ஆகையால் இக்குழு பொதுப்பணியாளர்களின் பலவகைப்பட்ட தரங்களுக்கும், மாறுபட்ட தொகுதிகளுக்கும் பொருந்தும்படியாக விட்லி நிறுவனங்கள் உருவாக்குவதற்கு பரிந்துரை செய்தது. ஆனால் இதுவரையில் இவ்வழியில் எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

## பணியாளர் தொகுதிக் குழுக்கள் (Staff Councils) :

இந்தியாவில் விட்லி குழுக்கள் கிடையாது. ஆனால் விட்வி குழுக்களையொத்த பணியாளர் தொகுதிக்குழுக்கள் உள்ளன. ஒவ்வொரு அமைச்சகத்திலும் இவ்வகைக் குழுக்கள் இரண்டு உள்ளன. இவை முதுநிலைப் (Senior) பணியாளர் தொகுதிக் குழுக்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. முதுநிலைக் குழுவில் அமைச்சரால் நியமிக்கப்பட்ட ஒரு செய்லாளர் அல்லது இணைச் செயலாளரும் அமைச்சகத்தின் அதிகாரிகளினின்று நியமிக்கப்பட்ட அரசுப் பிரதிநிதிகளும், துறையிலுள்ள பிரிவு அதிகாரிகள், உதவியாளர்கள், எழுத்தர்கள், சுருக்கெழுத்தர்கள் போன்ற பணியாளர்களினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் அங்கத்தினராயிருப்பர்.

இப்பணியாளர் தொகுதிக் குழுக்களது குறிக்கோள்கள் பின்வருபவை:

1. பணியாளர்களது பணித்தரத்தை உயர்த்துவதற்கு ஆலோசனை வழங்குதல்.
2. அதிகாரிகள், பணியாளர்கள் ஆகியோர்களிடையே சுமுகமான உறவினை வளர்த்தல்.
3. நமது பணியைப் பற்றிய விஷயங்களை அரசின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்கென பணியாளர்களுக்கு ஒரு வழிமுறையை அமைத்துக் கொடுத்தல்.

பணியாளர் தொகுதிக் குழுக்கள் ஆலோசனை மட்டும் வழங்குகின்றன. இவைகள் பேரம் பேசுவதற்கென அமைந்தவை அல்ல. இவை அரசால் நியமிக்கப்பட்டவர் முன் தமது கருத்தைத் தெரிவிப்பதற்கென, பணியாளர்களால் அமைக்கப்பட்டுள்ள நிறுவனங்கள் ஆகும். இங்கிலாந்தின் விட்லி முறை மாதிரியே இருப்பினும், பணியாளர் தொகுதிக் குழுக்கள் அமைப்பிலும் உணர்விலும் அதுபோலில்லை. இக்குழுக்களில் பணியாளர் சங்கங்கள் அங்கம் வகிக்கவில்லை. இரண்டாவது ஊதிய ஆணையத்தின் பரிந்துரைகள் சரியான முறையில் கவனிக்கப்படவில்லை. பதவி உயர்வு, ஆள் சேர்த்தல், பணிநேரம், பதவிக்காலம், மற்றும் ஊதியம் போன்ற பல பிரச்னைகள் இன்றும் அரசாங்கத்தினால்தான் தீர்மானிக்கப்பட வேண்டியிருக்கிறது. எனவே, இதிலிருந்து இந்தியாவில் விட்லி குழுக்கள் இல்லை என்பது தெளிவாகின்றது. நிர்வாகம் திறமையாக அமைய இந்தியாவிலும் விட்லிக் குழுக்கள் மிகவும் தேவைப்படுகின்றன.

இரண்டாவது ஊதிய ஆணையம், பணியாளர் தொகுதிக் குழுக்களின் செயல் முறையினை மேம்படுத்துவதற்கு கீழ்க்கண்ட சில கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறது.

1. தொழில் மற்றும் தொழில் துறையல்லாத அரசுப்பணியாளர்களைக் கொண்ட ஒரு மத்திய இணைப்புக் குழு நிறுவுதல்.

2. ஊதியம், வேலைநேரம், விடுப்பு போன்ற விஷயங்களைக் கவனிப்பதற்கெனக் கட்டாய நடுவர் தீர்ப்பாயங்களை அமைத்தல்.

3. பணியாளர் தொடர்பு சம்பந்தப்பட்ட முக்கியமான விஷயங்களில் தொழிலாளர் அமைச்சகம் நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருத்தல்.

1960–ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 10–ஆம் தேதியன்று இந்திய அரசாங்கம் பணியாளர் தொகுதிக் குழுக்களை விட்லி குழுக்களுக்கு இணையாகக் கொண்டுவர வேண்டும் என்று ஒரு திட்டத்தை வெளியிட்டது. தேசீயக் கவுன்சில், வட்டாரக் கவுன்சில், துறைக்கவுன்சில் ஆகியவை அடங்கிய ஒரு மூன்று வரிசை நிறுவனம் முன்மொழியப்பட்டது. வட்டாரக் கவுன்சில் வட்டார விஷயங்களைக் கவனிக்கும். துறைக்கவுன்சில்கள் குறிப்பிட்ட துறை சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கவனிக்கும். தேசீயக்கவுன்சில் பணியாளர்களது வேலைச் சூழ்நிலைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கவனிக்கும். அரசாங்கப் பிரதிநிதி ஒருவரும், பணியாளர்கள் பிரதிநிதி ஒருவரும் அடங்கிய ஒரு நடுவர் குழுவும் இருக்கும். 1963–ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம், சட்ட பூர்வமாக இல்லாமல் இந்நிறுவனங்களை நிறுவ வேண்டும் என்ற தனது முடிவினை அரசாங்கம் தெரிவித்தது. தேசீயக்கவுன்சில் தன்னுடைய முதல் கூட்டத்தை 1966–ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடத்தியது. தொடர்ந்து இக்குழுக்கள் தங்களது பங்கினை ஆற்றி வருகின்றன.

மாதிரி வினா :

மத்திய அரசுப் பணி ஆணையத்தின் அமைப்பு, பணிகளை எழுது.

பாடம்–12

# திட்ட ஆணையம்
## (Planning Commission)

எந்தச் செயலும் முறையாகத் திட்டமிட்டுச் செய்தால்தான் சிறப்பாகச் செய்ய முடியும் என்பது உண்மை. இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்தை விரைவில் கொண்டுவர வேண்டுமென அகில இந்திய காங்கிரஸ் மிகவும் தீவிரமாக முயற்சி செய்தது. அம்முயற்சிகளில் ஒன்றுதான் 1938–ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட திட்டக்குழுவாகும். இக்குழுவிற்கு ஜவஹர்லால் நேரு தலைமைதாங்கி இருந்தார். இந்தியாவில் நலிவுற்ற பொருளாதாரத்தைச் சீரமைக்க வேண்டுமென்பதில் இக்குழு மிகுதியான சிரமமெடுத்துச் செயல்பட்டது. இக்குழுவானது பல துணைக் குழுக்களை ஏற்படுத்திச் செயல்பட்டது. இரண்டாம் உலகப்போர் தொடங்கிய சமயத்தில் இக்குழு 10 இடைக்கால அறிக்கைகளையும், 16 முடிவான அறிக்கைகளையும் சமர்ப்பித்தது. உலகமே போரில் ஆழ்ந்து கொண்டிருந்த சமயத்தில், எங்ஙனம் ஆங்கிலேயே அரசாங்கம் இந்தியப் பொருளாதார முன்னேற்றத்தில் ஆர்வம் செலுத்தும்? அறிக்கைகள் மீது யாதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. பின்னர் 1941–ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அரசாங்கம் பல குழுக்களை நியமித்தது. இதன் நோக்கம் என்னவென்றால் நாட்டின் மூலப் பொருட்களை சீராகப் பயன்படுத்தவும், போரினால் ஏற்பட்ட இழப்பைச் சரிக்கட்டவும், பொருட்கள் எளிதில் மக்களுக்குக் கிடைக்கச் செய்வதற்குமென பல நோக்கங்களுக்காக ஏற்படுத்தப்பட்டன. இவை சீராக ஆய்வு நடத்தி, அறிக்கைகளைச் சமர்ப்பித்தன. பின்னர் 1944–ஆம் ஆண்டு தனியாக திட்டமிடல் மற்றும் வளர்ச்சித் துறையானது மத்திய அரசாங்கத்தில் ஏற்படுத்தப்பட்டது. இத்துறையானது மாநில அரசாங்கங்களோடு தொடர்பு கொண்டு, ஏராளமான வளர்ச்சித் திட்டங்களை தீட்டியதும் போரில் நலிவுற்ற பொருளாதாரத்தைச் சீரமைக்க வேண்டுமென்பதே இத்துறையின் முக்கிய நோக்கமாகும். இத்துடன் நில்லாது, உயர் மட்ட திட்டமிடல் ஆலோசனை வாரியத்தை இடைக்கால அரசாங்கம் அமைத்தது. இவ்வாரியம் திட்டமிடலுக்காக திட்டமிடல் ஆணையம் ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென பரிந்துரை செய்தது. மேலும் திட்டமிடல் முறையாகச் செய்ய இயலவில்லை. ஏனெனில் மத்திய–மாநில திட்ட ஒருங்கிணைப்பும், சரியான புள்ளி விபரங்களும் செய்திகளும் கிடைக்கவில்லை. எனவே இடைக்கால அரசாங்கம் செய்த தீவிர முயற்சிகளெல்லாம் எதிர்ப்பார்த்த அளவின்றி சிறிதளவே வெற்றி கிட்டியது.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர், திட்டமிட்டுத்தான் பொருளாதார வளர்ச்சியினைத் துரிதப்படுத்த முடியும் என்பதில் மிகுந்த கவனம் செலுத்தியது. தொழிற்துறையிலும், வேளாண்மையிலும் தன்னிறைவு பெற வேண்டுமென்பதிலும் இந்தியா முழுக்கவனம் செலுத்தியது. தொழில்கள் பற்றிய கொள்கைத் தீர்மானத்தை 1948–ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் வெளியிட்டது. மேலும், திட்டமிடலையும், அது செயலாக்கப்படுகின்றதா என்பதைக் கண்காணிக்கவும் ஒரு தனியான செயலாண்மை தேவை என்பதை இந்திய அரசாங்கம் உணர்ந்தது. இதன் விளைவாக 1950–ஆம் ஆண்டு மார்ச் மாதம் இந்தியத் திட்டமிடல் ஆணையம் ஏற்படுத்தப்பட்டது. இவ்வாணையம் பற்றி அரசியலமைப்பு ஏதும் சொல்லவில்லை. இது ஆட்சித்துறையால், அதாவது அமைச்சரவை தீர்மானத்தின் கீழ் உருவாக்கப்பட்டது.

இந்த ஆணையமானது 7 முழு நேர உறுப்பினர்களைக் கொண்டதாக உள்ளது. இதன் தலைவர் பிரதம மந்திரியாகும். இதில் பகுதிநேர உறுப்பினர்களும் முழுநேர உறுப்பினர்களும் உண்டு. துணைத்தலைவர் பதவிக்கு இவ்வாணையத்தைப்

பொறுத்தவரை அதிகமான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இதுவரை அரசியல் மட்டத் தலைமையும், நிர்வாக அதிகாரிகளும் துணைத் தலைவர்களாகப் பணியாற்றி உள்ளனர். அமைச்சர் தான் அல்லது அரசியல் தலைமைதான் இந்தப் பதவியை அடைய முடியுமென்றோ, மூத்த நிர்வாக அதிகாரிதான் இப்பதவியில் இருக்க வேண்டுமென்றோ எவ்வித நியதியும் வரையறுக்கப்படவில்லை. ஏனெனில் இரண்டு முறைகளிலும் பல நன்மைகளும், சில தீமைகளும் இருக்கத்தான் செய்கின்றன.

திட்ட ஆணையத்தின் செல்வாக்கு அதிகரித்துள்ளது என்ற குற்றச்சாட்டு உள்ளது. எனவேதான் இதனை உயர் அமைச்சரவை (Super Cabinet) என்று வர்ணிக்கப் படுகின்றது. ஏனெனில் திட்ட ஆணையத்தின் தலைவர் பிரதம மந்திரி ஆவார். இவர் தலைமையேற்கும்போது, இயல்பாகவே தனது கருத்தைத்தான் வலியுறுத்த முயல்வர். இதனையடுத்து, திட்ட ஆணையத்தின் உதவித்தலைவர் (Deputy Chairman) பதவி ஆகும். இதனை யார் வகிப்பது என்ற கேள்வியில் இரண்டு பதில்கள் உள்ளன. திட்ட அமைச்சர் உதவித் தலைவராகப் பதவி ஏற்றால் நல்லது என்ற ஒரு கருத்தும், நிர்வாகிகளை பதவியில் அமர்த்தினால் நல்லது என்ற ஒரு கருத்தும் உள்ளது. இந்த இரண்டு கருத்துக்களும் இதுவரை செயல்பட்டும் வந்துள்ளன. பேராசிரியர் காட்கில் (Prof.Gadgil) மற்றும் லக்கடவாலா (Lakadawala) ஆகியோர் திட்ட ஆணையத்தின் உதவித் தலைவர்களாக இருந்து வந்துள்ளனர். லக்கடவாலா ஜனதா அரசாங்கம் மத்தியில் இருந்தபோது நியமிக்கப்பட்டார். பொதுவாக, திட்ட ஆணையம் தன்னிச்சையாகச் செயல்பட வேண்டுமாயின் அரசியல் பிரதிநிதித்துவம் குறைக்கப்பட வேண்டும் என்று கூறப்படுகின்றது. தற்போது அகுல்வாலியா திட்ட ஆணைய உதவித் தலைவராக உள்ளார்.

ஆணைய உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் ஒரு துறையையோ அல்லது பலதுறைகளுக்குள்ள விஷயங்களையோ பொறுப்பாக ஏற்றுக் கொள்ள வேண்டும். நிதி என்றால் அது ஒரு உறுப்பினர் பொறுப்பில் இருக்கும். இதே மாதிரியாக, தொழில் வளம், பாசனம், கல்வி மற்றும் பிற போன்றவைகளாகும். இவற்றை ஒவ்வொரு உறுப்பினரும் பொறுப்பேற்று, தலைமை தாங்கி நடத்த வேண்டும். ஆணையத்தின் முழு நிர்வாகமும், ஒருங்கிணைப்பும் செய்ய வேண்டிய பொறுப்பானது துணைத் தலைவருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. திட்ட அமைச்சர் ஒரு உறுப்பினர் ஆவார். இவர் பிற உறுப்பினர்களைப் போல்தான் அதிகாரம் கொண்டுள்ளார். இவர்தான் பாராளுமன்றத்திற்கும் அமைச்சரவைக்கும் பதில் சொல்லும் பொறுப்புப் பெற்றுள்ளார்.

இந்த ஆணையத்தோடு எவ்வித இணை அலுவலகங்களோ அல்லது துணை அலுவலகங்களோ அமையப்படவில்லை. செயல் திட்ட திறனாய்வு அமைப்பு (Programme Evaluation Organisation) ஒன்று இத்துடன் செயல்படுகிறது. இது தவிர, ஆணையமானது கீழ்க்கண்ட மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

1. செயல்திட்ட ஆலோசகர்கள்
2. பொதுச் செயலகம்.
3. தொழில் நுட்பப்பிரிவு

## செயல்திட்ட ஆலோசகர்கள்:

செயல்திட்ட ஆலோசகர்கள் மூன்று பேர்கள் உள்ளனர். இவர்கள் அரசாங்கத்தின் பதவியின் தன்மையில் கூடுதல் செயலர் அந்தஸ்து கொண்டவர்களாவர். திட்ட

ஆணையத்தின் உறுப்பினர்களுக்கு உதவி செய்தல் இவர்களது பணியாகும். பல்வேறு திட்டங்களை ஆராய, செயல் எல்லை ஆய்வு நடத்த மற்றும் பிற வேலைகளில் இவர்கள் உதவுகின்றனர். திட்ட ஆணையத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளாக உள்ள பெரிய செயல் திட்டங்கள் சீராகச் செயல்படுத்தப் படுகின்றனவா என்பதைக் கவனிப்பதுவும் இவர்களது வேலையாகும். திட்டத்தைச் செயலாக்குவதில், ஒவ்வொரு ஆலோசகரும் முறையே நிதி, மக்களது ஒத்துழைப்பு மற்றும் நிர்வாகம் என தனித்தனியே முறையாகப் பொறுப்பு ஏற்று செயல்படுகின்றனர்.

### பொதுச் செயலகம்:

இச்செயலகமானது கீழ்க்கண்ட பிரிவுகளைக் கொண்டதாக உள்ளது. அவை,

1. நிர்வாகப் பிரிவுகள் (பொதுப் பிரிவு, நிர்வாகப் பிரிவு, அமைப்பு மற்றும் முறைப் பிரிவு, கணக்குப் பிரிவு).
2. திட்ட ஒருங்கிணைப்புப் பிரிவு
3. பொது ஒருங்கிணைப்புப் பிரிவு
4. செய்தி மற்றும் விளம்பரப் பிரிவு (இதற்கு செய்தித் துறை இயக்குநர் தலைவர்)

### தொழில்நுட்பப் பிரிவுகள்

இப்பிரிவானது, திட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ள பெரிய திட்டவேலைகள், திட்டங்கள், போன்றவற்றை பரிசீலித்து, ஆய்வு செய்வது முதல் கடமை. இரண்டாவதாக, திட்டவேலைகள் மற்றும் செயல் திட்டங்கள் மீதாக தொழில் நுட்ப ஆய்வும் பரிசீலனையும் செய்தல். மூன்றாவதாக, திட்டம் குறித்து பரிசீலனை செய்வதையும், திட்ட அறிக்கையும் தயாரிப்பது, திட்டங்களை மேற்கொள்வது ஆகியன முக்கிய செயல்களாகும். தொழில்நுட்பப் பிரிவுகளுக்கு தொழில்நுட்ப வல்லுனர்கள் தலைவர்களாக அந்தந்த துறையில் நியமிக்கப்பட்டுள்ளனர். தொழில் நுட்பப் பிரிவுகளில் சில.

1. பொருளாதாரப் பிரிவு 2. கல்விப் பிரிவு 3. உணவு மற்றும் வேளாண்மைப் பிரிவு 4. சுகாதாரப் பிரிவு. 5. தொழில் மற்றும் தாதுப் பொருட்கள் பிரிவு. 6. தொழிலாளர் வேலை வாய்ப்புப் பிரிவு 7. நிலச் சீர்த்திருத்தப் பிரிவு 8. இயற்கைப் பொருட்கள் பிரிவு 9. போக்குவரத்து, தொடர்பு பிரிவு 10. கிராம சிறுதொழில் பிரிவு 11. செயல்திட்ட நிர்வாகப் பிரிவு. 12. புள்ளியியல், மதிப்பாய்வுப் பிரிவு 13. உள்ளாட்சி வேலைப் பிரிவு 14. வீட்டு வசதிப் பிரிவு 15. அறிவியல், தொழில் துறை ஆய்வுப் பிரிவு 16. சமூக நல்வாழ்வுப் பிரிவு 17. பொது வேளாண்மைப் படிப்புப் பிரிவு 18. வளர்ச்சித் திட்டப் பிரிவு 19. அறிவியல், தொழில் நுட்ப மனிதவளப் பிரிவு 20. மதுவிலக்கு 21. வெளிநாட்டு வியாபார வளர்ச்சிப் பிரிவு.

### செயல் திட்டத் திறனாய்வு அமைப்பு (Programme Evaluation Organisation):

இந்த அமைப்பு 1952–ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் ஏற்படுத்தப்பட்டது. சமுதாய வளர்ச்சித் திட்டத்தை, நேரத்திற்கு நேரம் மதிப்பாய்வு செய்து, முடிவுகளைத் தெரிவிக்க வேண்டியது இதன் கடமையாகும். இத்திட்ட ஆணையத்தோடு இணைக்கப்பட்டு இருந்தாலும், இது தன்னிச்சையான அமைப்புத்தான் ஆகும். இதற்கு உதவி செய்ய, செயல்திட்ட திறனாய்வு வாரியம் அமைக்கப்பட்டுள்ளது. செயல்திட்ட திறனாய்வு அமைப்பின் முக்கிய கடமைகளாவன:

1. முறையான ஆய்வின் மூலமாக, சமுதாய வளர்ச்சித் திட்டத்தை மதிப்பீடு செய்து, அதன் வளர்ச்சியை அப்போதைக்கப்போது அறிக்கைகள் மூலமாகத் தெரிவித்தல்.
2. செயல் திட்டத்தில் சீராகச் செயல்படுகின்ற செயல் முறைகள் குறித்துக் கூறுதல். திறமையில்லாத, சீரில்லாத செயல்முறைகளை நீக்கும்படி கூறல்.
3. இந்தியப் பொருளாதாரத்திலும், கலாச்சாரத்திலும் ஏற்படும் மாற்றங்களை அறிந்து தெரிவித்தல்.
4. திட்ட ஆணையமானது ஆலோசனை அமைப்பாகவே செயல்பட்டாலும், இதற்குத் துணைபுரிய கீழ்க்கண்ட ஆலோசனை அமைப்புக்கள் உள்ளன. அவை,
   1. தேசிய வளர்ச்சி மன்றம்.
   2. திட்ட வேலைகள் குழு
   3. பாசனம் மற்றும் விசைக் குழு
   4. பொது ஒத்துழைப்பு ஒருங்கிணைப்புக்குழு

## தேசிய வளர்ச்சி மன்றம் (National Development Council):

இந்தியாவில் எல்லாப் பகுதிகளும் சமமாக, ஒருங்கிணைந்த வளர்ச்சி பெற, ஆலோசனை கூறக் கூடியதாக இம்மன்றம் உள்ளது. பொருளாதார மூலப்பொருட்கள் பொதுவான வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் வகையில் இம்மன்றம் ஆலோசனை சொல்லும். இம்மன்றத்தில் எல்லா மாநில முதல்வர்களும், திட்ட ஆணைய உறுப்பினர்களும் இடம் பெற்றுள்ளனர். பிரதம மந்திரிதான் இதன் தலைவர். திட்ட ஆணையத்தின் செயலர்தான் இம்மன்றத்திற்கும் செயலர் ஆவார். இதன் முக்கிய பணிகள் :

1. தேசியத் திட்டங்களை நேரத்திற்கு நேரமாக புனராலோசனை செய்தல்.
2. தேசிய வளர்ச்சியைப் பாதிக்கும் சமூக, பொருளாதாரக் கொள்கைகளைப் பரிசீலனை செய்தல்.
3. தேசியத் திட்டத்தில் வரையறுத்துள்ள குறிக்கோள்களை அடைய அறிவுரை, ஆலோசனை கூறல்.

## திட்ட செயல் வேலைகள் குழு (Committee on Plan Projects) :

இக்குழுவானது 1956–ஆம் ஆண்டு ஏற்படுத்தப்படடது. இதற்கு உள்துறை அமைச்சர் தலைவராவார். நிதியமைச்சர், திட்ட அமைச்சர், ஆகியோர்களும் இதன் உறுப்பினர்களாவர். பிரதம மந்திரி, தேசிய வளர்ச்சி மன்றத்தில் தலைவராகையால், இரண்டு மாநில முதல்வர்களை இதில் உறுப்பினர்களாக நியமிக்கிறார். இதன் செயல்கள்:

1. மத்திய மற்றும் மாநிலங்களில் நடைபெற்று வரும் பெரிய வேலைகள் ஆய்வுக்குழு மூலமாக புனராய்வு செய்தல். இந்த ஆய்வுக் குழுவில் தொழில்நுட்ப வல்லுனர்களும், அரசியல் தலைவர்களும் இடம் பெற்று இருப்பர்.

2. செயல் வேலையானது திறமையாகவும், சிக்கனமாகவும், செயல்படுவதற்கு வேண்டிய அமைப்பு முறைகள் மற்றும் நுட்பங்களை அறிந்து, பரிந்துரைத்தல்.

3. எல்லா செயல்திட்டங்களிலும் திறமை பராமரிக்கப்படுகின்றனவா என்பதைக் கண்காணித்தல்

4. அறிக்கைகளின் மீது சீராக நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றனவா என்பதைக் கவனித்தல்

5. தேசிய வளர்ச்சி மன்றம் அப்போதைக்கப்போது தெரிவிக்கின்ற பிற வேலை களிலும் இது ஈடுபடும்.

## பாசன, விசை ஆலோசனைக் குழு :

இக்குழுவிற்கு திட்ட துணை அமைச்சர் தலைவராக உள்ளார். மத்திய நீர், விசை ஆணையம், பாசன, விசை அமைச்சர், நிதி அமைச்சர் மற்றும் மத்திய பாசன, விசை வாரியம் ஆகியவற்றிலிருந்து ஒவ்வொரு உறுப்பினர் இதில் பிரதிநிதித்துவம் பெறுகின்றனர். இதன் வேலையானாது.

1. செயல் திட்டங்கள் முழுவதும் புனராய்வு செய்யப்பட்டு தயாரிக்கப்பட்டனவா?

2. மதிப்பீடுகள் தொழில் நுட்ப வகையில் முழுமையாகவும், சரியாகவும் தயாரிக்கப்பட்டு உள்ளனவா?

3. சரியான செய்திகள் மூலம் நிதி வரவு செலவுகள் அனுசரிக்கப்பட்டுள்ளனவா என்பதை கவனிப்பது ஆகும்.

## பொது ஒத்துழைப்பு ஒருங்கிணைப்புக் குழு:

இது 1952–ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. இதன் முக்கிய வேலையானது, பொது மக்களது ஒத்துழைப்பை எங்ஙனம் பெறலாம் என்பது பற்றி பரிசீலனை செய்யும். இதில் அரசியல் தலைவர்கள், அதிகாரிகள் போன்றோர் இடம் பெற்றுள்ளனர். ஆய்வுக் குழுக்கள் ஏற்படுத்திச் செயல்படக் கூடியதாகும்.

## திட்ட ஆணையத்தின் பணிகள்:

1. நாட்டின் பொருளாதாரம், மூலதனம், மனித சக்திகள், தொழில் நுட்பப் பணியாளர்கள் உட்பட அனைத்தையும் மதிப்பீடு செய்து அவை நாட்டினுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் அளவில் உள்ளனவா, குறைவாக உள்ளனவா என்பதை மதிப்பீடு செய்தல்.

2. நாட்டின் மூலப் பொருட்கள் அனைத்தையும் முறையாகவும் திறமையாகவும் பயன்படுத்தத் திட்டம் உருவாக்கல்.

3. முன்னுரிமை எவற்றிற்கு வழங்க வேண்டுமென்பதையும், திட்டங்களை செயல்படுத்த பல பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியும் நிறைவேறுவதற்குண்டான மூலப் பொருள்கள் ஒதுக்கீடு செய்தல்.

4. பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும் சக்திகள் பற்றித் தெரியப்படுத்தி, நிலவக்கூடிய சமூக, பொருளாதாச் சூழ்நிலைக்கேற்பத் திட்டத்தை வெற்றிகரமாகச் செயல்படும் வண்ணம் அமைத்தல்.

5. ஒவ்வொரு பிரிவிலும் திட்டத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்தும் நிர்வாக அமைப்பைத் தீர்மானித்தல்.

6. ஒவ்வொரு பிரிவிலும் செயலாக்கத்தை நேரத்திற்கு நேரம் மதிப்பீடு செய்து அதன் முன்னேற்றத்தைக் கண்காணித்தல். அங்ஙனம் மதிப்பாய்வு செய்யப்படும் போது அந்தச் சூழ்நிலைக்கேற்பச் செம்மையாகச் செயல்படக் கருத்துக்களும் வழுங்கப்படும்.

7. நிலவுகின்ற பொருளாதார நிலை, அன்றைய கொள்கைகள், நடவடிக்கைகள் மற்றும் வளர்ச்சித் திட்டங்கள் ஆகியவற்றிற்கேற்ப இடைக்கால பரிந்துரைகள் செய்யப்படலாம். சில பிரச்சனைகளின் வேலைகளைத் துரிதமாக்குவதற்காக, மேற்படி பிரச்சனை சம்பந்தப்பட்ட மைய அல்லது மாநில அரசாங்கங்களின் ஆலோசனைகளையும் பெறுதல் ஆகியனவாகும்.

திட்ட ஆணையத்திற்குச் சட்ட அடிப்படையிலான நிலை தரப்பட வேண்டிய இன்றியமையாமை பற்றி, நான்காம் நிதி ஆணையத் தலைவர் தமது அறிக்கையின் துணைக் குறிப்பில் கீழ்க்கண்டவாறு வலியுத்தியுள்ளார்.:

திட்ட ஆணையம் போன்ற ஓர் அமைப்பிற்கு அரசியலமைப்புச் சட்டத்தில் இடமில்லை. இந்திய அரசால் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின் மீது அது அமைக்கப் பெற்றது. அவ்வாணையத்தின் உறுப்பினர்கள் எண்ணிக்கை பற்றியோ, உறுப்பினர்கள் தகுதிகள் பற்றியோ வரையறை செய்யப் பெறவில்லை. தனது விருப்பப்படி, அவ்வாணையத்தின் எண்ணிக்கையை மாற்றியமைக்கவும், யாரை வேண்டுமானாலும் உறுப்பினராக நியமிக்கவும் அரசு சுதந்திரம் பெற்றுள்ளது. அவ்வாணையம் செயல்படும் கால எல்லை பற்றிய வரையறையுமில்லை. அது நியமிக்கப்பட்ட காலத்தில், ஒரு தற்காலிக அமைப்பாகச் செயல்பட்டு வரும் என்றுதான் கருதப்பட்டிருக்க வேண்டும். ஒரு விதத்தில் அவ்வாறே அது இப்போதும் செயல்பட்டு வருகிறது. எனினும், அது நின்று நிலைத்து விட்டது என்பது வெளிப்படை.. ஆலோசனை வழங்கும் ஓர் அமைப்பாகச் செயல்பட்டாலும், இவ்வாணையம் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கதும் முக்கியமானதுமாகும். இவ்வளவு முக்கியத்துவம் இருந்தும், அரசிற்கும் இதற்கும் தொடர்பு என்னவென்று தெளிவாக வரையறுக்கப்படவில்லை. திட்டமிடுதல் பற்றி கொள்கை வகுத்தல், செயல்முறை வகுத்தல் ஆகியவை திட்ட ஆணையத்தின் அதிகார வரம்பிற்குள் வருகின்றன. மானியங்களாகவும், கடன்களாகவும் திட்டப்பணிகளுக்கு பரிந்துரைகளைப் பொறுத்தே நடைபெறுகிறது. அரசோடு தொடர்பில்லாத வகையில், சுதந்திரமாகச் செயல்படும் சட்டமுறை அமைப்பாகத் திட்ட ஆணையம் செயல்பட வேண்டும்.

திட்ட ஆணையத்தின் பங்கு பற்றி, 1969–ஆம் ஆண்டு மார்ச் திங்களில் தாம் நிகழ்த்திய லால்பகதூர் சாஸ்திரி நினைவுச் சொற்பொழிவுகளில், டாக்டர் கோ.சுப்பாராவ் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:

"......................இந்தியாவில் அமைக்கப் பெற்ற திட்ட ஆணையம், அரசியலமைப்புச் சட்ட விதிமுறைகளுக்கு முரணாக செயல்பட்டது. ஒரே கட்சி, மாநிலங்களிலும்,

மையத்திலும் அதிகாரத்தில் இருந்ததால் இது சாத்தியமாயிருந்தது. மைய அரசின் அமைச்சர்கள் பலருடைய நெருங்கிய தொடர்பைப் பெற்றிருந்தாலும், தேசத்தின் பொருளாதாரத்தைக் கட்டியாளும் அதிகாரத்தைப் பெற்றிருந்தாலும், இது மதிப்பில் உயர்ந்து நின்றது. ஆண்டு பலவாக இது அமைச்சரவைக்கும் மேற்பட்ட ஓர் அமைப்பாக உருவெடுத்துவிட்டது. திட்ட ஆணையத்தின் மூலமாக, மாநிலப் பகுதிக்கான திட்டத்தையும் அதைச் செயல்படுத்தும் அதிகாரத்தையும் மைய அரசு தன்னிடமே வைத்துக் கொண்டது.

திட்ட ஆணையம் தயாரித்த வரைவு திட்டத்தில் கூறப்பட்டுள்ள இலக்குகளுக்கு ஏற்ப, மாநிலங்கள் தங்கள் பகுதிகளுக்குத் திட்டங்களை வகுத்த போதிலும், திட்ட ஆணையமும் மாநிலங்களின் பிரதிநிதிகளும் கலந்து பேசிய பின்பே திட்டங்கள் இறுதியாக்கப்படுகின்றன. திட்டங்களை உருவாக்குவதிலும், அவற்றைச் செயல்படுத்து வதிலும் மாநிலங்களை ஆட்டிவைக்க மைய அரசால் இயலுகிறது. காரணம், 282–ம் பிரிவின்படி மாநிலங்களுக்கு மைய அரசு தன் விருப்பப்படி வழங்கலாகும் மானியங்களே. இவ்வாறு மைய அரசு உயர் அதிகாரம் பெற்றுள்ளது.

மேலும் மாநிலத் திட்ட வேலைகளுக்காக மைய அரசு வழங்கும் உதவி எந்த அடிப்படையில் அமைதல் வேண்டும் என்பது 1969–ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் தேசிய வளர்ச்சி மன்றத்தின் முதலமைச்சர்கள் குழுவால் மாநில அரசுகளின் விருப்பத்திற்கிணங்க ஆராயப் பெற்றது. தேசீய வளர்ச்சி மன்றத்தால் வரையறுக்கப் பெற்ற நிதி உதவிக் கொள்கைகள் மைய அரசால் ஏற்றுக் கொள்ளப் பெற்றன. ஐந்தாண்டுத் திட்டங்களுக்கான நிதி உதவி கீழ்க்கண்ட அடிப்படையில் பங்கீடு செய்யப் பெறவேண்டும்.

அ. மக்கள் தொகை அடிப்படையில் 60 சதவீதம்.

ஆ. பத்து சதவீதம் கீழ்க்கண்ட அடிப்படையில்

1. தேசீய சராசரிக்குக் கீழே இருந்தால், ஓராளுக்குள்ள வருமானம்.
2. ஓராள் வருமானத்தைப் பொறுத்த வரி முயற்சிகள்
3. மின்சார, நீர்ப்பாசனப் பெருந்திட்டங்களுக்கான செலவுகள்
4. வெள்ளங்கள், என்றும் வறண்டபகுதிகள், மலைவாசி பகுதிகள் ஆகியவை கொண்ட மாநிலங்களின் தனிப்பிரச்சனைகள்.

1969–70 முதல் செயல்பட.த் தொடங்கியுள்ள புதுத்திட்டப்படி, தேசிய வளர்ச்சி மன்றம் நிர்ணயித்துள்ள அடிப்படையில் மாநிலங்களுக்கு மைய அரசு திட்ட உதவி செய்தது. இவ்வுதவி, மானியங்களாகவும் கடன்களாகவும் மொத்தமாகக் கொடுக்கப்பட்டன. குறிப்பிட்ட திட்டங்களுக்குத்தான் செலவிட வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. எனினும் கல்வி, வேளாண்மை போன்ற துறைகளைச் சார்ந்த பெருந்திட்டங்களாயின், மைய அரசின் ஒப்புதலைப் பெறுதல் வேண்டும். இவ்வாறாக, மாநில அரசாங்கங்களுக்கு உதவுகிறது.

திட்டங்களை முதலில் திட்ட ஆணையம் மாநிலங்களுடன் கலந்தாலோசித்து ஒரு தோராய திட்டத்தை உருவாக்குகிறது. இது தேசிய வளர்ச்சி மன்றத்தின் முன் வைக்கப்படுகிறது. தேசிய வளர்ச்சி மன்றம் பல திருத்தங்களை, புதிய கருத்துக்களை

வைக்கும். இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு, திட்ட நகலை திட்ட ஆணையம் தயாரித்து, அமைச்சரவையில் வைக்கிறது. அமைச்சரவை ஆய்ந்த பின்னர் திட்டம் தேசிய வளர்ச்சி மற்றும் பாராளுமன்றத்தில் வைக்கப்படுகிறது. இவ்வாறு திட்டங்கள் தயாரிக்கப்படுகிறது.

இதுவரையிலும் ஒன்பது ஐந்தாண்டு திட்டங்களைத் தீட்டி, இன்று பத்தாவது ஐந்தாண்டுத் திட்டம் தயாரிக்கப்படுகிறது. இதற்கிடையே வருடாந்திர திட்டங்கள் சில ஆண்டுகளில் செயல்படுத்தப் பட்டன. இவ்வாறு ஐந்தாண்டுத் திட்டமும் வருடாந்திர திட்டமும் ஒருங்கே அமைந்துள்ளது.

ஜனதா ஆட்சியிலிருக்கும்போது, புதிதாக சுழற்சித் திட்டம் (Rolling Plan) என்ற வருடாந்திரத் திட்டத்தை அமுல்படுத்தியது. சுழற்சித்திட்டம் என்பது செயல்திறன் திட்டமாகும். ஒவ்வொரு ஆண்டு முடிவிலும் திட்டம் செயல்படுத்தப்பட்டதை அறிந்து, ஆராய்ந்து அடுத்த ஆண்டிற்கு நீட்டிப்பதுவும், குறைப்பதும் திட்டம் செயல்படுத்துவதைப் பொறுத்ததாகும். இத் திட்டத்தில் நிறைகளும் குறைகளும் உள்ளன. தற்போது (2002–2007) 10வது ஐந்தாண்டுத் திட்டம் செயல்படுகின்றது.

மாதிரி வினா :

திட்ட ஆணையத்தின் அதிகாரங்கள் யாவை?

பாடம்–13

# பொதுத்துறை நிறுவனங்கள்
## (Public Sector Undertakings)

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி இந்தியாவில் ஏற்பட வேண்டுமாயினும், மக்களுக்கு அடிப்படைத் தேவைகளை நிவர்த்தி செய்ய வேண்டுமாயினும், அரசாங்கம் பொருளாதாரத் துறையில் நேரடியாக இறங்க வேண்டும். பொருளாதாரச் செயல்களை ஒழுங்குபடுத்துவதன் மூலமாக ஓரளவுதான் வளர்ச்சிக்கு உதவமுடியும். நேரடியாக பொருளாதாரச் செயல்களை ஏற்று நடத்தினால்தான் வளர்ச்சியை விரைவாகக் கொண்டு வர முடியும். அரசாங்கம் சில பொருளாதாரச் செயல்களை ஏற்று நடத்தினால் தனிநபர்களின் உரிமை பாதிக்கப்படும். தனிநபர்கள் பொருளாதாரச் செயல்களில் அக்கறை எடுத்துக் கொள்ளமாட்டார்கள் என்பது 19–ஆம் நூற்றாண்டின் தத்துவம். இன்று தனிநபர் அரசாங்கத்தோடு உற்பத்தியில் போட்டியிடவேண்டும். அரசாங்கமும் தனிநபர்களோடு உற்பத்தியில் போட்டியிடவேண்டுமென்பது தான் இன்றைய நிலை. இவ்வாறு அரசாங்கம் பொருளாதார செயல்களில் ஈடுபட ஆரம்பித்ததால், தான் கொண்டிருந்த மரபார்ந்த நிர்வாக அமைப்புக்களை மாற்றி, பொருளாதாரச் செயல்களுக்கேற்ப நிர்வாக அமைப்புக்களை மாற்றிக் கொண்டுள்ளன.

இந்தியாவைப் பொறுத்தவரை, திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி என்பது 1947–க்குப் பின்னர்தான் வந்தது என்று சொன்னால் தவறாகாது. ஆனால் சுதந்திரம் பெறுவதற்கு முன்னதாகவே, சில நடவடிக்கைகளை பம்பாய் திட்டம் போன்றவை இருந்தது. முதல் உலகப் போருக்குப் பின்னரும், நலிந்த பொருளாதாரத்தை விரைவில் சீரமைக்க வேண்டுமெனப் பொருளாதாரத் திட்ட வளர்ச்சி மேற்கொள்ளப்பட்டது. இந்திய தேசிய காங்கிரசும் தேசியத் திட்டங்களை அமைத்து திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு ஊக்குவித்தது. இதன் பின்னர் அரசியலமைப்பில் வழிகாட்டு நெறிக் கொள்கைளில் திட்டமிட்ட வளர்ச்சியின் முக்கியத்துவம் கூறப்பட்டுள்ளது.

இந்தியாவின் பொருளாதாரக் கொள்கையானது கலப்புப் பொருளாதாரம் (Mixed economy) என்பதாகும். இதன்படி சில உற்பத்தித்துறைகள் அரசாங்கத்தின் தனியுரிமையிலும், சில உற்பத்தித் துறைகள் தனியார்களிடமும், மற்றும் பிற துறைகளை அரசாங்கமும் தனி நபர்களும் சேர்ந்து செய்யக்கூடியனவாகும். உதாரணமாக, போர்ப் படைக் கருவிகள், அணுசக்தி உற்பத்தி, இரயில்வே போன்றவை அரசாங்கத்தின் தனியுரிமையில் உள்ளன. நிலக்கரி, தாதுப்பொருட்கள், இரும்பு, உருக்கு, விமானம், கப்பல் தயாரிப்புக்கள், தொலைபேசி, தந்தி சாதனங்கள் ஆகியவை அரசாங்கத்திடம் உள்ளன. மற்ற தொழில்கள் தனியார்களிடமும் உள்ளன. தனியாரும் அரசாங்கமும் ஒத்துழைத்து இந்தியப் பொருளாதாரத்தை வளர்க்க வேண்டுமென்பது தான் கலப்புப் பொருளாதாரத்தின் தத்துவமாகும்.

### இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பாகப் பொது நிறுவன வளர்ச்சி :

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பாக பொது நிறுவன வளர்ச்சி அவ்வளவாக இல்லை. ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு, நமது நாடு தொழில் ரீதியாக உலக நாடுகளில் மிக அதிக வளர்ச்சி பெற்ற நாடாக விளங்கியது. இந்த வளர்ச்சி அரசர்களும், பேரரசர்களும், தொழில் நிறுவனங்களுக்கு வழங்கிய உதவிகளால் ஆகும். ஆனால் அரசு பொது நிறுவனங்களை நேரடியாகத் தலையிட்டு தொழில் வளர்ச்சியில்,

பங்கு வகிக்கவில்லை. ஆனால் இன்று தொழில் நிறுவனங்களுக்கு அரசாங்கப் பாதுகாப்பும் அரசாங்க சலுகைகளும் காணப்படுகிறது.

பிரிட்டிஷ் ஆண்டு வந்த காலத்தில் குறைந்த அளவில் தொழில் நிறுவனங்களில் அரசாங்கம் பங்கேற்றது. இந்தியாவில் கிளைவ் பிரபு 1766—ஆம் ஆண்டு தபால் துறையை அறிமுகப்படுத்தினார். 1774 ஆம் ஆண்டு டல்ஹௌசி தபால் துறையை விரிவாக்கினார். 1854 ஆம் ஆண்டில் தபால்துறை பொது இயக்குனரின் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டது. இதே போன்று 1851—ஆம் ஆண்டு கல்கத்தாவில் தந்தி முறை அறிமுகப்படுத்தப்பட்டது.

நைனிடாவில் 1907—ஆம் ஆண்டு ஒரு தொழில் மாநாடு கூட்டப்படடது. இந்த மாநாட்டில் அரசாங்கம் தொழில் வளர்ச்சியில் உதவி செய்யவேண்டும் என்ற முடிவு எடுக்கப்பட்டது. அந்த அடிப்படையில் அரசாங்கத் தொழில் கொள்கை, அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட ஆணையங்கள் மூலமாக வகுக்கப்பட்டது. முக்கியமாக 1916—ல் ஏற்படுத்தப்பட்ட தொழில் ஆணையத்தையும், 1921—ல் ஏற்படுத்தப்பட்ட நிதி ஆணையத்தையும் குறிப்பிடலாம். இந்த ஆணையங்கள் ஒரு புதியத் தொழில் கொள்கையை வகுத்தன. பிரிட்டிஷ் அரசாங்கம் 1945—ஆம் ஆண்டு, நாட்டின் தொழில் வளர்ச்சியை வளர்ப்பதற்கு அரசாங்கம் வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டும் என்று முடிவெடுத்தது. இந்திய தேசிய காங்கிரசும் அரசாங்கப் பங்கேற்பின் மூலமாக பொருளாதார நிலையை வளர்க்க வேண்டும் என்று கருதியது. இவ்விதமாக, அரசாங்கம் பங்கேற்று பொது நிறுவனங்களை ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம், இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பே ஏற்பட்டது. இந்திய இரயில்வே துறை, பிரிட்டிஷ் கட்டுப்பாட்டில் இருந்தது. இந்தியா இத்துறையை தேசியமயமாக்கி அரசாங்கத் துறையாக மாற்றியது. இந்திய அரசாங்கம் இரயில்வே துறையை ஏற்கும் முன்பாக இரயில்வேயை ஏற்படுத்துவதில் பிரிட்டிஷ் அரசாங்கம் தனியார் நபர்களுக்கு உரிமம் வழங்கியது. காலப்போக்கில் தனியார் நபர்களிடமிருந்து பிரிட்டிஷ் அரசாங்கம் தன்வசம் எடுத்துக் கொண்டது. பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து இரயில்வே துறையை நாம் முன்பு கூறியது போல இந்திய அரசாங்கம் இரயில்வே துறையை தேசியமயமாக்கி அரசாங்கத் துறையாக மாற்றிக் கொண்டது.

இதே போன்று 1834 ஆம் ஆண்டு, இராணுவத் தளவாடத் தொழிற்சாலை, பிரிட்டிஷ் அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்டது. அதன் பிறகு, இராணுவத்துறைக்குத் தேவையான பொருட்களைத் தயாரிக்கக் கூடிய தொழிற்சாலைகள் அரசாங்கப் பொறுப்பிலேயே இயங்கிவந்தன. இன்றும் கூட பல இராணுவத் தளவாடப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் பொது நிறுவனங்களாக அரசாங்கக் கட்டுப்பாட்டில் இயங்கி வருகின்றன. இதற்கு முக்கியக் காரணம் பிரிட்டிஷ் அரசாங்கம் தனியார் நபர்களை நம்பாதது தான். இராணுவத்திற்குத் தேவையான கருவிகளை தயாரிக்கும் பொறுப்பு இந்த தொழிற்சாலைகளுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன.

## இந்தியா சுதந்திரம் அடைந்த பிற்பாடு பொது நிறுவனங்களின் வளர்ச்சி :

இந்தியா சுதந்திரம் அடைந்த பிற்பாடு பொது நிறுவனங்களில் ஏற்பட்ட வளர்ச்சி, அரசாங்கத்தால் வகுக்கப்பட்டட தொழில்கொள்கை அறிக்கைகள், மற்றும் தீர்மானங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் ஏற்பட்டது. இந்த அறிக்கைகளும் தீர்மானங்களும் அகில இந்தியக் காங்கிரஸ் குழுவால் சமர்ப்பிக்கப்பட்டவை.

1948 ஆம் ஆண்டு வகுக்கப்பட்ட தொழில் கொள்கைத் தீர்மானம் அணுசக்தி உற்பத்தி மற்றும் கட்டுப்பாடு, இரயில்வே போக்குவரத்து மேலாண்மை மற்றும் உரிமை, மத்திய அரசாங்கத்தினுடையதாக விளங்க வேண்டும் என்று குறிப்பிட்டது. இன்னும் ஆறு தொழில் நிறுவனங்கள் அரசின் கட்டுப்பாட்டில் மட்டும் தான் இயங்கவேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. இந்த ஆறு நிறுவனங்களில் அடங்குபவை நிலக்கரி, இரும்பு மற்றும் எஃகு, விமான உதிரிபாக உற்பத்தி, கப்பல் கட்டுதல், தொலைபேசிகளைத் தயாரித்தல், தொலைத்தொடர்பு சம்பந்தப்பட்ட உபகரணங்கள், எண்ணெய் தாதுப்பொருட்கள் ஆகியவைகள் ஆகும்.

1956–ல் வகுக்கப்பட்ட தொழில் கொள்கைத் தீர்மானம் பொது நிறுவனத்தினுடையப் பணிப்பங்கை விரிவாக்கியது. அரசாங்கத்தினுடைய குறிக்கோள் சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்தி அதன் மூலமாக திட்டமிட்ட பொருளாதார துரித வளர்ச்சியை, ஏற்படுத்த அதிக அளவில் அரசாங்கம், பொது நிறுவனங்களை ஏற்படுத்த வேண்டும் என்று குறிப்பிட்டது. பெரிய அளவில் மூலதனம் தேவைப்படும் தொழில் நிறுவனங்களை அரசாங்கமே நிறுவவேண்டும் என்று கருதப்பட்டது. எதிர்காலத் தொழில் வளர்ச்சிக்கு அரசு நேரடி பொறுப்பை வகிக்க வேண்டும் என்று கருதப்பட்டது. பட்டியல் 'ஏ' யில் அடங்கும் பதனிடும் தொழிற்சாலைகள், எதிர்கால வளர்ச்சிக்கு என்று ஏற்படுத்தப்பட வேண்டியவை. இவைகள் அரசாங்கக் கட்டுப்பாட்டில் ஏற்படுத்தப்பட வேண்டியவை. இப்பொழுது பட்டியல் 'ஏ' ல் குறிப்பிடப்பட்டுள்ள தொழிற்சாலைகளைப் பற்றி காணலாம்.

பட்டியல் 'ஏ'யில் காணப்படும் முக்கிய தொழில் நிறுவனங்கள் :–

1. இராணுவ தளவாடத்திற்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள்.
2. அணுசக்தி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள்.
3. இரும்பு மற்றும் எஃகுத் தொழிற்சாலைகள்.
4. கனரக மின் நிலையங்கள்.
5. நிலக்கரி மற்றும் பழுப்பு நிலக்கரித் தொழிற்சாலைகள்.
6. எண்ணெய் தாது, எண்ணெய் தாதுப்பொருள்கள் தொழிற்சாலைகள்.
7. மற்ற உலோகத் தாதுப்பொருள் தொழிற்சாலைகள்.
8. விமானத் தளவாடத் தொழிற்சாலைகள்.
9. கப்பல் கட்டும் தொழிற்சாலைகள்.
10. தொலைத் தொடர்பு தொழிற்சாலைகள்.
11. மின் உற்பத்தித் தொழிற்சாலைகள்.

## பட்டியல் 'பி' ல் காணப்படும் சில தொழிற்சாலைகள்

1956 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட தொழில் கொள்கைத் தீர்மானம் பட்டியல் 'பி'ல் குறிப்பிடப்பட்டுள்ள 12 தொழில நிறுவனங்களை அரசாங்கம் ஏற்படுத்த வேண்டும் என்றும் குறிப்பிட்டு இருக்கிறது. அவற்றுள் அடங்கும் முக்கியத் தொழிற்சாலைகள் கீழ்க் கண்டவைகள் ஆகும்.

1. இயந்திரப் பாகங்கள்.

2. எஃகு இயந்திரப் பாகங்கள்.

3. இராசயனத் தொழிற்சாலைகளுக்குத் தேவையான அடிப்படைப் பொருட்கள்.

4. அத்தியாவசிய மருந்துப் பொருட்கள்.

5. உரத் தொழிற்சாலைகள்.

6. இராசாயனப் பல்புகள்.

7. தரைப் போக்குவரத்து

8. கப்பல் போக்குவரத்து.

9. சிந்தடிக் இரப்பர் தொழிற்சாலைகள்.

கடந்த 55 ஆண்டுகளில், பொது நிறுவனங்களின் விரிவாக்கமும் திட்டமிட்ட வளர்ச்சியும் ஏற்பட்டுள்ளன. தனியார் நிறுவனங்களை தேசியமயமாக்கி பலப் பொது நிறுவனங்களை அரசாங்கம் நிறுவி இருக்கின்றன.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அரசாங்கம் சமூக மற்றும் பொருளாதாரப் பொறுப்புகளில் அதிக விரிவாக்கம் வேண்டும் என்றுக் கூறப்பட்டது. மக்களுடைய சட்டபூர்வமான எதிர்ப்பார்ப்புகளை நிறைவு செய்வதற்கு இது அவசியம் என்று கருதப்பட்டது. 1948–ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்திய தொழில் கொள்கைகளை முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் சுட்டிக்காட்டிப் பொது மற்றும் தனியார் நிறுவனங்கள், பொருளாதார வளர்ச்சியில் ஈடுபடவேண்டும் என்று குறிப்பிட்டது தனியார் நிறுவனங்கள். பொது நோக்கத்தை மையமாக வைத்துச் செயல்பட வேண்டும் என்றும் குறிப்பிட்டது. பொது நிறுவனங்களும் தனியார் நிறுவனங்களும் சமூகக் கண்ணோட்டத்தில் செயல்பட்டு, பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்றும் குறிப்பிட்டது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 1956–ஆம் ஆண்டின் தொழில் கொள்கைத் தீர்மானத்திற்குப் பின்பு வகுக்கப்பட்டது. இந்தத் தொழில் கொள்கைத் தீர்மானத்தின் அடிப்படையிலேயே, பொது நிறுவன வளர்ச்சி இருக்கவேண்டும் என்று இாண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கருதப்பட்டது. பாசனவசதி, மின்உற்பத்தி, போக்குவரத்து போன்ற பொது நிறுவனங்களில் அரசாங்கம் முதலீடு செய்யவேண்டும் என்றுக் குறிப்பிடப்பட்டது. பொருள் உற்பத்தியை மையமாக உடைய தொழில்கள், தனியார் நபர்களிடம் ஒப்படைக்கப்படவேண்டும் என்று குறிப்பிடப்பட்டது.

1961–ஆம் ஆண்டின் இடைக்காலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டது. பொது நிறுவனங்கள் மற்றும் தனியார் நிறுவனங்கள் எந்தெந்த தொழில்களில் முதலீடு செய்ய வேண்டும் என்று முடிவெடுக்கப்பட்டது. பொது நிறுவனங்களும், தனியார் நிறுவனங்களும், அரசாங்கக் கொள்கைகளின் அடிப்படையில் பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தக் கூடிய வகையில் செயல்படவேண்டும் என்று கருதப்பட்டது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் 1969–ஆம் ஆண்டு அமலுக்கு வந்தது. தனியார் நிறுவனங்கள் பொது நிறுவனங்களோடு தேசியத் திட்டவரம்பிற்கு உட்பட்டு செயல்பட வேண்டும் என்றும், இவைகளுடைய வளர்ச்சி சமுதாய வளர்ச்சியின் அடிப்படையில் அமைய வேண்டும் என்றும் கருதப்பட்டது. இவ்விதமாக தனியார் நிறுவனங்கள் பொது

நோக்குடன் செயல்படவேண்டும் என்ற கருத்து, நான்காவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலும் வலியுறுத்தப்பட்டது.

1977–ஆம் ஆண்டின் தொழிற் கொள்கையை ஜனதா அரசாங்கம் அறிவித்தது. இந்த தீர்மானத்தின்படி உற்பத்தியை ஒரு பக்கம் பொதுவுடைமை ஆக்குவதோடு பெரிய அளவிலான நிறுவனங்களை தனியார் துறைக்கு வழங்கவேண்டும் என்ற வகையிலும் முடிவெடுக்கப்பட்டது. குடிசைத் தொழில் சிறுதொழில் வளர்ச்சிக்கு ஜனதா அரசாங்கம் மிக முக்கியத்துவம் வழங்கியது. அதே போன்று இலாபம் ஈட்ட முடியாதவகையில் செயல்படக்கூடிய நிறுவனங்களை அரசாங்கமே முதலீடு செய்து மேம்படுத்த வேண்டும் என்று கருதப்பட்டது.

## தொழில் கொள்கை அறிக்கை 1980

தொழிற் கொள்கை அறிக்கையை காங்கிரஸ் அரசாங்கம் 1980–ஆம் ஆண்டில் அறிவித்தது. அரசாங்கம் பொது நிறுவனங்களை அதிக அளவில் ஏற்படுத்தி செல்வம் சிலரிடம் குவிவதைத் தடுப்பதற்கு இவ்வறிக்கையில் வழிவகை செய்யப்பட்டது. தேசியத் திட்டங்களையும் கொள்கைகளையும் வகுத்து போட்டியின்றி இயங்கக்கூடிய தொழில்களைத் துவங்க தனியார் நபர்களுக்கு உரிமம் வழங்குவதை இவ்வறிக்கை எதிர்த்தது. தேசியக் கொள்கைகள் மற்றும் தேசியத் திட்டங்களை குறிக்கோள்களாக வைத்துப் பொது நிறுவனங்களும் தனியார் நிறுவனங்களும் செயல்பட வேண்டும் என்று இவ்வறிக்கை குறிப்பிட்டது.

இராஜீவ்காந்தி 1984–ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்தார். அவர் தொழிற் கொள்கைகளில் சில மாற்றத்தைக் கொண்டுவந்தார். பெரிய தொழில் நிறுவனங்களில் தனியார் நபர்களும் முதலிடு செய்யக்கூடிய வகையில் பொது நிறுவனங்கள் ஏற்படுத்தப்படவேண்டும் என்றுக் குறிப்பிட்டார். தேசிய வளர்ச்சி மன்றத்தில், 1985–ஆம் ஆண்டு ஆற்றிய உரையில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டார் : "அரசினுடைய நோக்கம் பொது நிறுவனத்தினுடைய பணி பங்கைக் குறைப்பது ஆகாது. முக்கியமான தொழில்கள், பொது நிறுவனங்களின் கட்டுப்பாட்டில்தான் இருக்கவேண்டும். ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பொது நிறுவனங்களில் செய்யப்பட்ட மூலதனம் மிக அதிகம். இதற்கு முக்கியக் காரணம் ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய நோக்கம் சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்துவது ஆகும். அந்த அடிப்படையில் ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மிக அதிக முதலீடு செய்யப்பட்டுள்ளதாக" இராஜீவ்காந்தி குறிப்பிட்டார்.

1951–ஆம் ஆண்டு வரை மத்திய அரசாங்கம் 5 பொது நிறுவனங்களில் 29 கோடிகள் ரூபாய் மூலதனம் செய்திருந்தது. காலப்போக்கில் மிக அதிகப் பொது நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன. 1989–90ஆம் ஆண்டில் 233 பொது நிறுவனங்களில் மத்திய அரசாங்கம் முதலீடு செய்திருந்தது. மொத்த முதலீட்டின் தொகை 1,06,078 கோடிகள் ஆகும். இவ்விதமாக அரசாங்கம் பொது நிறுவனங்களில் அதிக முதலீடு செய்து அதன் மூலமாக சமதர்ம சமுதாயத்தை ஏற்படுத்த முனைப்பாய் செயல்பட்டு வருகிறது. தற்போது 240 பொதுத்துறை நிறுவனங்களில் முதலீடு ரூபாய் 3,24,632 கோடிகள் ஆகும்.

அரசுத்துறை நிறுவனங்களை நிர்வகிக்கும் முறைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. அமைச்சு அல்லது துறைகள் வகை

2. அரசாங்கக் கம்பெனிகள் வகை

3. அரசாங்க இணையங்கள் வகை

### அமைச்சு அல்லது துறைகள்:

இந்த வகையில் இரயில்வேயும், தபால்தந்தியும் செயல்பட்டு வருகின்றன. இவை பொதுவாக அரசாங்கத்துறைகள் இயங்குவதைப் போல் இயங்கக் கூடியதாகும். இவை வரவு செலவுத் திட்டத்திற்கும், தணிக்கைக்கும், அரசாங்கக் கணக்கு வைப்பிற்கும் உட்பட்டவை. நிதியளிப்பு சட்டங்கள் மூலமாக ஆண்டுதோறும் இவை நிதியைப் பெறுகின்றன. இவற்றில் அரசாங்கப் பணியாளர்கள் தான் பணியாற்றுகின்றனர். இவர்களுடைய பணிக்கட்டுப்பாடுகள் மற்ற பிற அரசாங்கப் பணியாளர்களைப் போல் தான் ஆகும். இவற்றின் மீது வழக்குத் தொடுக்க அரசாங்கத் துறையில் நிர்ணயிக்கப்பட்ட முறையை அனுசரிக்க வேண்டும்.

### அரசாங்கக் கம்பெனிகள் :

இவை தனியார் கம்பெனிகளுக்குரிய அனைத்துத் தன்மைகளையும் கொண்டதாக உள்ளன. அரசாங்கக் கம்பெனிகளில் அரசாங்கத்தின் முதலீடு 51 சதவிகிதமோ அல்லது அதற்கு மேற்பட்டதாகவோ இருக்கும். பெரும்பான்மையான இயக்குநர்களை அரசாங்கம் நியமிக்கும். இவை கூட்டுத்தன்மையோடு செயல்படக் கூடியதாகும். இவை ஆட்சித் துறையால் உருவாக்கப் படுபவையாகும். பொதுவாக இயற்றப்பட்டுள்ள கம்பெனிகளின் சட்டத்தின் அடிப்படையில் இவை உருவாக்கப் படுகின்றன. ஒவ்வொரு அரசாங்கக் கம்பெனி உருவாக்க, தனித்தனியாக சட்டமன்றத்தின் அனுமதி தேவையில்லை. இவை அரசாங்கத்திடமிருந்து பணம் பெறுகின்றன. சில அரசாங்கக் கம்பெனிகள் , அவை உற்பத்தி செய்த பொருட்களின் மூலமாக நிதியைப் பெறுகின்றன. அரசாங்கத் துறைகளில் நிர்ணயித்துள்ள பணியாளர் முறை, வரவுச் செலவுத் திட்டம், கணக்குவைப்பு, தணிக்கை ஆகியன இவற்றிற்குப் பொருந்தும். இவற்றின் பணியாளர்கள் அரசாங்கப் பணியாளர்கள் அல்ல. (பணிசார்பு முறையில் அனுப்பப்பட்டவர்கள் (deputationists) தவிர).

### அரசாங்க இணையங்கள்: (Public Corporations)

இவை சில தனித்துவ அம்சங்களைக் கொண்டுள்ளன. சட்டமன்றத்தின் மூலமாக ஒவ்வொரு இணையமும் உருவாக்கப்படுகிறது. இவை தன்னிச்சையாக இயங்கக் கூடிய அதிகாரங்களைப் பெற்றுள்ளன. இவற்றின் பெயரிலேயே வழக்குகள் தொடுக்கலாம், தொடுக்கப்படலாம். இவற்றின் பெயரிலேயே ஒப்பந்தங்கள் செய்து கொண்டு, சொத்துக்கள் வாங்கலாம். நிதியைப் பொருத்த அளவில், சுயமாகச் செலவிடலாம். வருவாய்களை ஏற்படுத்தலாம். இவற்றின் பணியாளர்கள் அரசுப்பணியாளர்கள் அல்ல. வரவு, செலவுத் திட்டம், கணக்கு, தணிக்கை போன்றவை வேறுபட்டவை.

இந்த மூன்றுவகை அமைப்புக்களில் எந்தவகையான அமைப்பு சிறந்தது என்று கூறவே முடியாது. ஏனெனில் செயல்களுக்கேற்ற வகையில் நிர்வாக அமைப்புக்கள் அமைய வேண்டுமென்பதால், மூன்று வகையான அமைப்புகள் உள்ளது. மக்களுக்கு அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், மக்களை பாதுகாக்கவும் கூடிய அவசியப் பணிகளை துறைகளின் வகையாகச் செய்யப்படுகின்றன. அஞ்சல், தந்தி, இராணுவ உற்பத்தி பொருட்கள், இரயில்வே, ஆகியனஅரசாங்கக் கம்பெனியா? அல்லது அரசாங்க இணையமா என்ற கேள்வியில் 70 அரசுத்துறை நிறுவனங்களில் 64 கம்பெனி

வகையிலும் 6 இணையங்கள் வகையிலும் வருகின்றன. மொத்தத்தில் இன்றுள்ள 100க்கு மேற்பட்ட அரசாங்க நிறுவனங்களில் 80க்கு மேற்பட்டவை அரசாங்கக் கம்பெனிகளாகவே உள்ளன. சில முக்கியமான அரசாங்க இணையங்கள்.

1. தாமோதர் பள்ளத்தாக்கு இணையம்.
2. எண்ணெய் மற்றும் இயற்கைவாயு இணையம்.
3. கதர் மற்றும் கிராமத்தொழிற்சாலைகள் இணையம்
4. இந்தியன் வான்வழி இணையம் (Indian Airlines)
5. இந்தியன் வான்வெளி இணையம் (Air India)
6. இந்திய ஆயுள் காப்பீட்டு இணையம்
7. இந்திய ரிசர்வ் வங்கி (RBI)
8. இந்திய அரசு வங்கி (SBI)
9. புனர் வாழ்வு நிதி நிர்வாகம்
10. மத்தியப் பண்டகசாலை இணையம் (Central Ware House)
11. சேமிப்புக் காப்பீட்டு இணையம் (Deposit Insurance Corporation)
12 இந்தியத் தொழில்வள வங்கி
13. இந்திய உணவு இணையம்

ஆகியனவாகும்.

ஒவ்வொரு இணையத்திற்கும் ஒரு ஆளுகை மன்றம் உண்டு. இதற்கு இயக்குநர்கள் வாரியம் என்று பெயர். இதில் அமைக்கப்படுகின்ற விதத்தைப் பொறுத்து உறுப்பினர்கள் இடம் பெறுவர். இரண்டு மூன்று மாநிலங்கள் சேர்ந்தால் ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் ஒருவர் நியமனம் செய்யப்படுவார். இவர்களுக்கு ஒருவர் தலைவர் இருப்பார். இவர்கள் முழுநேரப் பணியாளர்களாகவும் இருக்கலாம். இவர்களுடைய பதவிக்காலம் வரையறுக்கப்பட்ட ஒன்றாகும்.

மாநிலத் தொழிலாளர் காப்பீட்டு இணையத்தின் (Employees State Insurance Corporation) அமைப்பு, செயல்படும் விதத்தைக் காண்போம்.

மாநிலத் தொழிலாளர் காப்பீட்டு இணையத்தில் பல்வகைப்பட்ட உறுப்பினர்கள் இயக்குநர்கள் வாரியத்தில் இடம் பெற்றுள்ளனர். இது 1948–ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. மத்திய தொழிலாளர் நல அமைச்சர் பதவியின் தன்மையில் (ex-officio) தலைவராகவும், மத்திய நல்வாழ்வு அமைச்சர் பதவியின் தன்மையில் உதவித் தலைவராகவும் உள்ளனர். உறுப்பினர்கள் கீழ்கண்ட விதங்களில் உள்ளனர் :

1. மத்திய அரசாங்கத்தால் ஐந்து பேர்களுக்குக் குறையாமல் நியமனம் செய்யப்படுகிறார்கள். இதில் மூவர் மத்திய அரசு அதிகாரிகளாக இருப்பார்கள்.
2. ஒவ்வொரு மாநிலமும் ஒருவரை நியமனம் செய்கின்றது.
3. மத்திய அரசு யூனியன் பிரதேசங்களில் பிரதிநிதியாக ஒருவரை நியமனம் செய்கிறது.

4. தொழிலாளர் சங்கங்களுடன் கலந்தாலோசித்து மத்திய அரசாங்கம் ஐந்து உறுப்பினர்களை நியமனம் செய்கிறது.

5. மருத்துவப் (Professional) பிரிவிலிருந்து இந்நோக்கத்திற்காக அங்கீகாரம் பெற்றவர்களில் இருவரை மத்திய அரசாங்கம் நியமிக்கிறது.

6. பாராளுமன்றத்தின் மூலம் இருவர் தேர்வு செய்யப்படுகின்றனர்.

உறுப்பினர்களின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகளாகும். பதவியின் தன்மையிலிருப்பவர்களுக்கு அவர்கள் பதவியில் இருக்கும் காலம்வரை பதவிக் காலமாகும். உறுப்பினர்கள் பதவி காலத்திற்குப் பின்னர் மறுபடியும் பதவியில் இருக்கத் தகுதிபடைத்தவர்கள். இவ்வாணையம் பல குழுக்களை அமைத்துச் செயல்படுகின்றது. இதற்கு நிலைக்குழு ஒன்று உள்ளது. நிலைக்குழுவின் தலைவரை அரசாங்கம் நியமனம் செய்கின்றது. மத்திய அரசின் மூன்று அதிகாரி (உறுப்பினர்) களும், மாநில அரசாங்கம் மூன்று அதிகாரி (உறுப்பினர்) களும், தொழிலாளர் பிரதிநிதிகளிலிருந்து இருவரும், மருத்துவத் தொழிலிருந்து ஒருவரும், பாராளுமன்ற உறுப்பினர்களில் ஒருவரும் நிலைக்குழுவில் உறுப்பினர்களாக இருப்பார்கள். இவர்களின் பதவிக்காலம் இரண்டாண்டுகளாகும்.

மருத்துவப் பயன்பாட்டுச் சபை (Medical Benefit Council) ஒன்று இதில் அமைந்துள்ளது. சுகாதாரப் பணிகளின் தலைமை இயக்குநர் பதவியின் தன்மையில் இதன் தலைவராகும். சுகாதார துணைத் தலைமை இயக்குநர் உறுப்பினராவார். மத்திய அரசாங்கம் இவர்களை நியமனம் செய்கிறது. மருத்துவ ஆணையாளரும் பதவியின் தன்மையில் இதில் உறுப்பினராவார். மாநிலங்கள் ஒருவரை நியமனம் செய்யும். தொழிலாளர் சங்கங்களிடமிருந்து மூவரும் மருத்துவப் பிரிவிலிருந்து ஒருவரும் இடம் பெறுவர். இவற்றில் ஒருவர் பெண்ணாக இருக்க வேண்டும். இதன் பதவிக்கா்லம் நான்கு ஆண்டுகள்.

இவ்விணையத்தின் தலைமைச் செயலாக்குநர் மாநிலத் தொழிலாளர்களின் காப்பீட்டுத் தலைமை இயக்குநர் ஆகும். எல்லா நியமனங்களும் மாநிலத் தொழிலாளர் காப்பீட்டுத் தலைமை இயக்குநர், காப்பீட்டு ஆணையாளர், மருத்துவ ஆணையாளர், தலைமைக் கணக்காளர் மற்றும் ஆயுள் நிதிக்கணக்கர் ஆகியோர்களின் ஆலோசனையின் பேரில் மத்திய அரசாங்கம் செய்கிறது. முதலில் 5 ஆண்டுக்ளுக்கு நியமிக்கப்பட்டு, பின்னர் தொடர்ந்து பணியிலிருப்பர். 500 ரூபாய்க்கு அதிகமாக ஊதியம் தருகின்ற பதவிகள் மத்திய அரசாங்கத்தின் அனுமதியின் பேரில்தான் உருவாக்க முடியும். பணியாளர்குழாம் நிர்வாகத்தைப் பொறுத்தவரை மத்திய அரசாங்கத்தோடு கலந்துதான் செய்யும்.

இவ்வாறாக, மாநிலத் தொழிலாளர் காப்பீட்டு இணையம் அமைக்கப்பட்டு செயல்படுகிறது.

மத்திய அரசாங்கமானது பொதுவாக இணையங்கள் செயல்படுவதைக் கண்காணித்து வரும். இவற்றின் அறிக்கைகள் ஒழுங்காக அரசாங்கத்திற்கு சமர்ப்பிக்க வேண்டும். குறிப்பிட்ட அளவிற்கு மிகுதியான கடன்களைத் திரட்ட, பதவிகளின் நியமனங்களுக்கு அரசாங்கத்தின் ஒப்புதல் அவசியம். ஆணையத்தின் உயர் நியமனங்களை எல்லாம் செய்யக்கூடிய அதிகாரங்கள் அரசாங்கத்திடம்தான் உள்ளது. இணையங்கள் அரசாங்கத்திடமிருந்துதான் நிதியைப் பெறுகின்றன. மக்களின்

நன்மைக்காகத்தான் செயல்படுகின்றன. ஆகவே ஆணையங்களின் நிர்வாகத்தை அரசாங்கம் கவனிக்க வேண்டும்

மேலும் இணையங்கள் தன்னிச்சையாகச் செயல்பட்டாலும், அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளாகத்தான் செயல்பட வேண்டும். இல்லையேல் தான்தோன்றித்தன அமைப்புக்களாக, மக்களுக்கு நன்மை ஏற்படாதவகையில் செயல்படும். மக்களின் பணத்தை அனுபவித்து மக்களுக்கே கேடு செய்தால் நியாயமாகுமா? ஆகவே அரசாங்கத்தின் கட்டுப்பாடு அவசியம். அரசாங்கத் துறைகளை அரசாங்கம் கட்டுப்படுத்துவது போலவே இவற்றையும் கட்டுப்படுத்துகின்றது. பாராளுமன்ற மக்களாட்சியில் பாராளுமன்றமானது கீழ்க்கண்ட வகைகளில் கட்டுப்பாடு செய்கின்றது. ஆணையங்கள் குறித்து.

1. அமைச்சர்களிடம் கேள்விகள் கேட்பது.
2. அரசுத்துறை நிறுவனங்களைப் பற்றி அரைமணி நேர விவாதம்.
3. ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டுவரல்.
4. குறுகியகால கவன ஈர்ப்புத் தீர்மானம்
5. அவசரகால கவன ஈர்ப்புத் தீர்மானம்.
6. தீர்மானங்கள், கொண்டு வந்து, எப்பிரச்சனையையும் விவாதிப்பது.
7. குடியரசுத் தலைவர் உரையின் மீதான விவாதம்
8. விசாரணைக் குழு அறிக்கையின் மீதான விவாதம்.
9. ஆணைய சட்டத் திருத்தம் போன்றவை கொண்டு வரும் போது விவாதம்.
10. வரவு செலவுத் திட்ட விவாதங்கள்.
11. ஆண்டறிக்கை விவாதங்கள்

இவ்வாறு ஆணையங்கள் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளாக நின்று செயல்படுகின்றன.

## புதிய பொருளாதாரக் கொள்கை

பொதுத்துறை நிறுவனங்கள் 1956–ஆம் ஆண்டின் தொழிற் கொள்கைத் தீர்மானத்திற்குப் பின்னர் அதிகமாக வளர்ச்சியடைந்துள்ளன. அடிப்படை, கனரகத் தொழிற்சாலைகள், கட்டுமான வளர்ச்சி (Infrastructural) ஆகியவற்றிற்கு அதிக முன்னுரிமை கொடுக்கப்பட்டன. இவை வெகுசீராக வளர்ச்சியடைந்தன. நாளடைவில் கட்டுமான வளர்ச்சி இல்லாத துறைகளிலும், முக்கிய தொழில்கள் (non-core) என்பதிலிருந்தும் விலகி, நுகர்வோர் தொழில்களில் இறங்கியதால், பொதுத்துறை நிறுவனங்கள் சீரான வளர்ச்சியைக் கட்டிக் காக்க முடியவில்லை. இதனால் முன்னேற்றம், பொதுத்துறை நிறுவனங்களின் செயல்திறன் ஆகியன எதிர்மறையாக, நஷ்டத்தில் செயல்பட ஆரம்பித்தன. இதனைச் சரிக்கட்ட 1991 ஆம் ஆண்டு புதிய பொருளாதாரக் கொள்கை வெளியிடப்பட்டது. அவற்றில் பொதுத்துறை நிறுவனங்களின் செயல்திறனை மேம்படுத்த கீழ்க்கண்ட நடவடிக்கைகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

1. பொதுத்துறை நிறுவனங்களின் முதலீடு அத்தியாவசிய கட்டுமானப் பிரிவுகளிலும், தொழில்நுட்ப (hitech) மற்றும் மிகமுக்கிய (Strategy) தொழில்களிலும் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். சில நிறுவனங்களை தனியார் துறைக்கும் (selectively) கொடுக்கலாம்.

2. தொடர்ந்து நஷ்டத்தில் இருக்கும் நலிந்த பொதுத்துறை நிறுவனங்களைச் சீரமைக்கும் பணியில் கவனம் செலுத்த வேண்டும். இவற்றை தொழில், நிதி சீரமைப்பு வாரியத்தின் (Board for Industrial and Financial Reconstruction) பரிசீலனைக்குக் கொண்டு சென்று, சீரமைக்க வேண்டும். அல்லது இது போன்ற பிற அமைப்புக்களின் பரிசீலனைக்கு அனுப்பி உயிர்ப்பிக்க வேண்டும். முடியாது என்று அறியும்போது, அவற்றில் பணியாற்றும் பணியாளர்களைக் காக்க முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்.

3. பொதுத்துறை நிறுவனங்களுக்கு நிதியைத் திரட்டவும், பொதுமக்கள் அவற்றில் அக்கறை எடுத்துச் செயல்படவும், அரசாங்கப் பங்குகளை பொதுமக்களுக்கும், பரஸ்பர நிதி நிறுவனங்கள், நிதி நிறுவனங்கள் மற்றும் பணியாளர்களுக்கும் வழங்க வேண்டும்.

4. பொதுத்துறை நிறுவனங்களின் இயக்குநர் வாரியங்களுக்கு அதிகமான அதிகாரங்கள் வழங்குவதோடு மட்டுமின்றி, தொழில்நுணுக்க முறையில் செயல்பட வைக்க வேண்டும்.

5. பொதுத்துறை நிறுவனங்கள் பிற பிரிவுகளோடு இணைந்து (Memorandum of Understanding) தங்களுடைய செயல்திறனை மேம்படுத்திக் கொள்ள வேண்டும். பொதுத்துறை நிறுவனங்களின் மேலாண்மைக்கு முழு சுதந்திரம் கொடுக்கப்படவும், பொறுப்பாகவும் இயங்க வழிவகை செய்ய வேண்டும்.

புதிய பொருளாதாரக் கொள்கையை ஏற்றுக் கொண்டு, பொதுத்துறை நிறுவனங்கள் செம்மையாகச் செயல்பட பல முயற்சிகளை அரசாங்கம் மேற்கொண்டது. இதன் விளைவாக, 2001 ஆம் ஆண்டு மார்ச் மாதக் கடைசியின்படி, 66 பொதுத்துறை நிறுவனங்கள் தொழில், நிதி புனரமைப்பு வாரியத்தின் பரிசீலனைக்கு உட்பட்டது. இவற்றில் 13 பொதுத்துறை நிறுவனங்கள் நன்றாகச் செயல்பட ஆரம்பித்தது. மேலும் 2 பொதுத்துறை நிறுவனங்கள் இலாபம் ஈட்ட ஆரம்பித்தது. 27 பொதுத்துறை நிறுவனங்கள் முடக்கி வைக்கப்பட்டன. முக்கியமான சில பிரிவுகள் தனியாரிடம் விடப்பட்டன. எரிசக்தித் துறையில் (power) வெளிநாட்டுக் கம்பெனிகள் முதலீடு செய்ய அனுமதிக்கப்பட்டது. தொலைதொடர்பு துறையில் தனியார் பங்கு பெற வழிவகை செய்யப்பட்டது. மேலும் வங்கிகள், காப்பீடு போன்ற துறைகளிலும் தனியார் பங்கு பெற வாய்ப்பளிக்கப்பட்டது.

அரசாங்கத்தின் பொதுத்துறை நிறுவனங்கள் தொடர்பான முக்கிய கொள்கைகளாவன.

1. அத்தியாவசியமில்லாத (non-strategic) பிரிவுகளிலுள்ள பொதுத்துறை நிறுவனங்களில் அரசாங்கத்தின் முதலீடு 26 விழுக்காடாகவோ, அதற்குக் குறைவாகவோ இருக்க வேண்டும்.

2. பொதுத்துறை நிறுவனங்கள் எவற்றையெல்லாம் சீர்படுத்தி இலாபம் ஈட்ட முடியுமோ, அவற்றையெல்லாம் உடனடியாக மறுசீரமைப்புப் பணிகளைச் செய்ய வேண்டும்.

3. எப்படியும் சீரமைக்கவே முடியாது என்று இருக்கக் கூடிய பொதுத்துறை நிறுவனங்களைக் கைவிட்டுவிட வேண்டும்.

4. பொதுத்துறை நிறுவனங்களின் பணியாளர்கள் பாதிக்காதவாறு, பணியாளர்களின் நலன்களைக் காக்க வேண்டும்.

புதிய பொருளாதார கொள்கைகளைச் செயல்படுத்தும்வகையில் 1996 ஆம் ஆண்டு முதலீட்டுக் குறைப்பு ஆணையம் (Disinvestment Commission) ஏற்படுத்தப்பட்டது. இது 1999 ஆம் ஆண்டு அளித்த அறிக்கையில் 41 பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகள் தனியார்களுக்கும் 5 பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகள் மட்டுமே பொது மக்களுக்குக் கொடுக்கலாம் என முடிவு செய்தது. அதன்படி 2003 ஆம் ஆண்டில் பொதுமக்களுக்குப் பங்குகள் வழங்கப்பட்டன.

பொதுத்துறை நிறுவனங்களின் மூலதனப் பங்குகளை தனியார்களுக்கு வழங்குவது குறித்து ஒரு சர்ச்சை தொடங்கியது. இரண்டாவதாக, அத்தியாவசியமான பிரிவுகள், அத்தியாவசியம் குறைந்த பிரிவுகள் என்று வகைப்படுத்தப்பட்டதில் மற்றொரு பிரச்சனை எண்ணெய் (oil) எரிசக்தி (power) ஆகியன அத்தியாவசியப் பிரிவுதான். ஆயினும் அவை அத்தியாவசியம் குறைந்த (non-strategic) என வகைப்படுத்தப்பட்டுள்ளது. மூன்றாவதாக, இலாபம் ஈட்டும் பொதுத்துறை நிறுவனப் பங்குகளை தனியார்களுக்கு கொடுக்கலாமா? என்பது பெரும் பிரச்சனையாக வெடித்தது. இதுவரை பொதுத்துறை நிறுவனங்கள் தனியார்களுக்கு கொடுத்தவை அனைத்தும் அதிகமாக இலாபம் ஈட்டிய பொதுத்துறை நிறுவனங்களாகும். எனவே வரக்கூடிய காலங்களில் இலாபம் ஈட்டும் பொதுத்துறை நிறுவனங்களை தனியார்களுக்கு கொடுக்கக் கூடாது என்ற கருத்து வலிமை பெற்றுள்ளது. மேலும் எண்ணெய் வள HPCL, BPCL ஆகிய நிறுவனப் பங்குகளை தனியார்களுக்கு விற்கக்கூடாது என்று பெரும் பிரச்சனை உருவெடுத்தது. பாராளுமன்றம்தான் இதற்கு அனுமதிக்க வேண்டுமென்றும், அரசாங்கப் பொதுத்துறை நிறுவனங்களான இந்திய எண்ணெய் இணையம் (Indian Oil Corporation) இந்திய வாயுக் கழகம் (Gas Authority of India) ஆகியனவும் வாங்கக் கூடாது. ஏனெனில் அவைகளும் அரசாங்கப் பொதுத்துறை நிறுவனங்கள், பொதுத்துறை நிறுவனங்கள் தனியார், பொதுமக்கள், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவற்றிற்குக் கொடுப்பதுதான் முதலீட்டுக் குறைப்பின் நோக்கமே தவிர, அரசாங்கமே வைத்துக் கொள்வதல்ல என்று விளக்கம் கூறப்பட்டது. ஆயினும் பாரத் பெட்ரோலியம், ஹிந்துஸ்தான் பெட்ரோலியம் ஆகிய நிறுவனங்கள் தனியார்களுக்கு விற்கப்படவில்லை. தற்போது இலாபம் ஈட்டும் பொதுத்துறை நிறுவனங்களை விற்கக் கூடாது என்ற கருத்து ஏற்கப்பட்டுள்ளது. அரசாங்கம் பொதுத்துறை நிறுவனங்களின் பணியாளர்கள் நலன்களைக் காப்பதில் அதிக அக்கறை எடுத்துள்ளது. பொதுத்துறை நிறுவனங்களை எவ்வாறு சீர்படுத்தி, மேம்படுத்தலாம் என்பதில் மிகவும் கவனம் செலுத்தி வருகின்றது.

மாதிரி வினா :

பொதுத்துறை நிறுவனங்களின் செயல்பாட்டை எழுது.

## பாடம்–14 மாநில அரசாங்கத்தின் அமைப்பு முறை

இந்திய அரசியலமைப்பு மத்திய மாநில அளவிலான இரு வகை நிர்வாக நிலைகளைத் தோற்றுவித்திருக்கிறது. மாநிலத்தின் நிர்வாகம் ஆளுநரின் பெயரில் ஒரு அமைச்சர் குழுவால் நடத்தப்படுகிறது. அரசியலமைப்பின் ஆறாவது அத்தியாயம் மாநில அரசாங்கம் ஜம்மு, காஷ்மீர் நீங்கலாகப் பற்றிக் கூறுகிறது. மாநில அரசாங்க முறை மத்திய அரசாங்க முறை போன்றே அமைந்துள்ளது.

ஆளுநர் மாநில அரசாங்கத்தின் பெயரளவிலான தலைவராவார். இவர் ஐந்து வருட காலத்திற்கு என குடியரசுத் தலைவர் பதவியில் நியமிக்கப்பட்டு குடியரசுத் தலைவரின் விருப்பமுள்ளளவும் பதவியிலிருக்கிறார். ஆளுநர் மாநிலத்திற்குத் தலைவர். ஆளுநராக நியமிக்கப்படும் ஒருவர் 35 வயதை அடைந்தவராகவும், இந்தியக் குடிமகனாகவும் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலோ அல்லது மாநிலத்தின் சட்டமன்றங்களிலோ அங்கத்தினரல்லாதவராகவும், ஊதியம் பெறும் எந்தவொரு பதவியும் வகிக்காதவராகவும் இருத்தல் வேண்டும் என்பது அரசியலமைப்பு கூறும் விதியாகும்.

ஆளுநருக்கு ஆட்சித்துறை அதிகாரங்கள், சட்டமன்றம் சார்ந்த அதிகாரங்கள் மற்றும் நீதித்துறை சார்ந்த அதிகாரங்கள் என உள்ளன. ஆட்சித்துறை அதிகாரங்களில் மிகவும் முக்கியமானதாக அமைச்சர் குழுவை நியமிக்கும் அதிகாரத்தைக் குறிப்பிடலாம். மாநில பொதுப் பணியாளர் தேர்வு ஆணைக் குழுவின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள், அட்வகேட் ஜெனரல் போன்ற முக்கிய பதவிகளுக்கு ஆளுநர் அமைச்சர் குழுவின் ஆலோசனையின் பேரில் நபர்களை நியமிக்கிறார். மாநில உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளை நியமிப்பதில் குடியரசுத் தலைவர் ஆளுநரை கலந்தாலோசிக்கிறார். ஆளுநர் மாநில சட்டமன்றத்தின் ஒரு பகுதியாவார். மாநில சட்டமன்றம் இயற்றும் சட்டமுன்வரைவுகள்யாவும் ஆளுநரின் ஒப்புதலைப் பெற்ற பின்னரே சட்டமாகின்றன. ஆளுநர் மாநில சட்ட மன்றத்தைக் கூட்டவும், கூட்டத்தொடரை முடித்து வைக்கவும், சபையைக் கலைக்கவும், மன்றத்தில் உரை நிகழ்த்தவும், சபைகளுக்குச் செய்தியனுப்பவும் உரிமை பெற்றுள்ளார். சில சூழ்நிலைகளில் ஆளுநர் அவசரப் பிரகடனங்களை பிறப்பிக்கவும் உரிமை பெற்றுள்ளார். ஆனால் இவர் பிறப்பிக்கும் அவசரப் பிரகடனங்கள் அடுத்த சட்டமன்றக் கூட்டத் தொடரில் ஒப்புதலுக்காக வைக்கப்பட வேண்டும். சட்டமன்றம் இவைகளுக்கு ஒப்புதலளிக்காவிட்டால், சட்ட மன்றக் கூட்டத் தொடர் அடுத்து நடைபெற்றது முதல் ஆறு வாரங்களுக்குப் பிறகு இவை செல்லாதவைகளாகிவிடும்.

ஆளுநருக்கு குடியரசுத் தலைவரைப் போன்று இராணுவம் மற்றும் வெளி நாட்டுறவு தொடர்பான அதிகாரங்கள் எதுவும் கிடையாது. மேலும் இவருக்கு நெருக்கடி அதிகாரங்களும் அளிக்கப்படவில்லை. அரசியலமைப்பின் 356 வது விதியின்படி ஆளுநர் மாநில அரசாங்கம் அரசியலமைப்பின்படி செயல்படத் தவறி விட்டது என்று கண்டால் அது குறித்த அறிக்கையை குடியரசுத் தலைவருக்குச் சமர்ப்பித்து மாநில நிர்வாகத்தை நடத்துமாறு குடியரசுத் தலைவரை வேண்டிக் கொள்ள முடியும். ஆளுநர் ஒரு சட்டமுன்வரைவை குடியரசுத் தலைவரின் கவனத்திற்கு என நிறுத்தி வைக்கவும் உரிமை பெற்றுள்ளார். இந்த இரு அதிகாரங்களையும் பொறுத்த வரையில் ஆளுநர் அமைச்சர் குழுவின் ஆலோசனையைக் கேட்காமல் தன்னுரிமையுடன் செயல்பட முடியும்.

அமைச்சர்குழு சட்டமன்றத்தின் கீழ்ச்சபைக்கு அல்லது அசெம்பிளிக்குப் பொறுப்புடையது. ஒவ்வொரு அமைச்சரும் ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட துறைகளுக்கோ பொறுப்புடையவராவர்.

மாநில நிர்வாகத்தில் முக்கிய பங்கு வகிக்கும் பிறிதொரு நிறுவனமாக மாநில சட்டமன்றம் விளங்குகிறது. இந்தியா முழுவதிலும் ஒரே சீரான சட்டமன்ற அமைப்பு காணப்படவில்லை. ஆந்திரப் பிரதேசம், பீகார், மத்தியப் பிரதேசம், தமிழ்நாடு, மகாராஷ்டிரா, கர்நாடகா, உத்திரப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் ஈரவைச் சட்டமன்றமும் ஏனைய மாநிலங்களில் ஓரவைச் சட்டமன்றமும் காணப்படுகின்றன. சட்டமன்றத்தின் மேலவை கவுன்சில் என்றும், கீழவை அசெம்பிளி என்றும் அழைக்கப்படுகிறது.

**மேலவை:** இது ஒரு நிரந்தர மன்றமாகும். இம்மன்றம் ஆறு ஆண்டுகாலத்திற்கென தேர்ந்தெடுக்கப்படுகிறது. இதில் மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பதவி விலகுகின்றனர். அரசியலமைப்பின் 171 வது விதியின்படி மேலவை அமைக்கப்படுகிறது. மேலவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை கீழவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கிற்கு மிகைப்படக் கூடாது. ஆறில் ஐந்து பங்கு உறுப்பினர்கள் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆறில் ஒரு பங்கு உறுப்பினர்கள் ஆளுநரால் நியமிக்கப்படுகின்றனர். மேலவை உறுப்பினராவதற்கு ஒருவர் இந்திய குடிமகனாக இருத்தல் வேண்டும். முப்பது வயது நிரம்பியவராக இருத்தல் வேண்டும். அசெம்பிளி தொகுதி ஏதேனுமொன்றில் வாக்காளராகவும் இருத்தல் வேண்டும்.

**கீழவை:** கீழவை அசெம்பிளியாகும். அசெம்பிளியில் 40 உறுப்பினர்களுக்குக் குறையாமலும் 500 உறுப்பினர்களுக்கு மேற்படாமலும் உறுப்பினர்களின் எண்ணிக்கை அமைய வேண்டும் என்று அரசியலமைப்பு கூறுகிறது. உறுப்பினர்கள் யாவரும் ஐந்தாண்டு காலத்திற்கென மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 23 வது அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தின்படி அசெம்பிளியில் ஆங்கிலோ இந்தியர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லையென்று கண்டால் ஆளுநர் ஒரு ஆங்கிலோ இந்தியரை உறுப்பினராக நியமிக்க உரிமை பெற்றுள்ளார். அசெம்பிளியில் உறுப்பினாராவதற்கு ஒருவர் இந்திய குடிமகனாகவும் 25 வயது நிரம்பியவராகவும் இருத்தல் வேண்டும்.

சட்டமன்றக் கவுன்சிலில் ஒரு தலைவரும் ஒரு துணைத் தலைவரும் சபையின் நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கென இருக்கின்றனர். அசெம்பிளியில் சபாநாயகரும் துணைச் சபாநாயகரும் சபை நடவடிக்கைகளை நடத்துகின்றனர்.

சட்டமன்ற கவுன்சிலுக்கு அசெம்பிளியுடன் ஒருங்கிணைந்த அதிகாரம் கிடையாது. தனிச் சட்டவரைவு அசெம்பிளியிலேயே அறிமுகப்படுத்தப்படுகிறது. அசெம்பிளியில் கொண்டு வரப்படும் நிதிச்சட்டவரைவினை 14 நாட்களும் சாதாரண சட்டவரைவினை 4 மாதமும் காலதாமதப்படுத்தவே கவுன்சிலுக்கு இயலும். இரு சபைகளுக்குமிடையே ஏற்படும் சட்டமன்ற முடக்கங்களை கூட்டுவதற்கு வழிவகை எதுவுமில்லை. சட்டமன்ற முடக்கம் ஏற்படின் அசெம்பிளியின் முடிவே நிலைநிறுத்தப்படுகிறது. ஒரு சட்டவரைவு ஆளுநரின் ஒப்புதலைப் பெற்றதும் சட்டமாகிறது.

மாநில நிர்வாகத்தில் பெரும்பங்கு வகிக்கும் அடுத்த நிறுவனமாக நீதித்துறை விளங்குகிறது. அரசியலமைப்பு நிறையாக் கூட்டாட்சியை ஏற்படுத்தியிருப்பதனால் மாநிலத்திற்கென தனிப்பட்ட நீதித்துறை இல்லை. அதற்குப்பதிலாக தலைமை நீதிமன்றத்தைத் தலைமையாகக் கொண்ட ஒன்றிணைக்கபட்ட நீதித்துறையே செயல்படுகிறது.

ஒவ்வொரு மாநிலத்திலும் தலைமை நீதிபதியையும் ஏனைய நீதிபதிகளையும் கொண்ட ஒரு உயர் நீதிமன்றம் இருக்கிறது. 42வது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்புவரையிலும் மத்திய சட்டத்தின் செல்லுபடியாகும் தன்மையை திறனாய்வு செய்ய தலைமை நீதிமன்றத்திற்கும் உயர்நீதிமன்றத்திற்கும் உரிமை இருந்தது. 42 வது திருத்தச் சட்டத்தின் படி மத்திய மாநில சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையை திறனாய்வு செய்யும் உயர் நீதிமன்றங்களின் அதிகார எல்லை தடை செய்யப்பட்டது. ஆனால் 43 வது திருத்தச் சட்டம் இந்தத் தடையை நீக்கி முன்புபோலவே உயர் நீதிமன்றங்களுக்கு மத்திய மாநில சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையை திறனாய்வு செய்யும் உரிமையினைத் திருப்பி அளித்து விட்டது. உயர் நீதிமன்றத்திற்குக் கீழ் சார்நிலை நீதிமன்றங்கள் இருக்கின்றன. சார்நிலை நீதிமன்றங்களின் நீதிபதிகள் ஆளுநரால் நியமிக்கப்படுகின்றனர்.

ஆட்சித்துறை, சட்டமன்றம் மற்றும் நீதித்துறை ஆகியவை அரசாங்கத்தின் மூன்று முக்கியப் பிரிவுகளாகும். அரசாங்கத்தின் செயல்கள் பல்வேறு துறைகளிலும் நடைபெறுகின்றன. கொள்கைகளை அமலாக்குவதும் அரசாங்கத்தின் திட்டங்களை செயலாக்குவதும் அமைச்சர் குழுவின் பொறுப்பாகும். ஒரு அமைச்சர் ஒன்றுக்கோ அல்லது அதற்கும் மேற்பட்ட துறைகளுக்கோ பொறுப்புடையவராவார். இவர் ஒரு துறையின் அரசியல் தலைவராவார். துறையின் நிர்வாகத் தலைவர் அரசுப் பணியைச் சேர்ந்த செயலாளராவார். செயலர் அரசாங்கத்தின் செயலரே தவிர ஒரு தனிப்பட்ட அமைச்சரின் செயலரன்று, பொதுவாக செயலகத் துறைகளின் எண்ணிக்கை செயலர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் அதிகமாகவே இருக்கிறது. ஒரு துறையில் செயலர் தவிர இணை அல்லது கூடுதல் செயலரும், துணைச் செயலரும், சார்புசெயலரும், உதவிச் செயலரும் இருக்கின்றனர். இவர்கள் அலுவலர் வகுப்பைச் சேர்ந்தவர்களாவர். மேலும் செக்சன் அலுவலர்களும் மேல்நிலை எழுத்தர், தட்டெழுத்தர், கடைநிலை ஊழியர்கள் என்பவர்களும் துறையில் பணிபுரிகின்றனர். இவர்கள் அலுவலகத்தைச் சேர்ந்தவர்கள். அலுவலகம் என்பது செயலக முறையமையில் உள்ள நிரந்தரக் கூறுகளைக் கொண்டதாகும். இவ்வாறு ஒருதுறையில் அலுவலர்களும் அலுவலகமும் இணைந்து காணப்படுகின்றன.

இவ்வாறு மாநில நிர்வாகம் அரசாங்கத்தின் மூன்று பிரிவுகளாலும் அரசுப் பணியாளர்கள் உதவியைக் கொண்டு நடத்தப்படுகிறது. அரசுப் பணியாளர்கள்தான் நிர்வாகத்திற்கு நிலைப்புத் தன்மையையும் தொடர்ச்சியையும் அளிக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு ஜனநாயக அரசியல் முறையமைவில் எப்பொழுதும் நிலையான அரசாங்கம் இருக்கும் என்று கூற முடியாது. எனவே, நிலையான அரசுப் பணியின் சேவை தவிர்க்க முடியாததாகும். நிர்வாகத்திற்கு நிலையான தன்மையை ஏற்படுத்தி ஜனநாயக முறையை பேணிப் பாதுகாக்கவல்ல அரசுப் பணியாளர்கள் நாணயமுடையவர்களாகவும் நேர்மையுடைவர்களாகவும், கடமையுணர்வுடையவர்களாகவும் இருப்பதுடன் அரசியலில் நடுநிலை கண்ணோட்டத்துடன் நிர்வாகப் பெறுப்பை ஏற்று நடத்தவும் வேண்டும் என்பது நிர்வாக நெறிகளிலே பெரிதும் போற்றப்படுவதொன்றாகும்.

## பயிற்சிக்குரிய மாதிரி வினா :

இந்தியாவில் மாநில அரசாங்கத்தின் அமைப்பு முறையை திறனாய்வு செய்க.

## பாடம் 15 முதல் அமைச்சர்

முதல் அமைச்சர் மாநில நிர்வாகத்தின் உண்மையான ஆட்சித்துறைத் தலைவர். இவரும் இவரது அமைச்சரவையும் ஆட்சித்துறை அதிகாரங்களைக் கொண்டுள்ளனர். அரசியலமைப்பின் 163வது பிரிவின்படி இவர்கள் மாநில ஆளுநருக்கு ஆலோசனையும் உதவியும் செய்து வரவேண்டுமென்று வரையறுக்கப்பட்டுள்ளது.

ஆளுநர் முதல் அமைச்சரை நியமனம் செய்கிறார். முதலமைச்சரின் ஆலோசனைப்படி பிற அமைச்சர்களை ஆளுநர் நியமிக்கிறார். சட்டமன்றத்தின் பெரும்பான்மை பெற்றோரை முதலமைச்சராக ஆளுநர் நியமிக்கிறார். பெரும்பாலும் தனிக் கட்சியின் பெரும்பான்மைத் த்லைவரை முதலமைச்சராக நியமனம் செய்கிறார். எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை இல்லாமல் பல கட்சிகள் இருந்தால், கூட்டணி அரசாங்கம் அமைக்கப்படுகிறது. எல்லாக் கட்சிகளின் இணக்கத்தோடு தேர்வு பெறுகின்ற பொதுக் கூட்டணித் தலைவர் முதலமைச்சராக நியமிக்கப்படுகிறார். தனிக் கட்சியின் பெரும்பான்மைத் தலைவரைத்தான் முதலமைச்சராக நியமிக்க வேண்டுமென அரசியலமைப்பு கூறவில்லை. சட்டமன்றம் யாரிடம் நம்பிக்கை வைத்திருக்கிறதென ஆளுநர் நினைத்தால், அவரை அழைத்து முதலமைச்சராக நியமனம் செய்யலாமென ஆளுநருக்கு விருப்ப அதிகாரமாக இது வழங்கப்பட்டுள்ளது. சட்டமன்ற உறுப்பினரைத் தான் முதலமைச்சராக நியமிக்க வேண்டுமென்ற கட்டாயமும் இல்லை. முதலமைச்சராக நியமிக்கப்பட்டவர் ஆறுமாத காலத்திற்குள் சட்டமன்ற உறுப்பினராகத் தன்னை தகுதிபடுத்திக் கொள்ள வேண்டும்.

முதலமைச்சரின் பணிகள் மற்றும் அதிகாரங்கள் பற்றிக் காண்போம்.

அமைச்சரவையை உருவாக்குவது முதலமைச்சரின் முதல் பணி. ஆளுநர் முதலமைச்சரைத் தேர்ந்தெடுத்தபின், முதலமைச்சரின் ஆலோசனைப்படி பிற அமைச்சர்களை ஆளுநர் நியமனம் செய்ய வேண்டும். அமைச்சரவைக்குத் தலைவர் முதலமைச்சர். இவர் பதவி விலகினாலே முழு அமைச்சரவையும் பதவி விலகியதாகிவிடும்.

முதலமைச்சர் அமைச்சர்களுக்கு துறைகளை ஒதுக்கீடு செய்யும் அதிகாரத்தைக் கொண்டுள்ளார். பொதுவாக முக்கியமான துறைகளெனக் கருதப்படும் உள்துறை, நிதி ஆகிய பொறுப்புக்கள் முதலமைச்சரிடமோ அல்லது அவருக்கு நெருக்கமானவர்களாகக் கருதப்படுவோரிடம் இருக்கும். துறைகளை அமைச்சர்களுக்கு ஒதுக்குவதும், மாற்றுவதும் முதலமைச்சரின் விருப்பம். அமைச்சரவையில் எத்தனை பேர் இருக்கலாமென்பதையும் முதலமைச்சரே முடிவு செய்வார். 91வது அரசியலமைப்பு திருத்தச் சட்டத்தின்படி அமைச்சரவை சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 15 விழுக்காடு இருக்க வேண்டுமென வரையறுத்துள்ளது. முதலமைச்சர்தான் அமைச்சரவைக் கூட்டங்களைக் கூட்ட வேண்டும். அமைச்சரவைக் கூட்டங்களுக்கு தலைமை தாங்கி நடத்துபவர் முதலமைச்சர். இவர் நேரத்திற்கு நேரம் அமைச்சரவைக் கூட்டங்களைக் கூட்டுவார். எல்லாத் துறைகளின் கொள்கைகளையும் ஒருங்கிணைக்கக் கூடியவர் முதலமைச்சர். எனவே அமைச்சரவை, செம்மையாகச் செயல்பட எல்லா அமைச்சர்களையும் ஒற்றுமைப்படுத்தி, செயல்பட வைப்பவர் இவர்.

முதலமைச்சர் ஆளுநருக்கும் அமைச்சரவைக்கும் இடையே பாலமாகச் செயல்படவல்லவர். எனவே அமைச்சரவையின் முடிவுகள், மாநில நிர்வாகம் தொடர்பான நடவடிக்கைகள் ஆகியவற்றை நேரத்திற்கு நேரம் ஆளுநருக்கு முதலமைச்சர் தெரியப்படுத்த வேண்டும். ஆளுநர் கேட்கும் பட்சத்தில் நிர்வாகம் தொடர்பான செய்திகளை முதலமைச்சர்

வழங்க வேண்டும். முதலமைச்சர் கட்சியின் தலைவராகவும், சட்டமன்றத்தின் தலைவராகவும் இருப்பார். அவையில் கட்சியின் கொறடாக்களை நியமித்து, கட்சிக் கட்டுப்பாட்டையும், கொள்கைக் கண்டிப்பிலும் கவனமாக இருப்பார். சட்டமன்றத்தைக் கலைக்கவும் ஆளுநருக்கு ஆலோசனை வழங்குவார். பெரும்பான்மைக் கட்சியின் தலைவராக, சட்டமன்றத்தில் பெரும்பான்மையோடு கட்சி இருக்கும்வரையில் முதலமைச்சரின் அதிகாரம் மிக அதிகமாக இருக்கும். மாறாக, பல கட்சிகள் இணைந்து கூட்டணி அரசாங்கமாக இருந்தால், முதலமைச்சரின் அதிகாரம் அதிகமாக இருக்காது.

## அமைச்சரவை :

அமைச்சர்களாக சட்டமன்ற உறுப்பினர்கள் நியமிக்கப்படுவார்கள். சட்டமன்ற உறுப்பினரல்லாத ஒருவர் அமைச்சராக நியமிக்கப்பட்டால், அவர் ஆறுமாத காலத்திற்குள் சட்டமன்ற உறுப்பினராகத் தன்னை தகுதிபடுத்திக் கொள்ள வேண்டும். அமைச்சர்கள் சட்டமன்றக் கூட்டங்களிலும் அவற்றின் நடவடிக்கைகளிலும் பங்கு கொள்ள வேண்டும். ஒவ்வொரு அமைச்சரும் அவர் சார்ந்த துறைக்குப் பொறுப்புக் கொண்டவர். முதலமைச்சரும் அவரது அமைச்சரவையும் மாநில நிர்வாகத்திற்கு முழுப்பொறுப்பு வாய்ந்தவர்கள். எனவே சட்டமன்றத்தில் அரசாங்கத்தின் கொள்கைகள் வைக்கப்படும். அவற்றை சட்டமன்றம் தீர ஆய்வு செய்து, கட்டுப்பாடு செய்யும் அதிகாரத்தைக் கொண்டுள்ளது. சட்டமன்றம், மாநில நிர்வாகம் தொடர்பான அனைத்துப் பிரச்சனைகளையும் கேள்விகளாகவும், துணைக்கேள்விகளாகவும் எழுப்பி, அரசாங்கத்தின் கொள்கைகளுக்கு விளக்கம் கேட்கும். அரசாங்கத்தின் குறைகளை ஒத்திவைப்புத் தீர்மானம் மூலமாக சட்டமன்றம் எழுப்பும். அரசாங்க சட்டமுன்வரைவை அமைச்சரவை ஏற்காதபோதுகூட, சட்டமுன்வரைவிற்கு திருத்தமோ அல்லது நிராகரிக்கவோ சட்டமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. இதன்மூலம் அரசாங்கத்திற்கு பெரும்பான்மை பலம் சட்டமன்றத்தில் இல்லை என்பதையும் வெளிப்படுத்திவிடும். அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத்திற்கு வெட்டுத் தீர்மானம் நிறைவேற்றுவதன் மூலம் சட்டமன்றம் அரசாங்கத்திற்கு நெருக்கடி கூட விளைவிக்கலாம். பொதுவாக, சட்டமன்றத்தில் பெரும்பான்மை ஆளுங்கட்சிக்கு இருந்தால், அமைச்சரவை சொல்வதைக் கேட்கக்கூடிய அமைப்பாக மாறிவிடும். இதனை அமைச்சரவை எதேச்சதிகாரம் என வர்ணிப்பர்.

சட்டமன்றத்தில் வரக்கூடிய சட்டமுன்வரைவுகள் பொதுவாக அமைச்சரவை நிர்ணயித்தவைதான். எனவே சட்டமன்றம் இவற்றை நிராகரிக்காது. சட்டமன்றத்தில் பெரும்பான்மையை ஆளுங்கட்சி இழந்துவிட்டால், முதலமைச்சர் தனது பதவியை இராஜினாமா செய்துவிட வேண்டும். அல்லது அச்சட்ட மன்றத்தைக் கலைத்துவிட்டு, புதிய சட்டமன்றம் அமைய ஆளுநருக்கு ஆலோசனை கூறலாம். ஆளுநர் முதலமைச்சரின் ஆலோசனையை ஏற்பதுவும் நிராகரிப்பதுவும் அவருடைய விருப்ப அதிகாரத்தில் உள்ளது.

மாநில நிர்வாகத்தைப் பொறுத்தவரை, ஆளுநர் பெயர் அளவிலான ஆட்சித்துறையாக, மத்திய அரசாங்கத்தின் பிரதிநிதியாகச் செயல்படுகிறார். முதலமைச்சரும் அவரது அமைச்சரவையும் உண்மையான ஆட்சித்துறை. ஆளுநருக்கும் அமைச்சரவைக்கும் சுமுகமான உறவு மாநில நிர்வாகத்தை மேம்பாடு அடையச் செய்யும்.

## மாதிரி வினா :

மாநில முதலமைச்சரின் பணி, அதிகாரங்களை எழுது.

## பாடம் 16 மாநிலச் செயலகம்

"செயலகம்" எனும் சொல் அரசாங்கத்தின் துறைகளின் தொகுப்பை குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது. நிர்வாகத்தினர் செயலர்கள் என்றும் அரசியல் பிரிவினர்கள் அமைச்சர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். ஒரு துறையின் செயலர் அமைச்சரின் முக்கிய ஆலோசகராவார். இவர் அமைச்சர் செய்யும் முடிவுகளையும் உருவாக்கும் கொள்கைகளையும் செயல்படுத்த பொறுப்புடையவர். செயலர்கள், இணைச் செயலர்கள், கூடுதல் செயலர்கள், துணைச் செயலர்கள், சார்புச் செயலர்கள் மற்றும் உதவிச் செயலர்கள் ஆகியவர் பதவிக்கால முறையில் பணிபுரிகின்றனர். தலைமைச் செயலர் பதவி பதவிக்கால முறைக்கு விதி விலக்காகும்.

செயலக துறைகளின் எண்ணிக்கை மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. பொதுவாக துறைகளின் எண்ணிக்கை 10 முதல் 35 வரை என்றுள்ளது. துறைகளின் எண்ணிக்கை எதுவாயிருப்பினும் ஒவ்வொரு மாநிலமும், உள்துறை, வருவாய், உணவும் விவசாயமும், நிதி, சட்டம், கல்வி, தொழிற்சாலை, சுகாதாரம், பொதுப்பணி, போக்குவரத்து, தொழிலாளர் போன்ற முக்கியமான துறைகளைப் பெற்றிருக்கும்.

செயலகத்துறை ஆட்சித் துறையினின்று வேறுபட்டதாகும். சைமன் குழுவின் படி, செயலாக்கத் துறை செயலகத்தினின்று வேறுபட்ட ஒரு நிர்வாகக் கூறு ஆகும். இதன் தலைமைப் பீடத்தில் காவல்துறை தலைவர் அல்லது வன பராமரிப்பு தலைவர் இடம் பெறுகிறார். இவ்விதமாக ஒரு துறைத் தலைவர் அரசாங்கத்தின் தனிச்செயலர் ஒருவருடனும், தனி அமைச்சர் ஒருவருடனும் தொடர்புடையவராவார். ஏனெனில் இவர்களுடைய கட்டளைகளை இந்தத் துறைத்தலைவர் நிறைவேற்றி நிதியைச் செலவு செய்கின்றார். எல்லாத்துறைகளும் செயலாக்கத் துறைகளைப் பெற்றிருக்க வேண்டும் என்றில்லை. சில செயலகத் துறைகள் ஆலோசனைப் பணியையும் கட்டுப்பாட்டு பணியையும் செய்கின்றன. உதாரணமாக, நிதித்துறையும் சட்டத்துறையும் செயலாக்கத் துறைகளைப் பெற்றிருக்கவில்லை.

செயலாக்கத் துறையின் தலைவர் தனியறிவு பெற்றவராவார். ஆனால் இது ஒரு பொதுவான வழக்கமன்று. உதாரணமாக கூட்டுறவு சங்கங்களின் பதிவாளர் ஒரு பொது அறிவு பெற்ற அரசுப் பணியாளராவார். செயலாக்கத் துறையின் தலைவருடைய பணியை மேற்பார்வை செய்யும் செயலர் ஒரு பொது அறிவு பெற்ற அரசுப் பணியாளராவார். இவர் இந்திய நிர்வாகப் பணியைச் சேர்ந்தவராவார்.

செயலருக்கும் துறைத்தலைவருக்கும் இடையே உள்ள உறவு நிலைகளை நிர்ணயிக்க சில பொதுவான கோட்பாடுகள் இருக்கின்றன. மகேஸ்வரி கூறுகிறபடி, இந்தக் கோட்பாடுகளை பின்வருமாறு கூறலாம் :

1) கொள்கை உருவாக்கல், செயலகத்தின் முக்கிய பொறுப்பு; கொள்கை செயலாக்கல், துறையின் பொறுப்பு;

2) காலதாமதத்தைத் தவிர்ப்பது தவிர வேறு எதையும் செய்வதற்கான விஷயங்களில் செயலகம் ஈடுபடக்கூடாது.

3) துறைத் தலைவருக்கு, பணிநிலைகளைக் கட்டுப்படுத்தும் விதிகளுக்கு உட்பட்ட அளவில், அவருக்கு கீழ் உள்ள பணியாளர்கள் மீது முழுக் கட்டுப்பாட்டு அதிகாரமும் கொடுக்கப்பட வேண்டும்.

40 செயலகம் சாதாரண சேவைகளை அளித்து, அதனுடன் தொடர்புடைய துறைத்தலைவர்களுக்கு நிறுவனச் செயல்களையும் செய்ய வேண்டும். எடுத்துக்காட்டாக, அலுவலக வசதி ஒதுக்குதல் போன்ற பணிகளைக் குறிப்பிடலாம்.

மேற்படி கோட்பாடுகளின் அடிப்படையில் செயலகத் துறையின் பொறுப்புக்களையும் செயலாக்கத் துறையின் பொறுப்புக்களையும் வகைப்படுத்தலாம். எடுத்துக்காட்டாக அரசாங்கத்தின் பொதுவான திட்டங்களை உருவாக்குதல், திட்டங்களை அமுலாக்கும் பொழுது கையாள வேண்டிய கோட்பாடுகள், மற்றும் கொள்கைகள் சம்பந்தமான தீர்மானங்களை ஏற்படுத்துதல், அரசாங்கத் திட்டங்களின் செயலாக்கத்தின் நிலையை மேற்பார்வை செய்தல்; நிதித் துறையின் உதவியுடன் வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்து செலவுகளைச் கண்காணித்தல்; சட்டமன்றக் கேள்விகளுக்கு பதில்களைத் தயாரித்தல் போன்றவை செயலகத் துறையின் பொறுப்புக்களாகும். இதற்கு மாறாக, செயலகத் துறையின் தலைவர் ஒரு சில பொறுப்புக்களைப் பெற்றிருக்கிறார். உதாரணமாக, அமைச்சகத்திற்கு தொழில்நுட்ப ஆலோசனை அளித்தல், செயலாக்க மேற்பார்வை, துறையின் வரவு செலவுத் திட்டத்தின் முதல் திட்டப்படியை உருவாக்குதல், விதிமுறைப்படி சார்நிலைப் பணியாளர்கள் மீது ஒழுங்குமுறை அதிகாரத்தை பிரயோகித்தல் ஆகியவைகளாகும்.

செயலகம் கொள்கை உருவாக்கலில் ஒரு முக்கியப் பங்கு வகிக்கிறது. மேலும், இது மாநில நிர்வாகத்தில் ஒரு முக்கிய நிறுவனமாகத் திகழ்கிறது. இதை மனதில் கொண்டு ராஜஸ்தான் நிர்வாக சீர்த்திருத்தக் குழு (196) செயலாக்கத்தின் பணிகளை வரையறை செய்துள்ளது. இதன் அறிக்கைப்படி செயலகத்தின் பணிகளை பொதுவான பணிகள், நிதிப்பணிகள், பணி சம்பந்தப்பட்ட பணிகள் என்று வகைப்படுத்தலாம். பொதுவான கொள்கை பற்றி, விஷயங்கள் சம்பந்தப்பட்ட பணிகள், துறைகளிடையேயான ஒருங்கிணைவு இந்திய அரசாங்கத்துடனும் மற்ற மாநில அரசாங்கங்களுடனுமான கடிதப் போக்குவரத்து, திட்டங்களின் நிலையை மறு ஆய்வு செய்தல், பொதுக் கணக்குக் குழு, மதிப்பீட்டுக் குழு, சட்டமன்றம் மற்றும் பாராளுமன்றம் ஆகியவைகளின் கேள்விகளை மறு ஆய்வு செய்தல் போன்ற பணிகள் பொதுவான பணிகளாகும். புதிய செலவினங்கள் தொடர்பான முன்மொழிதல்கள், துறைகளின் வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகளை மறு ஆய்வு செய்தல், அவசர காலநிதியினின்று செய்யப்படும் செலவுகளுக்கு ஒப்புதலளித்தல் போன்றவை நிதிப் பணிகளாகும். பணிமுறை விதிகள் சம்பந்தப்பட்ட விஷயங்கள், பதவி நியமனம், பதவி உயர்வு, இடமாற்றம் போன்ற விஷயங்கள், மாநில பணியில் அலுவலர்களை முதலாவது நியமித்தல், அலுவலர்களுக்கு தண்டனை வழங்குதல் சம்பந்தப்பட்ட பணிகள் பணி சம்பந்தப்பட்ட பணிகளாகும்.

## தலைமைச் செயலர்:

தலைமைச் செயலர் பெரும்பாலும் பொதுவான நிர்வாகத் துறைக்கு தலைவராக இருக்கிறார். இத்துறையின் அரசியல் தலைவராக முதலமைச்சர் விளங்குகிறார். அரசாங்கத்தின் மற்ற எல்லா செயலகத் துறைகள் மீதும் இவருக்குக் கட்டுப்பாட்டு அதிகாரம் உண்டு. மாநில அரசுப் பணிகளுக்கு இவரே தலைவராவார். இவர் மாநில நிர்வாகத்திற்கு தலைமை அளிக்கிறார். தலைமைச் செயலரின் பதவி பதவிக்கால முறைக்கு அப்பாற்பட்டது. நடைமுறையில் இவர் தலைமைச் செயலராகவேயிருந்து ஓய்வு பெறுகிறார் அல்லது மத்திய அரசாங்கத்தில் இதைவிட முக்கிய பொறுப்பு வகிக்கச் செல்கிறார்.

மாதிரி வினா :

மாநிலச் செயலகத்தின் தன்மை, பணிகள் ஆகியவற்றை விவரி.

## பாடம்–17 மாவட்ட நிர்வாகம்

போதுமான அளவு பெரிய நிலப்பகுதியில் ஒருங்கிணைக்கப்பட்டுள்ள பகுதி தான் மாவட்டம் என்றழைக்கப்படுகிறது. ஒரு மாநிலத்தின் உட்பிரிவுதான் மாவட்டம் என்று ஆங்கில அகராதி பொருள் விளக்கம் அளிக்கிறது. இப்பொருள் விளக்கத்தின் அடிப்படையில் நோக்குங்கால், இந்தியாவில் மாநிலங்களைப் பிரிவுகளாகக் கொள்ளலாம். ஒவ்வொரு மாநிலமும் அல்லது மாவட்டங்கள் அல்லது உட்பிரிவுகள் என்றவற்றை தன்னகத்தே கொண்டுள்ளது. இந்திய வரலாற்றில் பொது நிர்வாக அமைப்பிற்கு உகந்த நிலப்பகுதியாக இவ்வுட்பிரிவுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், இவ்வுட்பிரிவுகளில் அமைக்கப்பட்டுள்ள நிர்வாக அமைப்புக்கள் பல்வேறு காலங்களிலும் அக்காலங்களில் நிலவிய நிர்வாக தேவைகளுக்கு ஏற்ப மாறுபட்டு வந்திருப்பதையும் காணலாம். நிர்வாகத்தின் ஒரு பகுதியாக திகழும் மாவட்டத்தின் அடிப்படைத் தோற்ற அமைப்பில் குறிப்பிடத்தக்க ஒரு தொடர்ச்சியை உணரலாம். மனு காலத்திலிருந்து இவ்வமைப்பில் பெரும் மாறுதல் ஏதும் நிகழவில்லை. மனுவின் காலத்தில் ஏறக்குறைய ஆயிரம் கிராமங்கள் ஒருங்கிணைந்து மாவட்ட அமைப்பு உருவாகியது. அவ்வமைப்பு தனிப்பட்ட ஒரு அதிகாரியின் பொறுப்பில் செயல்பட்டது. 1000 என்ற எண்ணிக்கை முக்கியமான ஒன்றாக கருதப்படுகிறது. ஏனென்றால் இன்றும் இந்தியாவில் ஒவ்வொரு மாவட்டமும் சராசரியாக 1100 கிராமங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

### மாவட்ட அதிகாரி:

சட்டபூர்வமாக மாவட்டம் என்று அங்கீகரிக்கப்பட்டுள்ள நிலப்பகுதியில் அரசாங்கம் மேற்கொள்ளும் பணிகளை நிர்வகிப்பது மாவட்ட நிர்வாகமாகும். மாவட்ட அதிகாரி சில மாநிலங்களில் மாவட்ட கலெக்டர் என்றும் சில மாநிலங்களில் துணை ஆணையர் (Deputy Commissioner) என்றும் அழைக்கப்படுகின்றார். இவர் மாவட்ட நிர்வாக அமைப்பில் ஒரு முக்கிய பங்கு ஏற்கின்றார். மாவட்டத்தில் செயல்படும் நடவடிக்கைகளை மேற்பார்வை செய்கின்றார். மாவட்ட மருத்துவ அதிகாரி, மாவட்ட உயர் பொறியாளர், மாவட்ட காவல்துறை அதிகாரி, மாவட்ட கல்வி அதிகாரி, மாவட்ட நீதிபதி போன்ற அதிகாரிகள் மாவட்டத்தில் நிலவும் பல்வேறு ஆணைகளையும் தலைமையேற்று நடத்தும் பிற அதிகாரிகளாவர். எவ்வாறெனினும், மாவட்ட அதிகாரிதான் திறமையான நிர்வாகத்திற்கு பொறுப்பேற்கின்றார்.

### மாவட்ட அதிகாரியின் பணிகள்:

மாவட்ட அதிகாரி பல்வேறான பணிகளையும் ஆற்றுகின்றார். எனவே, இவர் நிர்வாகத்தின் முதுகெலும்பாக கருதப்படுகின்றார். மாவட்ட நிர்வாகத்தின் எல்லா அமைப்புக்களும் இவரை மையமாக வைத்து சுழல்கின்றது என்று கூறலாம். "அரசாங்க பிரதிநிதி", "நிர்வாக அச்சாணி" மற்றும் "முன்னேற்றத்தின் உயிர் நாடி" என்று பல்வேறாக மாவட்ட அதிகாரி விமர்சிக்கப்பட்டுள்ளார். பின் கூறப்பட்டுள்ள முக்கியமான பணிகளை இவர் ஆற்றுகின்றார்.

(அ) கலெக்டராக ஆற்றும் பணிகள்:– இவர் வருவாய்த் துறை நிர்வாகத்தின் தலைவராக திகழ்கின்றார். மாவட்ட வருவாய் சம்பந்தப்பட்ட எல்லா காரியங்களுக்கும் அவர் பொறுப்பேற்கின்றார். கலெக்டர் பதவி உருவாக்கப்பட்ட போது அளிக்கப்பட்ட முதல் பணி இப்பணியாகும். இவரது பணிகளில் பிரதம பணியாக இப்பணி காணப்படுவதால், இன்றும் இவர் கலெக்டர் என்றழைக்கப்படுகின்றார்.

(ஆ) நிர்வாகியாக ஆற்றும் பணிகள் :– மாவட்டத்தின் செயலாண்மைத் தலைவராக இவர் திகழ்கின்றார். மாவட்ட நிர்வாகத்தைக் கவனிக்கும் மாநில அரசாங்கப் பிரதிநிதியாக செயல்படுகின்றார். அடிப்படை நிர்வாகத்திறன் வளர்த்தல், மக்கட்தொகை சம்பந்தப்பட்ட புள்ளிவிபரம் தயாரித்தல், சொத்து சம்பந்தப்பட்ட பதிவேடு தயாரித்தல், அரசியல் நிலைகளை ஆராய்தல், சட்டம் ஒழுங்கு நிலைநாட்டல் போன்றவை இவரது பணிகள். சுருங்கக்கூறின், பணிகளை திறம்பட ஆற்ற நிர்வாகத்தின் தலைவர் என்ற நிலையில் இவர் எல்லா அதிகாரங்களையும் பெற்றிருக்கின்றார்.

(இ) சட்டம் ஒழுங்கு பராமரிப்பாளராக ஆற்றும் பணிகள்:– மாவட்ட தலைவர் என்ற நிலையில், சட்டம் ஒழுங்கு பராமரித்தல் இவரது பொறுப்பாகும். சட்டம் ஒழுங்கு சம்பந்தப்பட்ட எல்லா காரியங்களுக்கும், காவல் துறைக்குத் தலைமையேற்று நடத்தும் மாவட்ட உயர் காவல் அதிகாரி இவருக்கு பொறுப்புடையவராக இருக்கின்றார். சட்டம் ஒழுங்கு நிலையை நன்முறையில் தெளிவாக அறிந்தவராக இருக்க வேண்டியது இவரது கடமையாகும். பாகுபாடற்ற முறையில் குடிமக்களை நடத்தல், மறுக்கப்படாமல் அனைவருக்கும் நீதி வழங்கல் போன்றவற்றை கவனித்தல் இவரது பணியாகும்.

(ஈ) மேற்பார்வையாளராக மற்றும் கட்டுப்பாட்டாளராக ஆற்றும் பணிகள்:– மாவட்ட தலைவர் என்ற ரீதியில் பல்வேறு நிர்வாகத் துறைகளை மேற்பார்வை செய்யும் மற்றும் கட்டுப்படுத்தும் அதிகாரம் படைத்தவராக இவர் திகழ்கின்றார். காவல் துறை மற்றும் வருவாய்த்துறை போன்றவற்றை கட்டுப்படுத்துவதோடு, இவர் மாவட்ட வன அதிகாரியையும் பொதுப்பணித் துறையையும் கட்டுப்படுத்துகின்றார்.

(உ) நெருக்கடி நேர நிவராண பணி அமைப்பாளராக ஆற்றும் பணி:– போர், உணவு பற்றாக்குறை, பஞ்சம், பெரு வெள்ள அபாயம் போன்றவற்றால் நெருக்கடி ஏற்படும் போது இவர் சில விசேட பணிகளை ஆற்றல் வேண்டும். நெருக்கடி நேர நிவாரண பணிகளை செயலாற்றும் முழு பொறுப்பும் இவரிடம் ஒப்படைக்கப்படுகிறது. நெருக்கடி நேரபணி ஒருங்கிணைப்பாளராக முழுஅதிகாரம் பெற்று இவர் திகழ்கின்றார்.

(ஊ) வளர்ச்சி அதிகாரியாக ஆற்றும் பணிகள்:– வளர்ச்சி நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில் பின்வரும் பணிகளை இவர் ஆற்ற வேண்டும்:

(1) பொது நிர்வாக அமைப்பை வலுப்படுத்தி சீர்ப்படுத்தல்;

(2) கிராம நிலையில் வளர்ச்சி ஏற்பட உகந்த செயல் பிரிவுகளை உருவாக்குதல்;

(3) வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ள பல்வேறு துறைகளின் பணிகளையும் ஒருங்கிணைத்தல் மற்றும் மாவட்ட வளர்ச்சி நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட வட்டார ஒருங்கிணைவு, மேற்பார்வை போன்ற பணிகளை மேற்கொள்ளல் போன்றவையாகும்.

(எ) ஒருங்கிணைவாளர் மற்றும் கல்வியாளராக ஆற்றும் பணிகள்:– மாவட்ட உயர் தலைமைச் செயல் அதிகாரியாக பல துறைகள் ஆற்றும் பணிகளையும் ஒருங்கிணைத்தல் வேண்டும். விவசாயம், சிறு தொழில், குடிசைத் தொழில், கல்வி, சுகாதாரம், சமூக நல்வாழ்வு, செய்தித் தொடர்பு போன்ற சம்பந்தப்பட்ட வளர்ச்சி நடவடிக்கைகளை இவர் ஒருங்கிணைக்கின்றார். சுருங்கக்கூறின், ஊராட்சிகள் மற்றும் குழுக்கள் போன்றவற்றின் ஒருங்கிணைவாளராகவும் கல்வியாளராகவும் இவர் செயலாற்றுகின்றார்.

(ஏ) பயிற்சியாளராக மற்றும் கற்பிப்பவராக ஆற்றும் பணிகள்:– பயிற்சி நிலையம் ஆற்றும் சில காரியங்களையும் இவர் ஆற்றுகின்றார். இவருக்கு துணையாளராக ஒரு I.A.S. அதிகாரி அன்னாரது வேலைத் திறமையைப் பரீட்சிக்கும் காலத்தில்

நியமிக்கப்படுகின்றார். இவ்வாறான நிலையில் அமர்ந்து வேலைத் திறமையைப் பரீட்சிக்கும் காலத்தில் I.A.S. அதிகாரி பல காரியங்களையும் கற்றல் வேண்டும். மாவட்ட அதிகாரியோடு தனக்கு ஏற்படும் தொடர்பால் அவர் தானாக ஒழுங்குமுறைச் சாராத சில சீரிய பயிற்சிகளைப் பெறுகின்றார். இளநிலை அதிகாரிகளின் திறமை அவர்கள் பயிற்சி பெறும் அனுபவமிக்க மாவட்ட அதிகாரிகளின் திறமையைப் பொறுத்து அமைகின்றது என்று பொதுவாக கூறப்படுகிறது.

இவ்வாறாக மாவட்ட அதிகாரி மாவட்ட நிர்வாகத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகின்றார். அரசாங்கத்தின் பிரதிநிதியாக இவர் செயல்படுகின்றார். இவர் வருவாய்த்துறையின் மாவட்ட தலைவராவார். சில மாநிலங்களில் இவர் மாவட்ட நிர்வாக மாஜிஸ்ட்ரேட் ஆகவும் பணிபுரிகின்றார். இவர் மாவட்டத்திலுள்ள எல்லா துறைகளின் பணியிலும் பொதுவான ஒரு தொடர்பு கொண்டிருக்கின்றார். அரசு பணிகள் அதிகரித்து வருவதால், இவர் அப்பணிகள் சம்பந்தப்பட்ட ஒருங்கிணைப்பு மற்றும் வழிகாட்டலுக்கு தனிப்பட்ட பொறுப்பேற்கின்றார்.

### மாவட்ட நிர்வாக வளர்ச்சி:

மாவட்ட கலெக்டர் விரிவான பல பணிகளை மாவட்டத்தில் மேற்கொள்வதால் மாவட்டத்தில் சிக்கலான ஒரு நிர்வாக அமைப்பு உருவாகின்றது. இன்று நிலவுகின்ற மாவட்ட நிர்வாக அமைப்பு ஆங்கிலேயரால் உருவாக்கப்பட்ட ஒன்று. கிழக்கிந்திய கம்பெனியின் ஆரம்ப காலத்தில் கம்பெனியாரின் வியாபார பிரதிநிதி ஒருவருக்கு மாவட்டப் பகுதி வழங்கப்பட்டது. அப்பிரதிநிதி இலாபம் ஈட்டும் வணிபத்தை தன்னிச்சையாக மேற்கொண்டார். நாளடைவில் கம்பெனியார் வியாபாரத்தோடு ஆளுகைப் புரியும் பணிதனையும் மேற் கொண்டனர். அந்நேரத்தில் மாவட்டப் பகுதியில் நியமனம் செய்யப்பட்ட பிரதிநிதிகள் சொத்து சம்பந்தப்பட்ட வருவாய் வசூலிக்கும் கலெக்டர்களாக மாறினர். வியாபார பணிகளின் முக்கியத்துவம் குறைந்து, வரிவிதித்தல் நிலவரிப் பிரித்தல் போன்ற பணிகளின் முக்கியத்துவம் அதிகரித்தது. கிழக்கிந்திய கம்பெனியிடம் இருந்த படை நாடு முழுவதிலும் சட்டம் ஒழுங்கை பராமரிக்க முடியாத நிலையில் இருந்ததால், படையின் உதவியோடும் படையின் உதவியின்றியும் சட்டம் ஒழுங்கை பராமரிக்க வேண்டிய ஒரு நிலை எழுந்தது. எனவே சட்டம் ஒழுங்கு பராமரிக்கும் பொறுப்பு ஒவ்வொரு மாவட்டத்திலும் அதிகார பூர்வமாக கலெக்டரிடம் ஒப்படைக்கப்பட்டது.

மாவட்டங்களில் அரசாங்க அமைப்பினை ஏற்படுத்தல் மாவட்ட நிர்வாக பரிணாம வளர்ச்சியின் மூன்றாவது கட்டமாகும். கலெக்டர் வரிவிதித்து, நில வருவாய் மற்றும் ஏனைய வரிகள் போன்றவற்றை வசூலித்தார். மாவட்ட மாஜிஸ்ரேட்டாக அமர்ந்திருந்து, நீதி நிர்வாகம் செய்து, சட்டம் ஒழுங்கை நிலை நாட்டினார். அவருக்கு உதவிபுரிய காவல்துறை உயர் அதிகாரி ஒருவர் காணப்பட்டார். படிப்படியாக மருத்துவ உதவியின் தேவையும் மாவட்டத்தில் உணரப்பட்டது. மாவட்ட பணியாளருடன் ஒரு மருத்துவரும் இணைக்கப்பட்டார். இவ்வாறு, மாவட்ட அளவில் நல்வாழ்வு எண்ணம் புகுத்தப்பட்டது. மாவட்ட சிறைச்சாலையின் தலைவராக மாவட்ட ஆட்சியாளர் பொறுப்பேற்றார். இவ்வகையிலான மாவட்ட ஆட்சி முறை ஆங்கில ஆட்சி நடைபெற்ற காலம் முழுவதும் நிலவியது. இவ்வாறு, பல மாவட்ட அதிகாரிகளை நியமனம் செய்ததின் மூலம் மாவட்ட நிர்வாகம் சிக்கல் நிறைந்த ஒரு நிர்வாக அமைப்பாக வளர்ந்தது.

உள்ளாட்சி அரசாங்க நிறுவனங்கள் மற்றும் 1919–20 ல் புகுத்தப்பட்ட இரட்டை ஆட்சி போன்றவை நிர்வாகத்தில் சில மாறுதல்களை ஏற்படுத்தியது. கல்வி, சுகாதாரம், சிறுசாலைகள் போன்ற பணிகள் மாவட்ட குழுக்களிடம் ஒப்படைக்கப்பட்டது. மேலும்,

இரட்டை ஆட்சி முறையில் அரசியல் அதிகாரங்கள் பிரிக்கப்பட்டமையால், பல தனிப்பட்ட துறைகள் உருவாக்கப்பட்டன. இதனால் ஏற்பட்ட விளைவுகளில் முக்கியமானது மாவட்ட நிர்வாகத்தில் நிலவிய பழைய ஒற்றுமை மறைந்தது தான். ஒவ்வொரு துறையில் பிற துறைகளோடு இணைந்து செயல்படாமல், தனியாக செயல்பட ஆரம்பித்தன.

சுதந்திரம் கிடைத்த நேரத்தில் மாவட்ட கலெக்டர் மாவட்ட நிர்வாக பிரிவுகளாகிய துறைகளிடையே ஒற்றுமையை ஏற்படுத்துவதைவிட, அவைகளின் பணிகளை ஒருங்கிணைப்பதை முக்கியமானதாக கருதினார். மாவட்ட கலெக்டரின் தலைமையில் செயல்பட்ட மாவட்ட நிர்வாகம் உள்ளாட்சி அரசாங்க நிறுவனங்களுக்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே தொடர்பை ஏற்படுத்தும் ஒன்றாக கருதப்பட்டது. இதற்கு சில மேற்பார்வை செய்யும் அதிகாரமும் கொடுக்கப்பட்டது. தொழில் வல்லுநர்களும், உள்ளாட்சி நிறுவனங்களும் தனியான நிர்வாக அமைப்புக்களாக மாவட்ட நிர்வாக அமைப்பில் செயல்பட்டு கொண்டிருக்கும் நேரம் மாவட்ட கலெக்டர் பதவி ஒருங்கிணைப்பு பணியாற்றும் ஒன்றாக உருவெடுத்தது.

எவ்வாறெனினும் கலெக்டர் மாவட்டத்தில் தொடர்ந்து ஒரு பிரதம இடத்தைப் பெற்றிருக்கின்றார். ஏதாவது ஒரு ஒதுக்கப்பட்ட பணி எந்தவொரு துறையிடமும் ஒப்படைக்க முடியாத நிலையோ அல்லது அந்தப்பணியை ஆற்ற துறைகளில் போதிய ஊழியர் இல்லை என்ற நிலையோ ஏற்பட்டால் அவ்வாறான பணிகள் இவருடைய வருவாய் மற்றும் சட்டம் ஒழுங்கு பராமரித்தல் போன்ற முக்கிய பணிகளோடு சேர்த்து கூடுதலாக இவரிடம் வழங்கப்படுகிறது. இவ்வாறாக, இவர் அரசாங்கம் அவ்வப்போது கொண்டுவரும் சில புதிய பணிகளை ஆற்றுகின்றார். பொது நல் வாழ்விற்கான திட்டமிடல், வளர்ச்சிப்பணி, மக்கட்தொகை கணக்கெடுப்பு, வன விலங்கு பாதுகாப்பு, சிறு சேமிப்பை பெருக்குதல், மாநில அரசாங்கத்திற்கு கடன் தொகை பெறல், மாநில லாட்டரி சீட்டு விற்பனை போன்றவை அவ்வப்போது அரசாங்கம் கொண்டு வருகின்ற இவர் ஆற்றும் இதர பணிகள். தனது பதவியின் காரணமாக மாவட்ட கலெக்டர் மாவட்ட தேர்தல் அதிகாரியாகவும் பணியாற்றுகின்றார். மாவட்ட திட்டமிடல் மற்றும் வளர்ச்சிப் பணிகளுக்கு வழிகாட்டல் இவருடைய இன்னொரு முக்கியப் பணி. எனவே இவர் மாவட்ட வளர்ச்சி அதிகாரி என்றும் அழைக்கப்படுகிறார். இன்று பெரும்பாலான வளர்ச்சிப் பணிகள் ஊராட்சிகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன என்றாலும் மாநில அரகாங்கத்தின் பிரதிநிதி என்ற முறையில் ஊராட்சி நிறுவனங்கள் ஆற்றும் வளர்ச்சிப் பணிகளை மாவட்ட கலெக்டர் கவனித்து, அவற்றின் முன்னேற்றத்திற்கு தேவையான வழிகாட்டல் அளிக்கின்றார்.

### மாவட்ட நிர்வாகத்தில் தோன்றிவரும் சில வகைகள்:–

மாவட்டத்திலுள்ள சமுதாயத்தின் முன்னேற்றத்தையும், வளர்ச்சியையும் ஏற்பது தான் மாவட்ட நிர்வாகத்தின் முக்கிய குறிக்கோளாகும். இக்குறிக்கோளை அடையும் கருவியாக நிர்வாக அமைப்புக்கள் கருதப்படுகின்றன. எனவே, குறிக்கோளை சீரிய முறையில் அடைய நிர்வாகத்திற்கு ஒரு திட்டமான உருவமும், வகையும் தேவை.

இந்தியாவில் இரண்டு விதமான மாநில நிர்வாக வகைகள் காணப்படுகின்றன. முதல் வகை மஹாராஷ்டிரா, குஜராத் ஆகிய மாநிலங்களில் பின்பற்றப்படுகின்றது. இம்முறையில் ஒழுங்கு படுத்தும் பணிகள் வளர்ச்சிப் பணிகளில் இருந்து முற்றிலுமாக பிரிக்கப்பட்டுள்ளது. அவ்வாறு பிரிக்கப்பட்டதன் வாயிலாக:

(அ) மாவட்ட அளவிலான எல்லா வளர்ச்சிப்பணி அதிகாரிகளும் ஜில்லா பரிஷத்தின் நிர்வாகக் கட்டுப்பாட்டின் கீழ் வைக்கப்பட்டுள்ளார்.

(ஆ) ஒரு I.A.S. அதிகாரி ஜில்லா பரிஷத்தின் செயலாற்றும் தலைமை அதிகாரியாக நியமிக்கப்பட்டுள்ளார்; மற்றும்

(இ) ஜில்லா பரிஷத்தில் பணியாற்றும் எல்லா அதிகாரிகளும் மேற்கூறிய I.A.S.அதிகாரியின் நிர்வாகக் கட்டுப்பாட்டின் கீழ் அமர்த்தப்பட்டுள்ளார்.

இரண்டாவது வகை அமைப்பு தமிழ்நாடு, ராஜஸ்தான் மற்றும் சில மாநிலங்களில் பின்பற்றப்படுகின்றன. இம்மாநிலங்களின், கலெக்டர் தொடர்ந்து ஒழுங்குப்படுத்தும் மற்றும் வளர்ச்சிப் பணிகளை ஆற்றி வருகின்றார். இரண்டு வகை அமைப்புக்களும் திருப்திகரமாக செயல்பட்டு வருகின்றன. என்றாலும், மஹராஷ்டிரா, குஜராத் ஆகிய மாநிலங்களில் பின்பற்றப்படும் வகை முறையால், தேர்ந்தெடுக்கபட்ட பிரதிநிதிகளுக்கு அதிக வாய்ப்பு வழங்கப்படுகின்றது. மேலும் இவ்வகை அமைப்பு வளர்ச்சிப் பணிகளில் ஒருங்கிணைப்பை ஏற்படுத்துகின்றது.

இன்று நாட்டின் சமுதாய—பொருளாதார முன்னேற்றம் முக்கியமான ஒன்றாக கருதப்படுவதால், அம் முன்னேற்றத்தை அடைய மாவட்டம் எவ்வகையில் அமைக்கப்படல் வேண்டும் என்பது தான் முக்கிய கேள்வியாக திகழ்கிறது. அனுபவத்தை வழிகாட்டியாக எடுத்துக் கொண்டால் வளர்ச்சிப் பணிகள் ஒழுங்குப்படுத்தும் பணிகளில் இருந்து பிரிக்கப்பட்டால் மட்டும் போதாது, சட்டம் ஒழுங்கு பராமரித்தல் வரி பிரித்தலில் இருந்து பிரிக்கப்படல் வேண்டும் என்ற ஒரு நிலையையும் கண்டறியலாம்.

சட்டம் ஒழுங்கு பராமரித்தல் இன்று சிக்கலான ஒரு பிரச்னையாக உருவெடுத்துள்ளது. சட்டம் ஒழுங்கு என்பது களவு, சொத்து தகராறு, கொலை, கொள்ளை போன்றவற்றை மட்டும் குறிக்கும் ஒன்றாக இன்று இல்லாமல், சமூக அரசியல் அமைப்பில் பல விளைவுகளை ஏற்படுத்தும் பிரச்னைகளைக் குறிக்கும் ஒன்றாகவும் கருதப்படுகிறது. எனவே, சட்டம் ஒழுங்கிற்கு பொறுப்பேற்கும் அதிகாரி சட்டம் ஒழுங்கைப் பராமரிப்பதோடு மட்டும் நின்று விடாமல், சட்டமின்மை ஏற்பட காரணியாய் அமைந்த அதிருப்தி எவ்வாறு ஏற்படுகின்றது என்பதை ஆராய அமைப்புக்களை அமைத்து செயல் பட வேண்டும். எனவே, மாவட்ட அளவில் நிர்வாகம் மூன்று தலைப்பின் கீழ் பிரிக்கப்படல் வேண்டும் (1) வரி வசூலித்தல், (2) சட்டம் ஒழுங்கு மற்றும் (3) வளர்ச்சி.

ஒரு அதிகாரி வரி வசூலித்தலுக்கு பொறுப்பேற்க வேண்டும். அவ்வதிகாரி நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தால் அதை எதிர்நோக்க தேவையான அளவு சட்டத்தைப் படித்து தேர்ந்தவராக இருத்தல் வேண்டும். சட்டம் ஒழுங்கு பராமரிக்கும் அதிகாரிக்கு ஒரு சமூக இயல் கற்றவர் உதவியாளராக அமர்த்தப்படல் வேண்டும். அவ்வாறு அமர்த்தப்பட்டால், அவர் சமூக பொருளாதார சம்பந்தப்பட்ட ஆய்வுகள் நடத்தி, அரசாங்க கொள்கைகளின் மேல் பொது மக்கள் கொண்டிருக்கும் கருத்தை அறிந்து அரசாங்கத்தை அக்கருத்திற்கேற்ப செயல்பட வேண்டும். இவ்வாறு பிரச்னைகளை அணுகினால் மாணவர் கிளர்ச்சி, தொழிலாளர் பிரச்னை, விவசாயிகள் பிரச்னை போன்றவற்றை தீர்க்க சிந்தித்து செயல்பட வாய்ப்புண்டு. இம் முறைகளைப் பின்பற்றி பொது மக்களுக்கு அரசாங்கத்தின் திட்டங்களையும் பணிகளையும் விளக்கிக் கூறலாம். அத்திட்டங்களின் மேலும் பணிகளின் மேலும் பொது மக்கள் கொண்டிருக்கும் கருத்தை அரசாங்கத்திற்கு தெரிவிக்கலாம்.

வளர்ச்சி நிர்வாகத்தைப் பொறுத்த மட்டில், அப்பணி ஜில்லா பரிஷத்திடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்ற ஆலோசனை கூறப்பட்டுள்ளது. மாவட்டம் அளவில் வளர்ச்சிப் பணியாற்றும் துறைகளின் பணிகளை ஒருங்கிணைத்து கட்டுப்படுத்த ஒரு தலைமை செயல் அதிகாரி நியமிக்கப்பட வேண்டும்.

## பயிற்சிக்குதவும் மாதிரி வினா:

மாவட்ட நிர்வாகத்தில் புதிதாக தோன்றி வரும் பிரச்னைகளை விவாதிக்க.

## பாடம்–18 ஊராட்சி அரசாங்கம்

தேசீய விரிவாக்கப்பணி, சமுதாய வளர்ச்சித் திட்டம் போன்ற திட்டங்களைச் செயற்படுத்தப்படுவதில் ஏற்பட்ட மந்த நிலையின் காரணங்களை ஆராய்வதற்கெனவும் அவற்றைச் சீர்படுத்த பரிந்துரை செய்யும் திட்ட ஆணையத்தின் உட்குழு திரு. பல்வந்த்ராய் மேத்தா அவர்களின் தலைமையின் கீழ் குழுவொன்றை 1956–ஆம் ஆண்டு நியமனம் செய்தது. ஊரக ஆட்சி அமைப்புக்களை மிக விரிவாக ஆராய்ந்த இக்குழு ஜனநாயகப் பன்முகப்படுத்தலை பரிந்துரை செய்தது. சமுதாய வளர்ச்சி சம்பந்தப்பட்ட மிக விரிவான பொறுப்புக்களைக் கொண்ட ஊராட்சி அமைப்பொன்றை உருவாக்க வேண்டுமென்று இக்குழு பரிந்துரை செய்தது. மேற்கூறிய பொறுப்புக்களை ஊரக மட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படும் மூன்று அமைப்புக்களிடம் விட வேண்டுமென்று இக்குழு பரிந்துரை செய்தது. கிராம மட்டத்தில் நேரடியாகத் தோந்தெடுக்கப்படும் ஊராட்சி, மேலாண்மைப் பொறுப்புடைய கிராம சபை, வளர்ச்சிப்பகுதி ஒவ்வொன்றிலுமுள்ள பஞ்சாயத்து சமிதி, மாவட்ட மட்டத்திலுள்ள மாவட்ட சபை, ஆகியவைதான் ஊராட்சி அமைப்பின் பகுதிகள். ஊரக இந்தியாவைப் பொறுத்தமட்டில் மாவட்ட அளவிலும் அதன் கீழும் ஜனநாயக பன்முகப்படுத்தலைப் புகுத்துவதற்கான புதிய அமைப்புத்தான் ஊராட்சி அமைப்பு. ஊராட்சி நிர்வாகம், வளாச்சி ஆகியவற்றிற்கென வளர்ந்து வரும் நாடுகளில் உருவாக்கப்பட்டுள்ள அமைப்புக்களில் மிக முக்கியமானதும், விரிவானதும்தான் இவை.

ஊரக நிர்வாகம், மக்களாட்சிப் புனரமைப்பு போன்றவை சம்பந்தமாக இந்தியாவில் ஒரு புத்துணர்ச்சி தோன்றுவதற்கு பல்வந்தராய் மேத்தாவின் அறிக்கை தூண்டுகோலாக அமைந்தது. ஊராட்சி சம்பந்தப்பட்ட சட்டங்களை உருவாக்குவதிலும், அவற்றைச் செயல்படுத்துவதிலும் முன்னோடியான நடவடிக்கை 1959–ஆம் ஆண்டு ராஜஸ்தான், ஆந்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் எடுக்கப்பட்டது. 1964–ஆம் ஆண்டுக்குள் பதினொன்று மாநிலங்களில் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டது. 1968–ஆம் ஆண்டில் இந்தியாவில் மொத்தம் 253 மாவட்ட சபைகளும் 3494 ஊராட்சி ஒன்றியங்களும் 2,12,424 கிராமப் பஞ்சாயத்துக்களும் செயல்பட்டு வந்தன. மொத்த கிராமங்களில் 93 சதவீதமும், ஊரக மக்கள் தொகையில் 97.5 சதவீதமும் இவற்றில் உட்பட்டன.

### மாவட்ட சபை (Zilla Parishad):

பலவகைப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட மாவட்ட சபை, முதலாவதாக, ஒரு மாவட்டத்திலுள்ள ஊராட்சி ஒன்றியங்களின் பிரதிநிதிகள் மாவட்ட சபையின் உறுப்பினராக இருப்பர். ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள் மாவட்ட சபையில் பதவிவழி உறுப்பினராக இருப்பது எல்லா மாநிலங்களில் காணப்படுகின்றது. குஜராத், பஞ்சாப், உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் ஒன்றியத் தலைவர்கள் மட்டுமின்றி ஒவ்வொரு ஒன்றியத்தின் உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதியொருவரும் மாவட்ட சபையில் அங்கத்துவம் பெறுகின்றனர். மாவட்ட சபையின் உறுப்பினர்கள் நேரடியாகத் தேர்ந்தெடுப்பதற்கான வழிமுறைகளும் மராட்டிய மாநிலத்தில் காணப்படுகின்றது. இரண்டாவதாக, மேற்கு வங்கம் போன்ற மாநிலங்களில் ஒவ்வொரு உட்கோட்டத்திலுள்ள ஊராட்சி தலைவர்களின் இரு பிரதிநிதிகள் மாவட்ட சபையில் உறுப்பினராகின்றனர். மூன்றாவதாக, நகராட்சிகள் யாவற்றின் தலைவர்களும் மாவட்ட சபையில் உறுப்பினராக இருப்பதை உத்திரப்பிரதேசத்தில் காணலாம். நான்காவதாக, பெரும்பாலான மாநிலங்களின் குறிப்பிட்ட மாவட்டங்களைச் சார்ந்த சட்டமன்றத்தின் மேலவை, கீழவை உறுப்பினர்களும், பாராளுமன்ற உறுப்பினர்களும் மாவட்ட சபையில் உறுப்பினராக இருத்தலைக் காணலாம்.

ஐந்தாவதாக, மாநிலங்களிலுள்ள மாவட்ட சபைகளில் பெண்களுக்கு விசேடப் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆறாவதாக, பட்டிக ஜாதியினருக்கும், பட்டிக இனத்தவருக்கும் மாவட்ட சபையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகின்றது. பட்டிக ஜாதியினரோ அல்லது பட்டிக இனத்தவரோ மாவட்ட சபைகட்குத் தேர்ந்தெடுக்கப்படாவிடில் அவர்கள் உடன் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். இறுதியாக, உத்திரப்பிரதேசம் போன்ற மாநிலங்களில் சமூக மேம்பாட்டு அமைப்புக்கள், கூட்டுறவுச் சங்கங்கள் போன்றவற்றின் பிரதிநிதிகளை ஏதாவது முறையில் தேர்ந்தெடுக்கப்படும் பழக்கமோ, அல்லது மாநில அரசால் நியமிக்கப்படும் பழக்கமோ பின்பற்றப்படுகின்றது. மாவட்ட சபையில் பதவிக்காலம் ஐந்தாண்டுகளெனினும் அதனை அதிகரிக்க மாநில அரசு அதிகாரம் கொண்டுள்ளது.

மாவட்ட சபையின் தலைவராக அதன் உறுப்பினர்களினின்று ஒருவரோ, அல்லது உறுப்பினரல்லாதவரோ தேர்ந்தெடுக்கப்படலாம். இத்தலைவரின் பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். பாராளுமன்ற உறுப்பினரோ அல்லது சட்டமன்ற உறுப்பினரோ அல்லது நகராட்சித் தலைவரோ மாவட்ட சபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட முடியாது. ஐந்தாண்டுகட்கெனத் துணைத் தலைவரொருவரையும் மாவட்ட சபை தோந்தெடுக்கின்றது. எழுத்து மூலம் தமது பதவிகளை ராஜினாமா செய்யும் உரிமை தலைவருக்கும், துணைத்தலைவருக்கும் உள்ளது. மாவட்ட சபை நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றினால் இவர்கள் பதவியினின்று விலக்கப்படுவர். தனது பணிகளைப் புரிய மறுக்கும், அல்லது தனது அதிகாரத்தைத் தகாத முறையில் பயன்படுத்தும் அல்லது தகாத நடவடிக்கைகளில் ஈடுபடும் தலைவரையோ, அல்லது தற்காலிகத் தலைவராகப் பதவி வகிக்கும் துணைத்தலைவரையோ பதவியினின்று அகற்ற மாநில அரசு அதிகாரம் கொண்டுள்ளது. ஒரு மாவட்ட சபையின் பதவிக்காலம் முடிவுற்ற போதிலும் புதிய மாவட்ட சபை உருவாக்கப்படும் வரையிலும் அதன் தலைவர் பதவியில் நீடிப்பார்.

ஒரு மாவட்ட சபை பல்வேறு குழுக்களைத் தேர்ந்தெடுக்கின்றது. கல்வி, திட்டம், நிதி போன்ற குறிப்பிட்ட பணிகளை குழுக்கள் கவனிக்கின்றன. ஒரு மாவட்ட சபையின் பதவிக்காலம்தான் அதன் குழுக்களின் பதவிக்காலமும் ஆகும். சில குழுக்களின் பதவி வழித்தலைவராக மாவட்ட சபையின் தலைவரே செயல்படுவார். சில குழுக்கள் அவற்றின் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. தனது கவனத்திற்குட்பட்ட விஷயத்தை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்கெனவோ, அல்லது ஏதாவது பணியைப் புரிவதற்கென்றே உட்குழுக்கள் ஒரு குழு நியமனம் செய்யலாம். இங்ஙனம் உருவாக்கப்படும் உட்குழுக்களின் அமைப்பு, பணி போன்றவற்றை சம்பந்தப்பட்ட குழுவே நிர்ணயிக்கின்றது.

### மாவட்ட சபைகளின் அதிகாரங்களும், பணிகளும்:

மாநிலங்களில் காணப்படும் மாவட்ட சபைகள் ஒரே மாதிரியான அதிகாரங்களையும், பணிகளையும் கொண்டவை அல்ல. தமிழ்நாடு, கர்நாடகம் ஆகிய மாநிலங்களிலுள்ள மாவட்ட சபைகள் ஒருங்கிணைப்புப் பணிகளையும், ஊராட்சி ஒன்றியங்களை மேற்பார்வை செய்யும் பணிகளையும் புரிகின்றன. அரசாங்கத்தின் திட்டங்களின் செயற்பாடு குறித்து அரசாங்கத்திற்கு இச்சபைகள் பரிந்துரை அளிக்கின்றன. ஆந்திர பிரதேசத்திலுள்ள மாவட்ட சபைகள் மேற்கூறிய பணிகள் மட்டுமின்றி மேல்நிலைப்பள்ளிகள், தொழில் நுட்பப்பள்ளிகள், தொழில் கல்வி நிலையங்கள் போன்றவற்றின் அமைப்பு, பராமரிப்பு, விரிவாக்கம் சம்பந்தப்பட்ட நிர்வாகப் பணிகளிலும் ஈடுபடுகின்றன. குஜராத், உத்திர பிரதேசம், மேற்கு வங்கம் போன்ற மாநிலங்களிலுள்ள மாவட்ட சபைகள் நிர்வாகப் பணிகளில் ஈடுபட்டுள்ளன. மராட்டிய மாநிலத்திலுள்ள மாவட்ட சபை மிகவலிமை வாய்ந்தது. அது பிற்காணும் பணிகளைப்புரிகின்றது.

1. பிற்பட்ட வகுப்பினரின் கல்வி சம்பந்தப்பட்ட தேவைகளை நிர்ணயித்தல்.
2. பிற்பட்ட வகுப்பினரது பொருளாதார வளர்ச்சி நலன் போன்றவை சம்பந்தப்பட்ட திட்டங்களைச் செயற்படுத்தல்.
3. துவக்கப்பள்ளிகள், ஆதாரக்கல்விச்சபைகள், மேல்நிலைப்பள்ளிகள், மருந்தகங்கள், மருத்துவமனைகள், ஆரம்ப சுகாதார நிலையங்கள், குழந்தைகள் பராமரிப்பு நிலையங்கள் போன்றவற்றை நிறுவி, பராமரித்து, மேற்பார்வை செய்தல்.
4. சாலைகள், பூங்காக்கள், விளக்கிடல், இருப்புப் பாதைகள், தொலைபேசி போன்றவற்றை அமைத்துப் பராமரித்தல்.
5. தண்ணீர் வினியோகம், கழிவுநீர் அகற்றல், சிறிய நீர்ப்பாசன வசதிகள் போன்றவற்றைக் கண்காணித்தல்.
6. ஊரக தொழிற்சாலைகள், கலை, கூட்டுறவு போன்றவற்றைப் பேணுதல்.
7. ஊரக வானொலி, சமுதாய வளர்ச்சித் திட்டப் பணிகள், ஊரக வீட்டு வசதி, கிராம முன்னேற்றம் போன்றவை சம்பந்தப்பட்ட திட்டங்களை மேற்பார்வை செய்தல்.
8. ஏழைகளுக்கான வீடுகளை நிறுவிப் பராமரித்தல்.

### மாவட்ட சபையின் நிதிவசதிகள்:

அரசாங்கத்திடமிருந்து கிடைக்கப்பெறும் மானியம், நிலவருவாயின் ஒரு பகுதி, ஊரக வரிகள் ஆகியவைதான் மாவட்ட சபைக்குக் கிடைக்கப் பெறும் நிதியினங்கள். இவை மட்டுமின்றி வளர்ச்சிப் பணிகட்கென அரசாங்கத்தால் ஒதுக்கீடு செய்யப்படும் நிதியும் இச்சபைகட்குக் கிடைக்கின்றன. ஒரு சில மாநிலங்களிலுள்ள மாவட்ட சபைகள் குறிப்பிட்ட சில வரிகளை விதிப்பதற்கும், ஏற்கனவே ஊராட்சிகளாலும், ஊராட்சி ஒன்றியங்களாலும் விதிக்கப்படட வரிகளை ஒரு குறிப்பிட்ட அளவு அதிகரிப்பதற்கும் அதிகாரம் கொண்டுள்ளன.

### கட்டுப்பாடு:

மாவட்ட சபைகளை மாநில அரசாங்கம் கட்டுப்படுத்துவதற்கான வழிமுறைகள் எல்லா மாநிலங்களிலும் காணப்படுகின்றன. ஒரே மாதிரியான செயல் திறனைப் பெறுவதற்கும், நிர்வாகப்பணித் திறனை பராமரித்துக் கொள்வதற்காகவும் தான் இக்கட்டுப்பாடுகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இக்கட்டுப்பாடு பலமுறைகளில் செயற்படுத்தப்படுகின்றது.

1) மாநில அரசாங்கமோ, அல்லது அதன் பிரதிநிதியோ அல்லது மாவட்ட நீதிபதியோ மாவட்ட சபைகளின் கணக்குகளையும், சொத்துக்களையும் பரிசீலனை செய்யவோ, அல்லது செய்விக்கவோ முடியும். இதைத் தொடர்ந்து தேவைப்படும் உத்தரவுகளை இடலாம்.

2) மாவட்ட சபையின் தீர்மானமோ, அல்லது உத்தரவோ சட்டத்திற்குப் புறம்பானதென்றோ, அல்லது அரசின் உத்தரவிற்கு முரண்பாடானதென்றோ, அல்லது பொது மக்களைப் பாதிக்கக் கூடியதென்றோ எனக் கண்டால் அதனைச் செயற்படுத்தக் கூடாதென்று உத்தரவிடும் அதிகாரம் மாநில அரசிற்கோ, அல்லது மாவட்ட நீதிபதிக்கோ உள்ளது.

3) மக்களின் பாதுகாப்பிற்குத் தேவையானது என அவர் கருதினால் மாவட்ட சபை புரிய வேண்டிய பணிகளை அது புரிய வேண்டும் என்று அதற்கு உத்தரவிட மாவட்ட நீதிபதிக்கு அதிகாரமுள்ளது. இதற்கான செலவினங்களுக்குத் தேவையான பணம் சபையின் நிதியினின்று அளிக்கப்படல் வேண்டும்.

4) மாவட்ட சபை கண்டிப்பாகச் செய்ய வேண்டிய பணி ஏதேனையும் புரியத் தவறிவிட்டால் அப்பணிகளை செய்ய மாநில அரசு அதிகாரம் கொண்டுள்ளது. இதற்குத் தேவையான நிதி சபையின் நிதியினின்று அளிக்கப்படுகின்றது. மனக் கோளாறு, உடல் நலன் இல்லாமை, பணித்திறனற்றிருத்தல் ஆகிய காரணங்கட்காக மாவட்ட சபையின் உறுப்பினரை மாநில அரசு பதவி நீக்கம் செய்யலாம்.

5) மாவட்ட சபை அதன் பணிகளைப் புரியத் தவறிவிட்டாலும், அதன் அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்தாலும் அதனைத் தற்காலிகமாக ரத்து செய்யவும் அல்லது கலைத்து விடுவதற்கும் மாநில அரசு அதிகாரம் கொண்டுள்ளது. இறுதியில் கொடுக்கப்பட்ட நடவடிக்கை மிகக் கடுமையானதெனினும், மக்கள் நலனைக் கருதி அதனைப் பல மாநிலங்கள் பல முறை பயன்படுத்தியதுண்டு. இதைக் கொண்டு மாநில அரசு அதன் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தி விட்டது என்று கூறிவிட முடியாது.

ஊராட்சி ஒன்றியங்கள்:

வட்டார மட்டத்திலுள்ள அமைப்புத்தான் உள்ளாட்சியின் இரண்டாவது மட்டம். இந்த உள்ளாட்சி அமைப்பைத் தமிழகத்தில் பொதுவாக ஊராட்சி ஒன்றியம் என்றழைப்பர். ஒன்றியத்தின் அதிகார வரம்பிற்குட்பட்ட அமைப்பு, எனினும் சில மாநிலங்களின் ஊராட்சித் தலைவர்கள் அல்லாதோரும் இதில் உறுப்பினராக உள்ளனர். உதாரணமாக, உத்திரப் பிரதேசத்திலுள்ள ஊராட்சி ஒன்றியங்களில் ஊராட்சித் தலைவர்கள் மட்டுமின்றி, வட்டார குழுக்கள் ஒவ்வொன்றின் தலைவர்களும், வட்டாரத்தினுட்படும் அறிவிக்கப்பட்ட பகுதி ஒவ்வொன்றின் தலைவர்களும் ஐந்திற்கு மேற்படாத, இரண்டிற்குக் குறையாத கூட்டுறவுச் சங்கங்களின் பிரதிநிதிகளும், வட்டாரத்தில் வசிக்கும், அல்லது அதனின்று தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள மக்கள் சபை உறுப்பினர்களும், மாநில சட்டமன்ற உறுப்பினர்களும், வட்டாரத்தினின்று தேர்ந்தெடுக்கப்படும் மாவட்ட சபையின் உறுப்பினர் யாவரும் ஊராட்சி ஒன்றியத்தில் உறுப்பினராவார். இது மட்டுமின்றி பட்டிக ஜாதியினருக்கு இட ஒதுக்கீடு செய்யப்படுகின்றது. பெண்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் அளிப்பதற்கும் வழி வகை செய்யப்படுகின்றது. ஒன்றியத்தின் பதவிக் காலம் ஐந்து ஆண்டுகளெனினும் அதனை அதிகரிக்க மாநில அரசிற்கு அதிகாரம் உள்ளது.

ஊராட்சி ஒன்றியத்தின் அமைப்பைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அதன் தலைவரைப் பற்றிக் குறிப்பிட வேண்டியது அவசியம். தலைவரில்லாதபொழுது அவரது பணிபுரிவதற்கென துணைத் தலைவர் ஒருவர் உள்ளார். தலைவரும், துணைத் தலைவரும் ஒன்றியத்தால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆனால் இத்தேர்தல்களில் கலந்து கொள்வதற்கான உரிமை ஊராட்சி பிரதிநிதிகட்கு மட்டுமே உள்ளது. பெரும்பாலான மாநிலங்களில் ஒன்றியத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோர்களது பதவிக்காலம் ஐந்தாண்டுகளெனினும் அதனை நீடிக்கும் அதிகாரம் அரசாங்கத்திற்குள்ளது. எனினும் ஒன்றியத்தின் பதவிக்காலம் முடிந்தபின் புதிய ஒன்றியம் உருவாக்கப்பட்டு அதற்கொரு தலைவர் பதவியில் நீடிப்பார். ஒன்றியத் தலைவரும், துணைத் தலைவரும் தாமாகவே எழுத்து மூலம் தமது பதவியை ராஜினாமா செய்யலாம். அல்லது ஒன்றியம் நம்பிக்கையில்லாத்

தீர்மானம் நிறைவேற்றினால் அவர்கள் பதவியினின்று விலக்கப்படுவர். ஒன்றியத் தலைவரோ, அல்லது துணைத் தலைவரோ வேண்டுமென்றே தமது பணியைச் செய்யவில்லையென்றோ, அவர் தமது பணியைச் செய்ய மறுக்கின்றனரென்றோ, அல்லது தமது அதிகாரத்தைத் தவறான முறையில் பிரயோகிக்கின்றனரென்றோ, அல்லது முறைகேடாகப் பணிபுரிகின்றனரென்றோ அரசாங்கத்திற்குத் தெரியவரின் அவர்களைப் பதவியினின்று அரசாங்கம் அகற்றலாம். ஒன்றியத் தலைவர், அல்லது துணைத்தலைவர் பதவிகள் தற்காலிகமாகக் காலியானால் எஞ்சியிருக்கும் பதவிக் காலத்திற்கென தேர்தல் மூலம் அவற்றை நிரப்பலாம்.

## ஊராட்சி ஒன்றியங்களின் பணிகளும், அதிகாரங்களும்:

ஊராட்சி ஒன்றியங்கள் கீழ்க்காணும் பணிகளைப் புரிகின்றன.

1. உள்ளாட்சி மட்டத்தில் மாநில அரசாங்கத்தின் பிரதிநிதி போன்று செயல்படுவது ஊராட்சி ஒன்றியமாகும். மாநில அரசாங்கத்தின் கொள்கைகளைத் தனது ஆட்சிப் பகுதியில் ஒன்றியம் செயல்படுத்துகின்றது. அங்ஙனம் செய்யவேண்டுமென்று மாநில அரசாங்கத்தால் பணிக்கப்படுவதனால் பல்வேறு அபிவிருத்திப் பணிகளை ஒருங்கிணைக்கும் பணியில் ஊராட்சி ஒன்றியம் ஈடுபடுகின்றது.

2. தனது பகுதி சம்பந்தப்பட்ட அபிவிருத்திகளை நிர்வகித்தலைச் செயல்படுத்தும் பொறுப்பு ஊராட்சி ஒன்றியத்தினுடையதாகும். உற்பத்தி, மற்றும் சமூகநலத் திட்டங்களைத் தீட்டுவதும் அவற்றைச் செயல்படுத்துவதும் ஒன்றியத்தின் பணியாகும். வேளாண்மை, நீர்ப்பாசனம், குடிசைத் தொழில்கள், சிறு தொழில்கள், கூட்டுறவு, கல்வி, உடல் நலன், செய்தித் தொடர்பு, சமூக நலன் போன்றவை மேற்கூறிய பணிகளுள் உட்படும். மக்களின் பொருளாதார நலனை மேம்பாடடையச் செய்பவைதான் இப்பணிகள்.

3. ஏராளமான மேற்பார்வைப் பணிகளில் ஊராட்சி ஒன்றியங்கள் ஈடுபடுகின்றன. ஊராட்சிகள் தமது பணிகளைச் செவ்வனே புரிகின்றனவா என்று ஒன்றியங்கள் மேற்பார்வை செய்கின்றன. ஊராட்சியின் வரவு செலவுத் திட்டங்களைப் பரிசீலனை செய்யவும், திருத்தியமைக்கவும் ஊராட்சி ஒன்றியங்கள் அதிகாரம் கொண்டுள்ளன. வளர்ச்சிப்பணி சம்பந்தப்பட்ட அதிகாரி, மற்றும் அவர் கீழ்ப்பணிபுரிவோர்களது பணிகளை மேற்பார்வை செய்யும் அதிகாரமும் ஊராட்சி ஒன்றியங்கட்கு உள்ளது.

## ஊராட்சி ஒன்றியங்களின் நிதி வசதிகள்:

தமது பகுதி சம்பந்தப்பட்ட அபிவிருத்திப் பணிகட்கென மாநில அரசாங்கத்தால் ஒதுக்கீடு செய்யப்படும் தொகை ஊராட்சி ஒன்றியத்திற்குக் கிடைக்கின்றது. வட்டார நிதி ஒதுக்கீட்டினின்றும் ஊராட்சி ஒன்றியத்திற்கு நிதி கிடைக்கின்றது. குறிப்பிட்ட சில வரிகளை விதிப்பதற்கும் நில வருவாயினின்று ஒரு பகுதியைப் பெறுவதற்கும், அரசாங்கத்தினின்று மானியங்கள் பெறுதற்கும் ஊராட்சி ஒன்றியங்கள் உரிமை கொண்டுள்ளன.

பல்வேறு நிலைக் குழுக்கள் மூலமாக ஊராட்சி ஒன்றியங்கள் செயல்படுகின்றன. நிதி, அபிவிருத்திப் பணி, சமூகநலப்பணி போன்றவை சம்பந்தப்பட்டவைதான் இந்நிலைக்குழுக்கள். ஊராட்சி ஒன்றியத் தலைவர் முக்கியமான எல்லாக் குழுக்களிலும் பதவி வழி உறுப்பினராவார்.

## கட்டுப்பாடு:

நிர்வாகத் திறனைக் கருதியும், அதிகாரத்தைத் தகாதமுறையில் பயன்படுத்தாமலிருப்பதற்கெனவும் மாநில அரசாங்கம் ஊராட்சி ஒன்றியத்தைக் கட்டுப்படுத்துகின்றது. ஊராட்சி ஒன்றிய உறுப்பினரொருவர் நேரடியாகவோ, அல்லது மறைமுகமாகவே தாம் அக்கரை கொண்டுள்ள விஷயம் சம்பந்தப்பட்ட விவாதத்தில் பங்கு கொண்டாரென்றாலும், வாக்களித்தாரென்றாலும், அல்லது தமது வாடிக்கைக்காரருக்காக அக்கரை கொண்டாரென்றாலும் அல்லது அங்கத்தினரது பணி புரிய முடியாத அளவிற்கு மனநிலையோ, அல்லது உடல் நலனோ பாதிக்கப்பட்டிருந்தாலோ, அல்லது தமது தற்போதைய அல்லது முந்தைய பதவிக் காலத்தில் ஒழுங்கீனமாக செயல்பட்டாரென்றாலோ அவரைப் பதவியினின்று அகற்ற ஆணையர் நடவடிக்கையெடுக்கலாம். மேலும், ஒரு ஊராட்சி ஒன்றியம் தனது பணிகளைப் புரிவதில் தொடர்ந்து தவறுதல் செய்ய நேரிட்டாலும், தனது அதிகார வரம்பை மீறினாலும், அல்லது தனது அதிகாரத்தை தகாதமுறையில் பயன்படுத்தினாலும் அதனைத் தள்ளுபடி செய்ய மாநில அரசாங்கத்திற்கு அதிகாரம் உள்ளது. இந்நடவடிக்கை எடுக்கப்பட்டால் ஒன்றியத்தின் பணிகளைப் புரிவதற்கென நிர்வாக அதிகாரியொருவர் நியமிக்கப்படுவார். அரசாங்கம் குறிப்பிடும் நாளிலிருந்து ஊராட்சி ஒன்றியத் தலைவரும், உறுப்பினரும் தமது பதவிகளை இழப்பர். மீண்டும் ஊராட்சி ஒன்றியம் செயல்படத் தொடங்குவதற்கு முன் அதற்கான தேர்தல்கள் நடத்தப்படவேண்டும். ஊராட்சி ஒன்றியத்தைத் தள்ளுபடி செய்வதென்பது மிகத் தீவர நடவடிக்கையாகும்.

## ஊராட்சியும் கிராமசபையும்:

ஊராட்சி அமைப்பின் அடிமட்டத்தில் காணப்படுவது கிராம மட்டத்திலுள்ள ஊராட்சியும், அதனை மேற்பார்வை செய்யும் அதிகாரமுடைய ஊர் சபையுமாகும்.

## கிராம சபை:

ஊராட்சி அமைப்பின் கீழ் மட்டத்தில் காணப்படுவது கிராம சபையாகும். ஊராட்சியின் பொது அவையான ஊர்சபையில் ஊராட்சியின் எல்லையினுள் காணப்படும் தகுதி படைத்த வாக்காளர் யாவரும் உறுப்பினராக இருப்பர். ஒரு ஊராட்சியின் அதிகார வரம்பிற்குள் ஒரு கிராமமோ, அல்லது பல சிறு கிராமங்களோ உட்படும். கிராம சபை என்பது அதன் ஆட்சித்துறை அமைப்பான ஊராட்சி மூலமாகச் செயல்படுகின்றது. பெரும்பாலான மாநிலங்களில் ஊர் சபை ஆண்டிற்கு இருமுறை கூடுகின்றது. ஆனால் ஜம்மு–காஷ்மீர் மாநிலங்களில் இச்சபை ஆண்டிற்கு ஒரு முறை தான் கூடுகின்றது. ஊர் சபை பின்வரும் பணிகளைப் புரிகின்றது.

1. ஒவ்வொரு ஆண்டிற்கான ஊராட்சியின் வரவு செலவுத் திட்டத்தை அங்கீகரிக்கின்றது.
2. கடந்த ஆண்டின் கணக்குகளையும், தணிக்கை அறிக்கையையும் அங்கீகரிக்கின்றது.
3. கடந்த ஆண்டின் நிர்வாக அறிக்கையை அங்கீகரிக்கின்றது.
4. நடப்பு ஆண்டிற்கான வளர்ச்சிப் பணிகள் சம்பந்தப்பட்ட திட்டங்களை அங்கீகரிக்கின்றது.

5. கிராம உற்பத்தித் திட்டத்தை அங்கீகரிக்கின்றது.

6. ஊராட்சியின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றது.

**ஊராட்சி:**

மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஆட்சித் துறை அமைப்பாகச் செயல்படுவதுதான் ஊராட்சி என்பது. எல்லா மாநிலங்களிலுமுள்ள ஊராட்சிகளும் ஒரே அளவு உறுப்பினரைக் கொண்டவை அல்ல. பீஹார், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் காணப்படும் ஊராட்சிகள் ஒவ்வொன்றிலும் ஒன்பது உறுப்பினர்கள் உள்ளனர். உத்திர பிரதேசத்திலுள்ள ஊராட்சிகளில் அதிக பட்சம் 31 உறுப்பினர்கள் காணப்படுகின்றனர். ஊராட்சிகளில் பதவிக் காலம் மூன்றிலிருந்து ஐந்தாண்டுகளாக உள்ளன. ஜம்மு காஷ்மீர், இமாசல பிரதேசம் நீங்கலாக இதர மாநிலங்களிலும், மத்திய ஆட்சிப் பகுதிகளிலும் உள்ள ஊராட்சிகளின் உறுப்பினர்கள் ரகசிய வாக்கெடுப்புமூலம் ஊர்சபைகளால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஜம்மு காஷ்மீர், இமாசல பிரதேசம் ஆகிய மாநிலங்களில் வெளிப்படையாகவே தேர்தல்கள் நடைபெறுகின்றன. ஒருசில மாநிலங்களிலும், மத்திய ஆட்சிப் பகுதிகளிலும் ஊராட்சித் தலைவர்கள் வாக்காளர்களால் நேரடியாகத் தோந்தெடுக்கப்படுகின்றனர். பெரும்பாலான மாநிலங்களில் இவர்கள் ஊராட்சிகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் அவர்களினின்று தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பெரும்பாலான மாநிலங்களிலும், மத்திய ஆட்சிப்பகுதிகளிலும் உள்ள ஊராட்சிகளில் துறைத் தலைவரொருவரும் காணப்படுகின்றார். இவரது தேர்தல் தலைவரது தேர்தலை ஒத்ததாகும்.

**ஊராட்சிகளின் அதிகாரங்களும், பணிகளும்:**

எல்லா மாநிலங்களிலும், மத்திய ஆட்சிப் பகுதிகளிலும் உள்ள ஊராட்சிகள் பின்வரும் பணிகளைப் புரிகின்றன.

1. கிணறு, அல்லது குளத்தின் நீரால் உடல் நலம் பாதிக்கப்படும் என்று கருதினால் அந்நீரைப் பயன்படுத்துவதை ஊராட்சி தடுக்கலாம்.

2. பொதுச்சாலையிலோ, அல்லது வடிகாலிலோ ஏற்படும் தடையை அகற்றுமாறும், சீர்குலைந்த நிலையிலுள்ள வீடுகளால் ஏற்படக் கூடிய ஆபத்தைத் தவிர்ப்பதற்கான நடவடிக்கை எடுக்குமாறும் ஒரு வீட்டில் வசிப்பவர்க்கோ, அல்லது அதன் சொந்தக்காரருக்கோ உத்தரவிடும் அதிகாரம் ஊராட்சிக்குள்ளது.

3. கழிவுப் பொருட்களை அப்புறப்படுத்தும் முறையைக் கட்டுப்படுத்தலாம். வாய்க்காலை ஆழப்படுத்தலாம்.

4. தனது கட்டளைக்குக் கட்டுப்படாதவர் மீது அதிகப்படாத தண்டப்பணம் விதிக்கலாம். கட்டளைக்குப் பணியும் வரை இத்தண்டத்தை நாளொன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் அதிகரிக்கலாம்.

5. குடிநீருக்கு மட்டுமென ஒரு கிணற்றையோ, அல்லது குளத்தையோ ஒதுக்கலாம்.

6. நீதி நிர்வாகம் செய்வதற்கென தனி அமைப்புக்கள் இல்லாத இடங்களில் உள்ள ஊராட்சியின் குடிமுறை, குற்றவியல் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரணை செய்யும்.

7. ஐம்பது ரூபாய்கள் வரையிலும் தண்டப்பணம் விதிக்கலாம்.

8. குடிமுறை சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரணை செய்வதற்கு ஊராட்சிகள் கொண்டுள்ள அதிகாரம் எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரி இல்லை. ராஜஸ்தான் மாநிலத்திலுள்ள ஊராட்சிகள் 250 ரூபாய் வரை மதிப்புள்ள குடிமுறை சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரத்தைக் கொண்டுள்ளன.

9. சில மாநிலங்களிலுள்ள ஊராட்சியின் சாதாரண நீதிமன்றத்தின் அதிகாரங்களையும் கொண்டுள்ளன. சான்றாளர்களைத் தருவித்தல், பதிவுருக்களைத் தருவித்தல், நீதிமன்றத்தின் கவுரவத்தைக் காத்தல், நீதித்துறை சம்பந்தப்பட்ட சட்ட விலக்களிப்பு போன்றவை மேற்கூறிய அதிகாரங்களுக்குள் உட்படும்.

10. மாநில அரசாங்கத்தின் சட்டங்கள், விதிகள் போன்றவற்றிற்கு உட்பட்டுச் சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்ட வரிகளை விதிக்கும் உரிமை ஊராட்சிகட்கு உள்ளது.

11. மாநில அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்டுள்ள தகுதிகட்கேற்ப ஊராட்சி ஒன்றியத்தின் ஒப்புதலுடன் தனக்கெனச் செயலாளரை ஊராட்சி நியமனம் செய்கின்றது.

12. செயலாளர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் ஊராட்சிக்குள்ளது.

13. கடைநிலை ஊழியர் மீது ஊராட்சி முழுக்கட்டுப்பாடு கொண்டுள்ளது.

**ஊராட்சிகளின் நிதிவசதிகள்:**

பின்வரும் முறைகளில் ஊராட்சிகள் தமக்குத் தேவையான நிதியைத் திரட்டுகின்றன.

1. சொத்து, தொழில், விலங்குகள், வாகனங்கள் மீது வரிவிதிக்கும் அதிகாரம் ஊராட்சிகட்குள்ளது.

2. நிலத்தீர்வை அல்லது நிலவாடகை விதிக்கவும் அவை அதிகாரம் பெற்றுள்ளன.

3. நீர் கட்டணம், மின் கட்டணம், வடிகால் கட்டணம் போன்ற கட்டணங்களை இவ்வசதிகள் அளிக்கும் ஊராட்சிகள் வசூலிக்க அதிகாரம் பெற்றுள்ளன.

4. மாநில அரசுகளிடமிருந்தும், மத்திய ஆட்சிப் பகுதிகளினின்றும் மானியத் தொகையை ஊராட்சிகள் பெற்றுள்ளன.

5. ஊராட்சிகட்குப் பொது மக்களிடமிருந்தும் நிதி கிடைக்கப் பெறுகின்றது.

தமது பொறுப்புக்களைச் சரிவர நிர்வகிக்கத் தேவையான நிதி வசதிகள் ஊராட்சிகட்கு இல்லை என்று பொதுப்படையான குறைபாடு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. சம்பந்தப்பட்ட பகுதியினின்று வசூலிக்கப்படும் நிலவரியை ஊராட்சிகட்கு அளிப்பதன் மூலமும், அரசின் மானியத்தை அதிகரிக்க செய்வதன் மூலமும் ஊராட்சிகளின் வருமானத்தை அதிகரிக்கலாம் என பரிந்துரைகள் செய்யப்பட்டுள்ளன.

கட்டுப்பாடு:

எல்லா மாநிலங்களிலும் ஊராட்சி அமைப்புக்கள் மாநில அரசுகளின் மேற்பார்வைக்கும், கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டவையாகும். ஊராட்சியின் மீதான பொதுக்கட்டுப்பாடு ஊராட்சி இயக்குநரிடம் உள்ளது. இவருக்கு உதவியாக மாவட்ட மட்டத்திலும், வட்டார மட்டத்திலும் உதவி இயக்குநரும், ஊராட்சி அதிகாரிகளும் உள்ளனர். திறமையின்மை, கடமை புரியத்தவறுதல், அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தல் போன்ற காரணங்கட்காக ஒரு ஊராட்சியை மாநில அரசாங்கம் ரத்து செய்யலாம். நீதி சம்பந்தப்பட்ட உத்தரவுகள் நீங்கலாக ஊராட்சியின் வேறெந்த உத்தரவையும், தீர்மானத்தையும் ரத்து செய்யவும் அதிகாரம் துணை ஆணையருக்குள்ளது. குறிப்பிட்ட பணிகளைப் புரியக்கூடாது என்று ஊராட்சிக்கு உத்தரவு இடவும் இவருக்கு அதிகாரமுள்ளது. ஊராட்சி நிர்வாகம் சம்பந்தமாக ஆய்வு நடத்திய குழுவால் உருவாக்கப்பட்ட ஊராட்சிகளின் பணி சம்பந்தப்பட்ட விதிகளின் மாதிரியை 1961–ஆம் ஆண்டு இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. இவை மாநில அரசுகளால் ஏற்கப்படல் நன்று என்று மத்திய அரசு பரிந்துரை செய்துள்ளது. அனுபவமுதிர்ச்சி இல்லாததனால் ஊராட்சிகள் துவக்கத்தில் தவறுகள் இழைக்க நேரிடுமாதலால் சரியான பரிகாரங்கள் எடுப்பதற்குத் தேவையான அதிகாரங்களை அரசாங்கம் கொண்டிருத்தல் அவசியம்.

மக்களாட்சி பன்முகப்படுத்தல் சம்பந்தமாக நடத்தப்படும் இப்பரிசோதனை எங்ஙனம் செயல்படுகின்றது என்று மதிப்பீடு செய்வதற்கான வேளை இன்னும் வரவில்லை என்றே கூறவேண்டும். இப்பரிசோதனை வெற்றிகாண நேரிட்டால் இந்தியாவில் மக்களாட்சி வேரூன்றுவதற்கு இது பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. ஊராட்சி சம்பந்தமாக மாறுபட்ட கருத்துக்கள் காணப்பட்ட போதிலும் இவ்வாட்சிமுறை இந்திய கிராமப்புற வாழ்க்கையையும், நிர்வாகத்தையும் வெகுவாகப் பாதித்துள்ளது என்பது மறுக்க முடியாத கூற்றாகும். வயது வந்தோர் யாவரும் வாக்குரிமை பெற்றுள்ள இத்தருணத்தில் ஊராட்சி அமைப்பு சமுதாயத்தில் காணப்படும் குறுகிய பாகுபாடுகட்கு முடிவுகட்டி படிப்படியாக வளர்ந்து வரும் அரசியல் முறைக்கு உறுதுணையாக அமையும் என்று திடமாகக் கூறலாம். பெரும்பாலான கிராமப்புற மக்களுக்கு இன்றும் ஊராட்சி முறையின் முக்கியத்துவம் தெரியவில்லையெனினும் இம்முறை நிர்வாக அமைப்பிற்கு அவர்களிடையே எதிர்ப்பேதுமில்லை என்று ஆய்வொன்று கூறுகின்றது. சிறிது காலம் கடந்தபின் ஊராட்சி அமைப்பு மிகப் பயனுள்ள அரசியல் நெறிமுறையை உருவாக்க உதவும் என்பதில் ஐயமேதுமில்லை.

மாதிரி வினா :

புதிய ஊராட்சி அமைப்பை விளக்கு.

## பாடம்–19 குடிமக்களின் குறைகளும் தீர்வும்

குற்றச்சாட்டு என்பதற்கும் புகார் என்பதற்கும் வேறுபாடு உண்டு. அரசாங்க அதிகாரி ஒருவர் சட்ட விரோதமான முறையில் வெகுமதி பெறுவதற்காக அதிகாரத்தை தவறாகப் பயன்படுத்தும் பொழுது குற்றச்சாட்டு உருவாகிறது. ஆனால் புகார் என்பது தவறான நிர்வாக நடவடிக்கையினால் தோன்றுவதாகும். கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் புகார்கள் அடிக்கடி தோன்றுகின்றன.

(1) பொது மக்களது வசதியைப் பற்றி அக்கறை கொள்ளாத தன்மை;

(2) அரசாங்க அதிகாரிகள், அதிலும் குறிப்பாக கீழ்நிலையில் உள்ளவர்கள் பொது மக்களிடத்தில் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளுதல்.

(3) அதிகாரிகள் மக்களுக்கு உதவி செய்வதில் விருப்பமில்லாதிருத்தல்;

(4) முடிவுகளை சீக்கிரமாக எடுக்காமல் தாமதப்படுவதால் அது பல விஷயங்களில் ஊழலுக்கு வழிகாட்டியாக அமைதல்;

(5) தகுதியின் அடிப்படையில் முடிவு எடுக்காதிருத்தல்;

(6) சிக்கலான விதிகளையும், நீண்ட வழிமுறைகளையும் கையாளுவதால் அடிக்கடி அரசாங்க அலுவலகத்திற்கு செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாக்குதல்.

பொதுவாக, பணம் அல்லது அரசியல் செல்வாக்கு அல்லது சமூக அந்தஸ்து ஆகியவைகளில் ஏதேனும் ஒன்று இருந்தால்தான் நிர்வாகத்தில் ஏதேனும் காரியங்கள் நடைபெறும் என்ற எண்ணம் பொது மக்கள் மனதில் சாதாரணமாக வளர்ந்துள்ளது. செல்வாக்கு பெற்றவர்கள்தான் தங்களது தன்மைக்கேற்ப காரியங்களைச் சாதிக்க முடியும். இத்தகைய பிரச்னைகளுக்கு ஒரு பரிகாரமாகத்தான் 'ஆம்பட்ஸ்மன்' (Ombudsman) என்ற அமைப்பை நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் கண்டுபிடித்துள்ளது.

ஆம்பட்ஸ்மன்: இந்த பணியகமானது 19–ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே ஸ்வீடனில் தோன்றியது. ஆட்சித் துறையின் தவறான போக்கிற்கு எதிராகப் பொதுமக்கள் கொடுக்கின்ற குற்றச்சாட்டுகளை அலசி ஆராய்கின்ற ஒரு சட்டமன்ற ஆணையாளர்தான் ஆம்பட்ஸ்மன் என்பவர். ஆம்பட்ஸ்மன் சட்டமன்றத்தால் நியமிக்கப்பட்டாலும், சட்டமன்றம் ஆம்பட்ஸ்மனின் பணிகளில் தலையிடமுடியாது. இவர் அரசியல் தொடர்புகளற்றவராகவும், வழக்கமான நிர்வாகப்படிநிலை அமைப்பிற்கு அப்பாற்பட்டவராகவும் இருப்பார். இவர் தனிநபருக்கும் அரசாங்கத்திற்குமிடையேயுள்ள தனித்தன்மை வாய்ந்த, நடுநிலைமை தவறாத நடுவராகும். அரசாங்கத்தில் உயர்வானதொரு அந்தஸ்துடையவர். பொதுமக்களிடமிருந்து வரும் குற்றச் சாட்டுக்களை இவர் கவனிக்கிறார். ஆய்வு நடத்துவதற்காகக் குற்றச் சாட்டுகளைத் தெரிந்திருப்பதில் இவர் தன்னுடைய தன்விருப்புரிமையை உபயோகிக்கலாம். ஆய்வு நடத்துகின்ற பொழுது ஆம்பட்ஸ்மன் பொருள், நடைமுறை, வசதி, மற்றும் தாமதம் போன்றவை பற்றியக் காரியங்களை விசாரிக்கலாம். இவருடைய திறனாய்வு சட்டப் பிரச்னைகள் சம்பந்தப்பட்டது மட்டுமின்றி நல்ல நிர்வாக விஷயங்கள் சம்பந்தப்பட்டதாகவும் இருக்கலாம். இவருக்கு புலன் விசாரணை செய்தல், பரிந்துரை செய்தல் மற்றும் விளம்பரப்படுத்தல் ஆகிய அதிகாரங்கள் மட்டுமே உண்டு. எந்த நிர்வாகச் செயலையும் மாற்றி அமைப்பதற்கு இவருக்கு அதிகாரமில்லை.

புலன் விசாரணை நடத்துவதற்காக ஆம்பட்ஸ்மனுக்குத் துணையாக ஒரு சிறிய பணியாளர் குழு உண்டு. இவருடைய அலுவலகம் நிர்வாக நடைமுறைகளின் நேர்மையையும், பயனுறுதியையும் பலப்படுத்துவதற்கான வழிகளையும் தொடர்ந்து ஆராயும். அரசாங்கத்தில் நடைபெறுகின்ற நிர்வாகச் செயல் பற்றிய குற்றச்சாட்டுகள் எங்கிருந்து வந்தாலும் அவற்றை இவ்வலுவலகம் பெற்றுப் புலன் விசாரணை நடத்தும்.

உலகின் முதல் ஆம்பட்ஸ்மன் ஸ்வீடன் நாட்டில்தான் நிறுவப்பட்டது. ஆம்பட்ஸ்மன் என்ற சொல்லை ஆங்கிலச் சொற் தொகுதிக்கு வழங்கிய ஸ்வீடன் நாட்டில் ஏற்கனவே உள்ள மூன்று ஆம்பட்ஸ்மன்களுடன் 1970–ஆம் ஆண்டிலிருந்து நுகர்வோருக்கான ஆம்பட்ஸ்மனும் உண்டு. இம் மூன்று ஆம்பட்ஸ்மன்களில் ஒன்று நீதிமன்றங்கள், குற்றவியல் வழக்குரைஞர்கள், காவல் துறை, படைத்துறை ஆகியவற்றை மேற்பார்வை செய்கின்றது. இரண்டாவது ஆம்பட்ஸ்மன் சமூகநலனையும், நிறுவனநலன்களையும் மேற்பார்வை செய்கின்றது. மூன்றாவது ஆம்பட்ஸ்மன் வரி விதிப்பு சம்பந்தப்பட்ட விஷயங்களையும், நீதிமன்ற தீர்ப்புக்களின் செயலாக்கத்தையும் மேற்பார்வை செய்கின்றது.

இத்தகைய ஆம்பட்ஸ்மன் 1919–ஆம் ஆண்டிலிருந்து பின்லாந்து நாட்டிலும், 1955 ஆம் ஆண்டிலிருந்து டென்மார்க்கிலும், 1962–ஆம் ஆண்டிலிருந்து நார்வே, நியூசிலாந்து ஆகிய நாடுகளிலும் செயல்படுகின்றது. 1967–ஆம் ஆண்டிலிருந்து ஆம்பட்ஸ்மன் மாதிரி ஒரு பாராளுமன்ற ஆணையாளர் இங்கிலாந்தில் செயல்பட்டு வருகின்றார்.

இந்தியாவிலும் குடிமக்களின் குறைகளைத் தீர்ப்பதற்கென 1966–ஆம் ஆண்டில் நிர்வாகச் சீர்திருத்த ஆணையமானது ஆம்பட்ஸ்மன் போன்ற ஒரு இரு படி அமைப்பைச் பரிந்துரை செய்தது. "லோக்பால்", "லோக் அயுக்தா" ஆகியவைதான் அவ்விரு அமைப்புகளாகும். மத்திய மாநில அமைச்சர்கள் மற்றும் அரசாங்கத்தின் செயலாளர்கள் சம்பந்தப்பட்ட குற்றச்சாட்டுகளை லோக்பால் கவனிக்க வேண்டுமென்றும், லோக் அயுக்தாவானது மத்தியில் ஒன்றும், ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொன்றாக உருவாக்க வேண்டும் இது எஞ்சியுள்ள ஆட்சித்துறை அலுவலர்கள் சம்பந்தப்பட்ட குற்றச்சாட்டுகளை கவனிக்கவேண்டுமென்றும் நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் பரிந்துரை செய்தது.

லோக்பால்: பிரதமரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவரால் லோக்பால் நியமிக்கப்பட வேண்டும் என்ற இவ்வாணையம் பரிந்துரை செய்தது. இந்தியத்தலைமை நீதிபதியையும், எதிர்க்கட்சித் தலைவரையும் கலந்தாலோசித்ததற்குப் பின்னர் தான் பிரதம அமைச்சர் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை கூறவேண்டும். லோக்பால் என்பவர் இந்தியத் தலைமை நீதிபதியின் அந்தஸ்துடையவர். லோக்பாலாக நியமிக்கப்பட்டவுடன் அவர் எச்சட்டமன்றத்தின் உறுப்பினராகவும் இருக்கக்கூடாது. அரசியல் கட்சியின் உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்து விடவேண்டும். ஓய்வு பெற்ற பினனர் அவர் அரசாங்கத்திலோ அல்லது பொது நிறுவனங்களிலோ பணியாற்றுவதற்குத் தகுதியற்றவராகிறார்.

தமக்குத் தேவையான பணியாட்களைத்தாமே தேர்வு செய்து கொள்வதற்கு லோக்பாலுக்குச் சுதந்திரமுண்டு. ஆனால் பணியாட்களின் எண்ணிக்கை, வகைகள், விதிகள் போன்றவைகள் அரசாங்கத்தின் அங்கீகாரத்திற்கு உட்பட்டிருக்கும். வரவு செலவுத் திட்டம் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குட்பட்டது. ஒவ்வொரு ஆண்டும், ஆண்டறிக்கையொன்றை இவர் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்க வேண்டும்.

தனிநபரோ, அல்லது கூட்டு நிறுவனமோ லோக்பாலிடம் குற்றச் சாட்டுக்களைச் செய்யலாம். நிர்வாகச் சட்டம் ஒன்றினால் பாதிக்கப்பட்ட ஒருவர் அதன் மீது குற்றம் சாட்டினால் அந்த நிர்வாகச் சட்டத்தினை அலசி ஆராயும் அதிகாரம் லோக்பாலுக்கு உண்டு.

கீழ்க்கண்ட அதிகாரங்கள் லோக்பாலின் அதிகார வரம்பிற்குட்பட்டவை அல்ல.

1) இந்த அரசாங்கத்திற்கும், ஒரு அயல் நாட்டு அரசாங்கம் அல்லது ஏதாவதொரு பன்னாட்டு நிறுவனத்திற்கும் இடையிலான உறவுகளைப் பாதிப்பவை சம்பந்தமாக ஒரு அமைச்சரின் சான்றிதழின் அடிப்படையில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள்;

2) ஒரு விஷயம் நீதிமன்றத்திற்கு முன் கொண்டு செல்லப்பட வேண்டுமா என்பது குறித்து எடுக்கப்படும் நடவடிக்கைகள்;

3) விருதுகள், பட்டங்கள் ஆகியவை வழங்குதல் போன்றவை.

1977–ஆம் ஆண்டு ஜுலை மாதம் 28–ஆம் தேதி ஜனதா அரசாங்கம் பாராளுமன்றத்தில் "லோக்பால் சட்ட வரைவினை" தாக்கல் செய்தது. இச்சட்ட வரைவு சிறப்புக் குழுவின் கவனத்திற்கு ஒதுக்கி விடப்பட்டது. இச்சட்ட வரைவில் முன் மொழியப்பட்டுள்ள லோக்பாலின் அதிகாரத்திற்குக் கீழ் தலைமை அமைச்சர்கள், மாநில அமைச்சர்கள் மற்றும் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு எதிரான குற்றவழக்குகள் அடங்கும். பொதுப்பணியாளர்களுக்கு எதிரான வழக்குகள் இதன் அதிகார வரம்பிற்குட்பட்டவை அல்ல.

லோக் அயுக்தா நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரையின்படி அலுவலர்கள் மீதுள்ள குற்றச்சாட்டுக்களைக் கவனிப்பதற்காக ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு லோக் அயுக்தாவும், மத்தியில் ஒரு லோக் அயுக்தாவும் இருப்பர். பல விஷயங்களில் அயுக்தாவானது குற்றச் சாட்டுக்களைத் தனக்கு மேலான நிலையில் உள்ளவர்களிடம் கலந்தாராய வேண்டி இருக்கும். லோக் அயுக்தாவானது அரசாங்க செயலாளரையோ, அல்லது துறைத் தலைவரையோ எளிதில் அணுகக் கூடிய நிலையில் இருக்கவேண்டும். ஏனென்றால் இவர்களுடன் அதிக அளவில் தொடர்பு கொண்டு ஒரு குடிமகன் நீதி பெறுவதற்கு இது உதவ வேண்டும். இவருடைய அதிகாரங்கள், பணிகள், வழி முறைகள் அனைத்தும் லோக்பாலைப் போன்றவையாகும். இவருடைய அந்தஸ்து, நிலை,. ஊதியம் ஆகியவை மாநில உயர் நீதிமன்ற நீதிபதிக்கு ஒத்ததாயிருக்கும்.

நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரையை மத்தியஅரசு ஏற்றுக் கொண்ட போதிலும் இவ்விரட்டை நிறுவனங்கள் இன்னும் இங்கு நிறுவப்படவில்லை. 1968–ஆம் ஆண்டு மே மாதம் லோக் சபாவில் லோக் அயுக்தா சட்டமுன்வரைவு அறிமுகப்படுத்தப்பட்டது. இரண்டு சபைகளின் கூட்டு குழுவின் ஆராய்வுக்குப் பின் 1969–ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 20–ஆம் தேதியன்று லோக் சபாவில் இச்சட்டமுன்வரைவு நிறைவேற்றப்பட்டது. அதே ஆண்டில் காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்ட பிளவிற்கும், 1970–ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஏற்பட்ட பாராளுமன்றக் கலைப்பிற்கும் இச்சட்டமுன்வரைவு பலியாகி விட்டது. 1971–ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இந்த சட்டமுன்வரைவு மீண்டும் அறிமுகப்படுத்தப்பட்டது. பாராளுமன்றத்தில் அறுதிப்

பெரும்பான்மை இருந்தும் இந்த சட்டமுன்வரைவு ஏற்றுக் கொள்ளப்படவில்லை. 1968 முதல் இன்றுவரை 2004 இது பற்றி பேசப்படுகிறதே தவிர, நடைமுறைப்படுத்தவில்லை. இதற்கிடையில் ஒரு சில மாநிலங்கள் லோக் அயுக்தாவை நிறுவியுள்ளன.

செயல் விளைவுடைய ஆம்பட்ஸ்மனின் தேவை இப்பொழுது மிக அதிக அளவில் உணரப்படுகின்றது. நிர்வாகத் துறை தவிர மற்ற துறைகளிலும் ஆம்பட்ஸ்மனுடைய தேவையை வெகு விரைவில் மக்கள் உணர்வார்கள். சமீபத்தில் சிக்கிம் மாநிலத்தில் மக்கள் குறைகளைத் தீர்ப்பதற்கென முதலமைச்சரது செயலகத்தில் ஒரு விசேடப்பிரிவு உருவாக்கப்பட்டிருக்கிறது. இப்பிரிவு பொது மக்களிடமிருந்து குறைகளைப் பெற்றுக் கொள்கின்றது. மேலும். பல துறைகளது செயல்களையும் இது ஒருங்கிணைக்கும்.

லோக்பால், லோக் அயுக்தா ஆகிய நிறுவனங்கள் எதிர்காலத்தில் எம்முறையில் நிறுவப்பட்டாலும், அவை மக்கள் குறைகளைத் தீர்க்கும் பிரச்னைக்கு ஒரு முழுமையான பதில் அல்ல என்பதை நினைவில் கொள்ள வேண்டும். சாதாரணமாக துறை, அல்லது அரசாங்க அமைப்புகளின் மூலமாகக் குறைகள் தீர்ப்பதற்கு வழி இல்லாததால், குறைகளைத் தீர்ப்பதற்கென அமைக்கப்பட்ட நிறுவனங்களாகவே லோக்பால், லோக் அயுக்தா ஆகியவை அமைகின்றன. இம்மாதிரி நிறுவனங்களை ஏற்படுத்துவதில் போதிய பாதுகாப்பும் எச்சரிக்கையும், இருந்தால் நிர்வாகத்தில் வளர்ந்து வருகின்ற தவறுகளைக் களைவதற்கு இந்நிறுவனங்கள் மிகவும் உதவியாக இருக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

மாதிரி வினா :

இலஞ்சத்தைக் களையும் அமைப்பின் சிறப்புத் தன்மைகளை விளக்கு.

## பாடம்–20 நீதித்துறையின் தீவிர அக்கறை (Judicial Activision)

நீதித்துறையானது சட்டங்களுக்கு விளக்கமளிப்பதுவும், சட்டங்கள் மக்கள் உரிமைகளைப் பாதிக்காதவாறு பார்த்துக் கொள்வதுதான் இயல்பான பணிகளாகும். நீதித்துறையின் தீவிர அக்கறை என்பது நீதித்துறையின் புதிய பணியாகும். இது நீதிப்புனராய்வு மாதிரியானது என்றும் கூறுவர். ஆனால் நீதிப்புனராய்விற்கும் நீதித்துறையின் தீவிர அக்கறை என்பதற்கும் வித்தியாசங்கள் உண்டு. நீதிப்புனராய்வு என்பது நீதித்துறை, சட்டமன்றம், ஆட்சித்துறை ஆகியவற்றைக் காட்டிலும் தனது அதிகாரத்தை வெளிப்படுத்தக் கூடியது ஆகும். அதாவது நாட்டின் அரசியலமைப்பைக் காக்கும் கடமை நீதித்துறைக்கு இருப்பதால், சட்டமன்றம், ஆட்சித்துறை ஆகியவற்றின் நடவடிக்கைகள் அரசியலமைப்பிற்கு எதிராகப் போகாதவகையில் சட்ட விளக்கம் தரக்கூடியது நீதித்துறை. ஆனால் நீதித்துறையின் தீவிர அக்கறை என்பது தனது அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொண்டு, மக்கள் உரிமைகளைக் காக்கக் கூடியது. நீதிபதி எம்.என். இராவ் இதனை நீதித்துறையின் புதுமையான வளர்ச்சி என்கிறார். இது இன்று ஏற்பட்டதல்லவென்றும், 1804 ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டில் வழங்கப்பட்ட தலைமை நீதிபதி மார்ஷலின் தீர்ப்பு தான் முதலில் உருவான நீதித்துறையின் தீவிர அக்கறை என்கிறார். நீதிப்புனராய்வு, நீதித்துறையின் தீவிர அக்கறை என்ற இரண்டையும் ஒன்றாகவே பாவிக்கிறார். தாமஸ் சோவல் (Thomas Sowell) என்பார் நீதித்துறை தீவிரமாக இருந்தாலும். கீழ்க்கண்ட கட்டுப்பாடுகள் தடையாக உள்ளன என்கிறார். சட்டமன்றத்தின் பெரும்பான்மை, மக்களது பொதுக்கருத்து, சட்டமன்றம் இயற்றிய சட்டங்கள், அரசியலமைப்பின் அடிப்படைக் கோட்பாடுகள், நீதித்துறை ஏற்கனவே வழங்கிய தீர்ப்புக்கள். இவற்றை எந்த நீதிபதியும் மீறிச் செயல்பட முடியாது.

இன்றைய தொழிற்சாலை வளர்ச்சியினால், பொருளாதாரம் வளர்கிறது. அதே நேரத்தில் பிரச்சனைகளும் புதியதாக எழுகின்றது. இப்புதிய பிரச்சனைகள் மக்களின் சமூக, பொருளாதார மாற்றங்களால் உருவாகியுள்ளன. இவற்றை நீதித்துறை மாறியுள்ள மாற்றங்களுக்கேற்ப தன்னை அனுசரித்துப் பிரச்சனைகளுக்குத் தீர்வு வழங்க வேண்டும். மக்களின் சமூகப் பிரச்சனைகள், கருத்து வேறுபாடுகள் ஆகியவற்றை நீக்கி மக்களை சுமூகமாக சமுதாயத்தில் வழிநடத்த வைப்பது நீதித்துறையின் பணியாயிற்று. இதை பங்கேற்பு பொதுநீதி என்பதில் ஒரு பகுதி எனலாம். மக்களின் உரிமைகள், கட்டுப்பாடுகள் ஆகியவற்றை புதிதான கோணத்தில் பார்வையை செலுத்த வைத்துள்ளது நீதித்துறையின் தீவிர அக்கறை. இதனையே நீதித்துறையின் படைப்பு (Judicial Creativity) என்றும் அழைப்பர். ஏனெனில் நீதித்துறை தற்போது வழங்கி வரும் தீர்ப்புக்கள், செயல்பாடுகள் அனைத்தும் எண்ணியே பார்க்க முடியாத நடவடிக்கைகள். அனைத்தையும் இன்று செய்வதால், இவை நீதித்துறையின் புதிய படைப்புக்களாக உள்ளன. நீதித்துறையானது, பங்கேற்பு மற்றும் சமூக நீதியைக் காக்க வேண்டியது, நலிவற்ற மக்களின் நலன்களைக் காப்பது, சமூக அநீதியை அகற்றுவது, போன்ற புதிய நடவடிக்கைகளில் அல்லது நோக்கங்களில் ஈடுபட்டுள்ளது.

நீதித்துறையின் தீவிர அக்கறை என்பது நீதித்துறையானது சமூக, பொருளாதாரப் புரட்சி உருவாக வழிவகை செய்யுமென்று வர்ணிக்கின்றனர். ஏனெனில் வெறுமனே சட்ட விளக்கமளித்தலின்று, மக்களின் உண்மையான பிரச்சனைகளை, சமூகப் பிரச்சனைகளைக்

கண்ணுறுகின்றது. இதனால் நீதித்துறையின் அதிகாரம் அதிகரித்துள்ளது. அதே நேரத்தில் மக்களின் காவலன் என்ற நிலையை குடிமகன் ஒவ்வொருவரும் உணர வைப்பதுடன், நீதிமன்றத்தின்மீது அதிக நம்பிக்கையும் வைத்துள்ளனர். நீதிபதிகள் அரசியலமைப்பு பற்றிய தீர்ப்புக்களில்கூட சமூக, பொருளாதார நோக்கங்களையும் மனதில் வைத்துக் கொண்டு தீர்ப்புகள் வழங்க வேண்டும். இந்திய அரசியலமைப்பின் நான்காம் பகுதியில் இடம்பெற்றுள்ள வழிகாட்டு நெறிக் கொள்கைகள் மற்றும் அடிப்படை உரிமைகள் ஆகியவற்றை நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ளனர். நலிவுற்ற மக்களை மட்டும் காப்பது நீதித்துறை தீவிர அக்கறையின் நோக்கமல்ல; மக்கள் அனைவரையும் காப்பதுதான் நீதித்துறையின் நோக்கம். ஆனால் சமூகத்தின் ஏற்றத்தாழ்வு, பொருளாதாரச் சமமின்மை, பெண்களுக்கு எதிரான பாலியல் கொடுமை போன்ற பல பிரச்சனைகள் அதிகமாக நலிவுற்றோர் தொடர்பாக இருப்பதால், நலிவுற்றோரைக் காப்பது நீதித்துறையின் தீவிர அக்கறை என்று பேசப்படுகிறது. சமூக நீதியையும், ஏற்றத்தாழ்வில்லாச் சமூகம், பொருளாதாரம், அனைவரது நல்வாழ்வு ஆகிய அனைத்திலும் இன்று நீதித்துறை தீவிர அக்கறை செலுத்தி வருகிறது.

சட்டத்தின் ஆட்சி வேற்றுமையில்லா சமூகம் உருவாகவும், மனித நல்வாழ்வைப் பேணவும் உருவானதெனலாம். எனவே சட்டம் சமூகத்தைக் காக்கும் ஒரு சாதனம். இச்சட்டம் தீவிரமாக இல்லையெனில், சட்டமே மறைந்துவிடும். எனவே தீவிரமாகச் சட்டம் செயல்பட்டு, மக்களின் சமூகப் பிரச்சனைகளைத் தீர்வு செய்து, அவர்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்க வேண்டும். அந்தச் சட்டத்தின் மூலம் நீதித்துறை தீவிர அக்கறை செயல்பட்டு வருகின்றது.

நீதிமன்றத்தின் மூலம் தீர்வுபெற, ஏராளமான, சிக்கலான நடைமுறை வழிகள் மக்களின் நலன்களைக் காக்க இடையூறாக உள்ளன. எனவே நீதிமன்ற நடைமுறை விதிகள் எளிமையாக்கப்பட்டால், தானாகவே பலகோடி மக்களின் உரிமைகள் காக்கப்படுமென மக்கள் எண்ணுகின்றனர். எனவேதான் இன்றைய நாளில் பொதுமக்கள் வழக்கு என்பது வளர்ந்து வந்துள்ளது. மேலும் இன்றைய வழக்குத் தொடுக்கும் முறையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. அபிரகாம் சாயிஸ் (Abraham Chayes) என்பார் கீழ்க்கண்ட சில வித்தியாசங்களைக் கூறியுள்ளார். அவை

1. வழக்குத் தொடுப்பது குறிப்பிட்ட இச்செயலுக்குத்தான் என்று இல்லாமல், வழக்குத் தொடுக்கும் விஷயங்களை நீதிமன்றமே வழக்குத் தொடுக்கும் பிரிவினர்களை (Parties) வைத்து முடிவு செய்கின்றது.

2. வழக்குத் தொடுப்போர் தனிநபர் மட்டுமின்றி, ஒட்டு மொத்தமாக அனைவரையும் ஒரு பிரிவினராகச் சேர்க்கப்படுகின்றது.

3. வழக்கு விசாரணை தொடர்புடைய வழக்கின் பின்னணி உண்மைகள் மட்டுமின்றி, சட்டமன்ற அமைப்புக்கள் இயற்றிய அன்றைய நிலை உண்மைகளையும் நீதிமன்றம் விசாரிக்கின்றது.

4. வழக்கின் தீர்ப்புக்கள் முன்னர் செய்த தவறுக்கென குறுகிய அளவில் ஈடுபடாது என்ற நிலை மட்டுமல்லாது பரந்த அளவில் மேற்படி தவறுகள் நடக்காதவாறு தடுப்பதுவும், பலன் பாதிக்கப்பட்டவரோடு தொடர்புடைய பலருக்குத் தரும் வகையில் தீர்ப்புக்கள் வழங்கப்படுகின்றது.

5. வழக்கின் தீர்ப்பை நீதிமன்றமே முடிவு செய்யாது, தொடர்புடைய பிரிவினர்கள் முடிவு செய்யும்படி விடப்பட்டுள்ளது.

6. நீதிமன்றம் தீர்ப்பு வழங்குவதோடு, எதிர்கால நிர்வாகமே இவ்வாறு இருக்க வேண்டுமென்பதையும் வலியுறுத்துகிறது.

7. வழக்குகளின் தீர்ப்புக்கள் சம்பந்தப்பட்ட பிரிவினர்களோடு நில்லாது, அரசாங்கத்தின் கொள்கையும் மக்களுக்கு பயன்படும் வகையில் இருக்க வேண்டுமென்று பரந்த அளவில் வழிநடத்தப்படுகின்றது.

பொதுமக்கள் வழக்கு என்பது இன்று அதிக அளவில் வளர்வதற்குக் காரணம் நீதிமன்றம் அதிக அக்கறை எடுப்பதால் தான் ஆகும். இதனால் மக்கள் நலனில் அக்கறையுள்ள பொதுமக்கள், அரசுசாரா நிறுவனங்கள், சமூக அமைப்புக்கள் ஆகியன தங்களது பணிகளைச் செம்மையாகச் செய்ய உதவுகின்றது. மக்கள் பங்கேற்பிற்கும் இது உதவி செய்கின்றது. கீழ்க்கண்ட உரிமைகள் நீதிமன்ற தீவிர அக்கறையால் உருவாகியுள்ளன. அவை

1. இலவசச் சட்ட உதவி
2. குற்ற விசாரணை வழக்குகளை விவைாக விசாரிக்க வற்புறுத்துதல்.
3. அரசாங்கச் செய்திகளைப் பெறுவதுவும், தெரிந்து கொள்ளும் உரிமை.
4. கெடுதல் விளைவிக்கும் மருந்துகள், தீமை விளைவிக்கும் சுகாதாரக் கேடுகள் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புக் கோரும் உரிமை.
5. சமுதாயத் துன்புறுத்தலிருந்து விடுவிக்கும் உரிமை.
6. நாட்டில் சட்டம் ஒழுங்கு குலைந்தால், சரியாக்கக் கோரும் உரிமை.
7. சூழ்நிலை சமநிலையைக் காப்பது, இயற்கையைக் காப்பது, சுற்றுப்புற சூழல்களைக் காக்கும் உரிமை (Environmental Rights).
8. குழந்தைகள் நல்வாழ்வு பற்றிய உரிமை.
9. அடிப்படைத் தேவைகள் பற்றிய உரிமை.
10. வளர்ச்சித் திட்டங்களைச் செயல்படுத்தக் கோரும் உரிமை.

இந்நாளில் பொதுமக்கள் வழக்கு எல்லாச் செயல்களுக்கும் பொருந்தும் வகையில் விரிந்து, வளர்ந்துள்ளது. எனவே எல்லாத் துறைகளும், எல்லா நிறுவனங்களும் மக்களுக்கு எந்தவகையிலும் பாதிக்காத வகையில் கவனமாகத் தங்களது செயல்களைச் செய்து வருகின்றனர். மேலும் பொதுமக்கள் வழக்கு என்பது மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துவதோடு, தங்களது உரிமைகளைக் காக்கவும் முயற்சி செய்கின்றனர். இதனால் ஆரோக்கியமான மக்களாட்சி மலர வாய்ப்பு உள்ளது.

மாதிரி வினா :

நீதித்துறை தீவிர அக்கறை என்றால் என்ன? அது எவ்வாறு செயல்படுகின்றது?

# பாடம்–21 நிர்வாகச் சீர்திருத்தங்கள்

## நிர்வாகச் சீர்திருத்தங்கள்

இந்தியா சுதந்திரம் பெற்றபின்னர், மக்களின் பொருளாதார மேம்பாட்டிற்காக ஏராளமான நடவடிக்கைகளை மத்திய அரசாங்கம் எடுக்க வேண்டியதாயிற்று. இதனால் நிர்வாக அமைப்பு விரிவடைந்தது. ஏராளமான பணியாளர்கள் நியமிக்கப்பட்டனர். மேலும் அரசாங்கத்தின் செலவும் மிகுதியாயிற்று. ஆகவே அரசாங்கம் **1948** ஆம் ஆண்டு சிக்கனக்குழு ஒன்றை கஸ்தூரிபாய் லால்பாய் என்ற தொழிலதிபரின் தலைமையின்கீழ் நியமித்தது. அரசாங்கத்தில் அவசியமற்ற, வீணான, அதிகப்படியான செலவுகளை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதைப் பற்றி ஆய்ந்து அறிக்கை சமர்ப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. **1938–39** ஆம் ஆண்டிலிருந்து இச்செலவுகள் பற்றி ஆய்வு செய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. இந்த அறிக்கையின்படி, எல்லா அமைச்சகங்கள், துறைகள் ஆகியவற்றில் சிக்கனக்குழு என்ற ஒரு பிரிவு ஏற்படுத்தப்பட்டது. இக்குழுவின் பணி துறையின் தற்போதைய செலவுகளில் எவற்றையெல்லாம் குறைக்கலாம், தள்ளிப்போடலாம், நீக்கலாம் என்பதை ஆய்ந்து, அச்செலவுகளில் சிக்கனத்தைப் பராமரிப்பது ஆகும். மேலும் **1952** ஆம் ஆண்டு உள்துறை அமைச்சகத்தில் ஒரு சிறப்புப் பிரிவு ஏற்படுத்தப்பட்டது. இதன் நோக்கம், பல்வேறு துறைகள்/அமைச்சகங்கள் ஆகியவற்றில் பணியாளர்கள் எவ்வளவு தேவை என்பதை ஆராய்வதாகும்.

சிக்கனக்குழு ஏற்படுத்தப்பட்டு, ஓராண்டிற்குப் பின்னர் **1949** ஆம் ஆண்டு, அரசாங்கத்தின் மூத்த பணியாளர் கோபாலசாமி அய்யங்கார் என்பார் தலைமையில் நிர்வாக அமைப்புக்களை எவ்வாறு சீரமைப்புச் செய்யலாம் என்பது குறித்து ஒரு குழு அமைக்கப்பட்டது. இக்குழு நிர்வாகத்தில் திறமை என்பது தொடர்ந்து பராமரிக்கப்பட வேண்டுமென்றும், பொதுப்பணியை நிறைவேற்ற அனைத்துப் பணிகளும், பணிமுறைகளும் திறமையோடு செயல்பட வேண்டுமென்று வலியுறுத்தினர். நிர்வாக மேம்பாட்டிற்கு மூன்று முக்கிய பரிந்துரைகளை வழங்கியது இக்குழு. அவை, அரசாங்க நிர்வாக அமைப்பில் மாற்றங்கள் தேவை என்பது முதலாவது பரிந்துரை. இரண்டாவதாக, பணியாளர் குழாமின் மேம்பாடாகும். இதில் அனைத்து மட்டங்களிலும் பணியாற்றும் பணியாளர்களின் பணிகளை ஆக்கபூர்வமாக மேம்படுத்த வேண்டும். மூன்றாவதாக, நிர்வாகச் செயல்முறைகளில், குறிப்பாக நிதி மற்றும் நிர்வாகம் ஆகியவற்றில் திறம்பட்ட வழிமுறைகளைப் பயன்படுத்த வேண்டும் என்பதாகும். இவை தவிர, அமைப்பும் முறைகளும் என்ற புதுப்பிரிவை ஏற்படுத்த வேண்டும் என்பதுவும் முக்கிய பரிந்துரை ஆகும். ஏனெனில் இப்பிரிவு அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற வளர்ந்த நாடுகளில் உள்ளது. இதன் மூலம்தான் நிர்வாக மேம்பாட்டை அடையலாம் என்ற கருத்து மக்களிடம் ஆழமாகப் பதிந்திருந்தது. எனவேதான் இப்பிரிவை ஏற்படுத்த வேண்டும் என்று இக்குழு பரிந்துரைத்தது.

**1949** ஆம் ஆண்டிற்குப் பின்னர், பிரதம மந்திரி ஜவஹர்லால் நேருவின் வேண்டுகோளுக்கிணங்க அன்றைய தலைமைக் கணக்குத் தணிக்கையாளராக இருந்த அசோக் சந்தாவிடம் நிர்வாகத்தில் தாமதங்களைத் தவிர்க்கவும், நிதி மற்றும் வரவு செலவுத் திட்டத்தில் சீர்திருத்தங்கள் பற்றி பரிசீலிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. அசோக் சந்தா நிர்வாகப் பிரச்சனைகளைக் கூர்ந்தாராய்ந்து, சில பரிந்துரைகளைச் செய்தார். அகில இந்தியப் பணிகள் அதிகமாக உருவாக்கப்பட வேண்டுமென்றும், அதிகார ஒப்படைப்பு முறையாக ஊக்குவிக்கப்பட வேண்டுமென்றும், அரசாங்கச் செயல்

திட்டங்களில் தனித்துவப் பயிற்சியளிக்கப்பட வேண்டுமென்றும், அலுவலக மைய செயல்முறை கொண்டுவரப்பட வேண்டுமெனவும் பரிந்துரை செய்தார். ஆனால் அவை அனைத்தும் பரிந்துரையளவிலேயே இருந்ததே தவிர, செயலாக்கப்படவில்லை. நிர்வாகச் சீர்திருத்தத்திற்கு மதிப்பீட்டுக் குழு அதிகமான கவனம் செலுத்தி, நேரத்திற்கு நேரம் பரிந்துரை செய்து வந்துள்ளது.

## இந்திய நிர்வாகத்தின் மீதான ஏ.டி.கோர்வாலாவின் அறிக்கை:

தேசிய திட்ட ஆணையம், ஓய்வு பெற்ற ஒரு இந்திய ஆட்சித் துறைப்பணி அதிகாரியான ஏ.டி.கோர்வாலாவை பொதுத்துறை நிர்வாகத்தை ஆய்ந்து பரிந்துரைகள் வழங்க 1950–ஆம்ஆண்டு நியமித்தது. கோர்வாலா இந்திய நிருவாக முறையை அலசி ஆராய்ந்து ஒரு அறிக்கையை 1951–ஆம் ஆண்டு சமர்ப்பித்தார். அவர் கீழ்க்கண்ட முக்கிய பரிந்துரைகளை செய்தார்.

1. அரசாங்கத்தில் உள்ள, உயர் அதிகாரிகள் நல்ல முறையில் செயல்படுதல் வேண்டும். அரசாங்கத்தின் உயர் மட்ட அதிகாரிகள் நல்ல முறையில் செயல்படுகிறார்கள் என்று மக்களும் நம்பிக்கை கொண்டாலொழிய பிரிட்டிஷ் முறையில் அமைந்த கேபினட் முறை பாராளுமன்றம் நல்ல முறையில் செயல் படாது. மந்திரிகளும், சட்டமன்ற உறுப்பினர்களும், நிர்வாக அதிகாரிகளும் நீதியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கோர்வாலா வற்புறுத்துகிறார். பொதுத்துறை நிர்வாகம் ஊழலுக்கும், வாடிக்கை ஆதரவுக்கும், செல்வாக்குக்கும் இடம் கொடுத்தால் நிர்வாகத்தின் திடமான தன்மை கெடுவதோடு அதன் கொள்கைகள் சீர்குலையவும் நிர்வாகம் பலகீனப் படவும், மக்கள் நம்பிக்கை இழக்கவும் செய்வார்கள்.

2. அவர் நிர்வாக அமைச்சர்களுக்கும் நிதி அமைச்சகத்திற்கும் நல்ல தொடர்புகள் இருக்க வேண்டும் என்று பரிந்துரை வழங்கினார். நிதிக் கட்டுப்பாடு அவசியம். ஆனால் நிதி குறிக்கீடு இருக்கக் கூடாது.

3. மந்திரி பொதுவான கொள்கைகளை வகுப்பதோடு நின்று கொள்ள வேண்டும். நுட்பமான கொள்கைகளை வகுப்பதை செயலாளரிடம் விட்டு விட வேண்டும்.

4. அமைப்பும் வழி முறைகளும் என்ற நிறுவனத்தை அரசாங்கத்தில் ஏற்படுத்த வேண்டும். மேலும் இரண்டு உறுப்பினர்கள் அடங்கிய வாரியத்தை நிர்வாகம் சீர்பட்டு செயல்பட அமைக்க வேண்டும்.

5. அமைச்சத்தின் பணிகளின் மீது ஆன பாராளுமன்ற கட்டுப்பாடு முக்கியமாக அமைச்சகங்கள் செய்யும் செலவுகளின் மீது உள்ள கட்டுப்பாடு மிகவும் அவசியம்.

6. அரசாங்க நிர்வாக அமைப்பில் அதிக இளநிலை அதிகாரிகளையும், குறைந்த எழுத்தாளர்களையும் நியமிக்க வேண்டும்.

7. அரசாங்க அலுவலர்களில் ஒழுக்கம் மிக அவசியம். நல்ல வேலை செய்பவருக்கு பதவி உயர்வு கொடுப்பதின் மூலம் ஒழுக்கத்தை ஏற்படுத்தலாம்.

8. பிரிட்டிஷ் நாட்டில் உள்ள விட்லி குழுமுறையை இந்தியாவிலும் ஏற்படுத்தலாம்.

9. பயிற்சி என்பது வேலையை நல்ல முறையில் கற்றுக் கொள்ளவும். ஒழுங்குணர்வை வளர்த்துக் கொள்வதோடு அல்லாமல், ஒவ்வொரு பயிற்சியாளரும்

அவருடைய வேலையை பரந்த நிலையில் வைத்து, கல்வித் தகுதியை உயர்த்தி செயல்படவகை செய்ய வேண்டும். பயிற்சியாளரின் வேலைத்திறனை உயர்த்தவும் பெரிய பதவியையும், பொறுப்புக்களையும், கால மாற்றங்களுக்கு தகுந்தபடி மாற்றி ஏற்றுக் கொள்ளவும் பயிற்சி அமைய வேண்டும்.

**10.** இந்திய ஆட்சித்துறைப்பணி பயிற்சிப் பள்ளிக் கூடத்தில் முழுநேர முதல்வரை நியமித்து, அவர் மற்றதுறை பொறுப்புகளில் இருந்து விலகிச் செயல்பட வேண்டும்.

**11.** பயிற்சி இயக்குனரும், மற்றும் அமைப்பும் வழி முறைகளும், நிறுவனமும் தேவையான பணியாளர்களோடு உடனடியாக நியமிக்கப்பட வேண்டும்.

**12.** அரசாங்கப் பணியில் உள்ள எல்லா தரத்திலும் யாருக்கும் ஆதரவு கொடுக்காமல், ஆள் சேர்க்கும் முறை அமைய வேண்டும். எல்லா பதவிகளும் நிரந்தரமானாலும் சரி, தற்காலிகமானாலும் சரி, பொதுப் பணித்துறை தேர்வு ஆணையத்தின் மூலமாக நிரப்பப்பட வேண்டும்.

இந்திய அரசாங்கம் அமைப்பும், வழி முறைகளும் என்ற அமைப்பை ஏற்படுத்த ஒத்துக் கொண்டது. ஆனால் ஏ.டி.கோர்வாலாவின் மற்ற பல பரிந்துரைகள் நிறை வேற்றப்படவில்லை.

## பொதுத்துறை நிர்வாகத்தின் மீதான பால் எச். அப்பிள்பியின் அறிக்கை:

இந்திய நிர்வாக அமைப்பை படித்து ஆராய்ந்து பரிந்துரைகள் வழங்க பால் எச்.அப்பிள்பியை இந்திய அரசாங்கம் 1952 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நியமித்தது. அவர் 1953 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அறிக்கையை சமர்ப்பித்தார். அவர் கீழ்கண்ட பரிந்துரைகளை வழங்கினார்.

1. அமைப்பும் வழிமுறைகளும் என்ற நிறுவனத்தையோ அல்லது அரசாங்கத்தின் ஒரு மந்திரியின் கீழ் பொதுத்துறை நிர்வாக அலுவலகத்தையோ ஏற்படுத்த வேண்டும். அது அரசாங்கத்தின் அமைப்பையும், வழிமுறைகளையும், படித்து ஆராய்ந்து சீர்திருத்தம் அடைய வகை செய்யும்.
2. பொதுத்துறை நிருவாக நிறுவனம் இந்தியாவில் ஏற்பட வேண்டும். அது அரசுப்பணியை வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு பத்திரிகையை வெளியிட்டு நிருவாக அறிவுத்திறன் வளர்வதற்கும், நிருவாக படிப்பு முறைகள் விரிவு அடைவதற்கும் வகை செய்ய வேண்டும்
3. பொதுத்துறை நிர்வாகத்தில் பட்டப்படிப்பு படிப்பதற்கு இந்த நிறுவனம் வகை செய்ய வேண்டும்.
4. அரசாங்க வழி முறைகள் எளிமைப்படுத்தப்பட்டு வளர்ச்சி மற்றும் சமூக செயல்கள் நல்ல முறையில் செயல்பட வகை செய்ய வேண்டும்.
5. நிருவாக படி நிலை அமைப்பு கோபுர அமைப்பில் அமைந்து பெரும்பகுதியான படிகளில் நிர்வாக அதிகாரிகளை நியமிக்க வேண்டும். பல நிலைகள் அதிகப் படுத்த வேண்டும்.
6. ஆள் சேர்க்கும் முறையில் பொதுப் பணித்துறை ஆணையம், நிருவாக ஆட்சி வட்டாரம் நெகிழும் தன்மையையும் பகுத்தறிவையும் உடையவர்களைச் சேர்க்க வகை செய்ய வேண்டும்.

7. பொதுத்துறைப் பணியாளர்கள் அதிகமாக கிடைக்கும் பொருட்டு பணியாளர் தொகுதி வளர்ச்சித் திட்டங்களை விரிவு படுத்த வேண்டும்.

அப்பிள்பி தனது இரண்டாவது அறிக்கையை 1956 ஆம் ஆண்டு சமர்ப்பித்தார். அவருடைய முக்கியமான பரிந்துரைகள் கீழ்வருவனவாகும்.

1. கேபினட் மட்டத்தின் கீழும், மந்திரியின் மட்டத்தின் கீழும் புதிய மட்டங்கள் ஏற்பட்டு ஒரு அமைப்பாக இணைய வேண்டும்.

2. பொது நிர்வாக அதிகாரிகளையும், தொழில் நுட்பமறிந்த நிர்வாக அதிகாரிகளையும் ஆள் சேர்க்கவும், பயிற்சி அளிக்கவும் வகை செய்ய வேண்டும்.

3. அமைப்புச் சட்டமும், நடவடிக்கை முறைகளும் நிர்வாக வளர்ச்சிக்குத் தகுந்தபடி அமையவேண்டும்.

4. திட்ட துரித அதிகாரி என்ற ஒரு அதிகாரியை மத்திய செயலகத்தில் நியமித்து, காலதாமதம், போதுமான பணியாளர்கள் இல்லை போன்ற குறைகளை நீக்கி நிருவாகம் நல்ல முறையில் நடக்க வகை செய்ய வேண்டும். நிதி அதிகாரி என்ற ஒருவரை வரவு செலவு திட்ட முறையை சீர்படுத்தவும், நிதி நிர்வாகத்தை சீர் திருத்தவும், நிதி அமைச்சகத்தில் நியமிக்க வேண்டும்.

5. செலவுத்துறை செயலாளர் என்பவரை நிதி அமைச்சகத்தில் நியமித்து தீர்மானம் காணும் முறையை தீவிரப்படுத்த வேண்டும். மேற் கூறிய மூன்று அதிகாரிகளும் நிர்வாக அமைப்பில் நிரந்தரமாக நியமிக்கப்படாமல் தற்காலிகமானவராக நியமிக்கப்பட்டு அரசாங்க தீர்மானங்களும் பணிகளும், செம்மையுற நிறைவேற்றப்பட்டு அரசாங்கத்தில் புனராய்வு முறை இல்லாமல் செய்ய வேண்டும்.

6. கணக்குத் தணிக்கையாளரின் அறிக்கைகள் அற்ப விஷயங்களைக் கொண்டெல்லாம் இருக்கக் கூடாது. இந்த அறிக்கைகள் தேர்ந்தெடுக்கப் பட்டதாகவும், சுருக்கமானதாகவும் இருக்க வேண்டும்.

7. அதிகார ஒப்படைப்பு முறை எல்லா நிருவாக முறைகளிலும் கொண்டு வரப்பட வேண்டும் பாராளுமன்றம் முக்கியமற்ற விளக்கங்களில் எல்லாம் பாராளுமன்ற கட்டுப்பாடு, பொதுக்கட்டுப்பாடு என்ற வகையில் முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. அதனுடைய பங்கு குறைகளைக் காணுவதைத் தவிர்த்து நிறைகளை புகழும் வகையில்தான் இருக்க வேண்டும்.

8. கழகங்களிலும், இணையங்களிலும் நிருவாக வாரியம் ஒப்படைப்பு அதிகார முறையை கையாண்டு செயல்பட வேண்டும். இந்த வாரியங்கள் இரண்டு பணிகளைச் செய்ய வேண்டும். முதலாவதாக, பணியின் குறை நிறைகளை ஆய்வது; இரண்டாவதாக பணிகளை ஒன்றிணைப்பது.

9. மத்தியக்கொள்வினையும், மத்திய நிர்மாணித்தலும் பெரிய நிறுவனங்களின் செயல்களைக் கட்டுப்படுத்துகிறது.

10. கணக்குத் தணிக்கையாளர், தணிக்கைப் பொறுப்பில் இருந்து விடுபட வேண்டும். தணிக்கையாளர்கள் மதிப்பிடுவதோ நிர்வாகத்தை மதிப்பிடுவதோ மக்களின் நலன்களுக்கு தீர்ப்புக் கூறுவதோ கூடாது.

11. பொது நிறுவனங்களின் வளர்ச்சி மற்றும் விரிவு நோக்கத்தில் அவை களினுடைய இருப்பிடத்தையும், படிநிலை அமைப்பையும், திட்டமிடுதலையும் தீர்மானம் செய்ய வேண்டும.

12. பொதுப் பணியாளர்களுக்கு போதுமான சம்பளம் கொடுக்கப்பட வேண்டும். நாட்டின் வளம் இந்திய அரசாங்கத்தின் வெற்றியைப் பொறுத்ததாகும். நல்ல அரசாங்கம் அமைவதற்கு அரசாங்கத்தின் பணி புரியும் அதிகாரிகளுக்கு போதுமான சம்பளம் கொடுக்கப்பட வேண்டும்.

அப்பிள்பியின் மிகக் குறைந்த பரிந்துரைகளே ஏற்றுக் கொள்ளப்பட்டு நிறைவேற்றப்பட்டுள்ளன.

திறனாய்வு : இந்திய நிருவாகத்தின் அமைப்பு அதன் நடவடிக்கை மற்றும் நடைமுறைகள் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுத்தியது போலத்தான் பெரும் பகுதி இருக்கிறது. இந்திய நிருவாக அமைப்பு மக்களுடைய நலன்களைக் கருத்தில் கொண்டு சமூக பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தும் வகையில் அமையவில்லை. ஆகையால் கடந்த காலங்களில் மத்திய, மாநில அரசாங்கங்களும், அரசியல் தலைவர்களும், அரசுப்பணித் துறை அதிகாரிகளும், நிர்வாக வல்லுனர்களும் அரசாங்கம் தன்னுடைய சமூகப் பொருளாதார வளர்ச்சியை அடைவதற்கும் அரசாங்க நிருவாகம் பொது மக்களுக்கு பொறுப்புடையதாக இருப்பதற்கும் பல சீர்திருத்தங்களை கொண்டு வர முயன்று இருக்கிறார்கள். ஆனால் இந்த முயற்சிகள் ஒரு குறிப்பிட்ட அளவுடையதாகவும், எப்போதாவது ஒரு இடத்தில் தனித்து நிகழ்வதாகவும். மற்றும் அவைகளின் செயல்பாடுகள் முழு மனதோடு இல்லாமலும் இருக்கின்றன. பிரிட்டிஷ் நாட்டில் உள்ள விட்லி குழு முறையை ஏற்படுத்த வேண்டும் என்று ஏ.டி.கோர்வாலா **1951** ஆம் ஆண்டிலேயே கோரினார். ஆனால், பணியாளர் குழுக்கள் தான் ஏற்படுத்தப்பட்டன. பணியாளர் குழுக்கள், ஆலோசனைக் குழுக்கள் தான் இந்தக் குழுக்கள் எந்த ஒரு உடன்பாட்டையும் கொண்டு வரும் அமைப்பு அல்ல. இந்தப் பணியாளர் குழுக்கள் தங்களுடைய கருத்துக்களை அரசாங்க பிரதிநிதிகளுக்கு தெரிவிக்கும். பிரிட்டிஷ் விட்லி குழு முறையை ஒத்து பணியாளர் குழுக்கள், அமைக்கப்பட்டு இருந்தாலும், விட்லி குழுவைப் போல செயல்படவில்லை. பணியாளர்கள் பணியாளர் குழுவில் இடம் பெறவில்லை. பணியாளர் குழுக்கள் பதவி உயர்வு, ஆட்சேர்ப்பு, வேலை நேரம், சம்பளம் முதலானவைகளுக்கு அளித்துள்ள பரிந்துரைகளை அரசாங்கம் இன்னும் நிறைவேற்றவில்லை. ஆகையால் இந்தியாவில் விட்லி குழுக்கள் இல்லை என்பது தெளிவாகிறது. நிருவாகத்தில் திறமை ஏற்பட இந்தியாவில் விட்லி குழுக்கள் அவசியம். **1960** ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பணியாளர் குழுக்களை விட்லி குழுக்கள் போல, பிராந்திய குழுக்கள், துறைக் குழுக்கள் மற்றும் தேசிய குழு அடங்கிய மூன்றுபடி நிலை அமைப்பைக் கொண்டுவர அரசாங்கம் பரிந்துரை செய்தது. **1963** ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இந்திய அரசாங்கம் இந்தக் குழுக்களை ஏற்படுத்த முடிவு செய்தது. தேசிய குழு முதன் முதலில் **1969** ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தான் கூடியது. இதற்கு முக்கிய காரணம் ஒவ்வொருவரும் நிருவாகத்தை சீரமைக்க நினைக்கிறார்கள. ஆனால் அவர்களுடைய நலம் பாதிக்கும் பொழுது நிர்வாக சீரமைப்பை விரும்புவதில்லை. இரண்டாவதாக சீர்திருத்தங்களை நிறைவேற்றத் தேவையான நிறுவன அமைப்பு முறைகள் இல்லை. மூன்றாவதாக, ஒத்துக் கொண்ட நிர்வாக சீர் அமைப்புக்களைத் தொடர்ந்து நிறைவேற்றிச் செல்ல செயல் திட்டங்கள் கிடையாது.

குடியுரிமை பெற்ற மக்கள் தான் நிர்வாக சீர்திருத்தங்களின் பயன்களைப் பெறப்போகிறார்கள். சீர்திருத்தங்களை செயல் படுத்த வேண்டும் என்று விடாமல் பொதுமக்கள் முயற்சி எடுத்துக் கொள்ள அவர்களுக்கு போதுமான தகவல்கள் கொடுக்கப்பட்டும், கற்பிக்கப்பட்டும் இருக்க வேண்டும். குடிமக்கள் அமைப்புகள், பல்கலைக் கழகங்கள், வாழ்க்கைத் தொழில் நிர்வாக நிறுவனங்கள் மற்றும் மற்ற அமைப்புகள் பொது சேவை நோக்கோடு இந்தப் பணியை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒரு தேசிய குடியுரிமை மக்கள் குழு அமெரிக்க ஐக்கிய நாட்டில் முதல் ஹூவர் ஆணையம் ஏற்படுத்தப்பட்டபோது அமைக்கப்பட்டது. அந்த தேசிய குடியுரிமை மக்கள் குழுவிற்கு தனி நபர்களும் நிதி கொடுத்தார்கள். அந்த மாதிரி அமைப்பு இந்தியாவிலும் தோன்றினால் சீர்திருத்தங்கள் நிச்சயமாக நிறைவேற்றப்படும்.

## நிர்வாகச் சீர்திருத்த ஆணையம்

ஐந்தாண்டுத் திட்டங்களின் முன்னேற்றத்தில் காணப்பட்ட மந்த நிலை, நாட்டின் பொருளாதாத்தின் அடிப்படைக்கென உருவாக்கப்பட்ட குறிக்கோள்களை முழுமையாக எய்த முடியாமை, உறுதிமொழிக்கும் செயலுக்கும் இடையே தோன்றிய இடைவெளி ஆகியவை இவற்றின் காரணங்களை ஆராய இந்திய அரசைத் துாண்டியது. பொருளாதாரத்தில் மிக விரிவான மாற்றத்தைக் கொண்டுவர நிர்வாக அமைப்பு போதுமானதாக இல்லாமலிருந்திருக்கலாம். அல்லது, இப்பணியைப் புரிவதற்குத் தேவையான மனநிலையும், ஆற்றல் திறனும் இல்லாமலிருந்திருக்கலாம்.

ஆகவே, நாட்டின் பொதுத்துறை ஆட்சியைப் பரிசீலித்து, பொதுப்பணித் துறைகளின் திறமையையும், நேர்மையையும் அதிகரிப்பதற்கென தேவைப்பட்ட சீர்திருத்தங்களையும், புனரமைப்பையும் பரிந்துரை செய்வதற்கெனவும், அரசின் சமூக, பொருளாதாரக் கொள்கைகளை திறம்படச் செயல்படுத்துவதற்குகந்த நிலையில் பொதுத்துறை ஆட்சியை மாற்றியமைப்பதற்கெனவும், 1966–ஆம் ஆண்டு ஜனவரி மாதம் திரு.மொரார்ஜி தேசாய் அவர்களின் தலைமையில் நிர்வாகச் சீர்திருத்த ஆணையமொன்றை இந்திய அரசாங்கம் நியமித்தது. இக்குழுவின் பரிசீலனைக்கு விடப்பட்டவற்றுள் மிக முக்கியமானவை பின்வருமாறு

(1) இந்திய அரசாங்கத்தின் பணித்துறையும், அது பணிபுரியும் துறைகளும்.

(2) எல்லா மட்டங்களிலுமுள்ள திட்டம் சம்பந்தப்பட்ட அமைப்புக்கள்

(3) மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகள்.

(4) நிதி நிர்வாகம்.

(5) பணித்துறை நிர்வாகம்

(6) பொருளாதார நிர்வாகம்

(7) மாநில நிர்வாகம்

(8) மாவட்ட நிர்வாகம்

(9) வேளாண்மை நிர்வாகம்

(10) மக்களின் குறைகளைத் தீர்ப்பதிலுள்ள பிரச்சினைகள்

1966, 1967 ஆகிய ஆண்டுகளில் இக்குழு இரண்டு இடைக்கால அறிக்கைகளைச் சமர்ப்பித்தது. இவற்றில் ஒன்று மக்களின் குறைகளைத் தீர்ப்பதிலுள்ள பிரச்சினைகள் சம்பந்தப்பட்டது. அமைச்சர்கள், அரசாங்க அதிகாரிகள் போன்றோர்களது நிர்வாக நடவடிக்கைகட்கெதிராக எழுப்பப்படும் குற்றச்சாட்டுகளை விசாரணை செய்வதற்கென ஆம்புட்ஸ்மன் (Ombudsman) போன்ற தனி அமைப்பை உருவாக்க வேண்டுமென்று இவ்வாணையத்தின் முதல் அறிக்கை பரிந்துரை செய்தது. இதற்கேற்ப உருவாக்கப்படும் லோக்பால் (Lokpal) மத்திய அமைச்சர்கள், மத்திய அரசின் செயலாளர்கள் போன்றோருக்கெதிரான குற்றச்சாட்டுக்களை விசாரணை செய்வதற்கான அதிகாரத்தைக்கொண்டிருக்கும் பிற அதிகாரிகட்கெதிரான குற்றச்சாட்டுகளை விசாரணை செய்வதற்குத் தேவையான அதிகாரத்தை மத்தியிலும் மாநிலங்களிலும் உருவாக்கப்படும் லோக் அயுக்தா (Lok Ayukta) கொண்டிருக்கும். மேற்கூறிய பரிந்துரைகளை அடிப்படையாகக் கொண்ட சட்டங்களை மத்திய பாராளுமன்றமும், ஒருசில மாநிலச் சட்டமன்றங்களும் இயற்றியுள்ளன. திட்ட ஆணையத்திடமுள்ள நிர்வாகப் பணிகளை அதனிடமிருந்து அகற்றி தூரக்கண்ணோட்டத் திட்டத்தை உருவாக்குவதற்கும், ஐந்தாண்டு, மற்றும் வருடாந்திரத் திட்டங்களை உருவாக்குவதற்கும், திட்டத்தின் செயல்பாட்டை மதிப்பீடு செய்வதற்கும் உகந்த முறையில் அவ்வாணையத்தை புனரமைக்க வேண்டுமென்று இரண்டாவது இடைக்கால அறிக்கை பரிந்துரை செய்தது.

1967–ஆம் ஆண்டு மொரார்ஜி தேசாய் அவர்கள் துணைப் பிரதமராகப் பதவியேற்றதைத் தொடர்ந்து திரு.ஒ.அனுமந்தையா நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் தலைவராக நியமிக்கப்பட்டார். இக்குழு 18 அறிக்கைகளைச் சமர்ப்பித்துள்ளது. மத்திய அரசின் பணித்துறையும், பணிபுரியும் முறைகளும், மத்திய மாநில அரசுகட்கிடையிலான உறவுகள், பணித்துறைநிர்வாகம், நிதி, கணக்கு, தணிக்கை, பொருளாதார நிர்வாகம், பொதுத்துறை நிறுவனங்கள், மாநில நிர்வாகம் போன்றவை சம்பந்தப்பட்ட அறிக்கைகளும் மேற்கூறிய பதினெட்டு அறிக்கைகளில் உட்படும். மிகத்திறமை மிக்க குழுக்கள் இக்குழுவிற்குப் பெரிதும் உதவி புரிந்தன. வல்லுநர்களை உறுப்பினராகக் கொண்ட இக்குழுக்கள் இந்திய நிர்வாகம் சம்பந்தப்பட்ட நுணுக்கங்கள் யாவற்றையும் பரிசீலித்தன. மத்திய அரசாங்கத்தின் அமைப்பு சம்பந்தமாக இவ்வாணையம் தெரிவித்த முடிவுகள், பரிந்துரை ஆகியவற்றில் குறிப்பிடத்தக்கவை பின்வருபவை.

மத்திய அரசாங்கத்தின் அமைப்பும், பணிமுறைகளும்.

1) நிர்வாக தேவைகளின் அடிப்படையில் அமைச்சரவையின் அளவு நிர்ணயிக்கப்பட வேண்டும். பணிகளின் தரம், தொடர்பு போன்றவற்றின் அடிப்படையில் அவை அமைச்சர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படல் வேண்டும்.

2) அமைச்சர் குழுவின் செயலர் ஒருமுகப்படுத்தும் பணி புரிவதோடன்றித் தலைமை அமைச்சருக்கும், அமைச்சர் குழுவிற்கும், அமைச்சரவைக் குழுக்களுக்கும் முக்கிய ஆலோசகராகவும் செயல்பட வேண்டும்.

3) தலைமை அமைச்சரின் கீழ் பணித்துறைப் பிரிவொன்று உருவாக்கப்பட வேண்டும். பணித்துறை சம்பந்தப்பட்ட கொள்கையை உருவாக்குதல், இவற்றின் செயல்பாட்டை புனராய்வு செய்தல், திறமை யுள்ளோரைத் தேர்வு செய்தல், உயர் மேலாண்மைப் பதவிகட்கு உரியவரை உருவாக்குதல், உயர் பதவிகட்குச் செய்யப்படும் நியமனங்களைப் பரிசீலித்தல், பணித்துறை

சம்பந்தப்பட்ட திட்டமிடல், பணித்துறை நிர்வாகத்தின் கீழ் பயிற்சி, ஆய்வு, சிறப்புப் பதவி போன்றவற்றைக் கவனித்தல் ஆகியவை இப்பணித்துறைப்பிரிவு புரியும் முக்கிய பணிகளாகும்.

4) ஒவ்வொரு அமைச்சரின் கீழும் இரு அதிகார மட்டங்கள் தான் இருக்க வேண்டும். சார்செயலாளர், துணைச்செயலாளர் ஆகியோர் ஒரு மட்டத்திலுள்ளோர், இணைச்செயலாளர், கூட்டுச் செயலாளர், செயலாளர் ஆகியோர் மற்றொரு மட்டத்திலுள்ளோர், தேவையுள்ள பணியாளர்களின் உதவியுடன் பெருமளவுப் பணிகளைத் தாமே செய்யும் அளவுக்கு இவ்வதிகாரிகட்குப் பணிகள் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும்.

## மத்திய, மாநில அரசுகட்கிடையிலான உறவுகள்:

5) தலைமை அமைச்சரைத் தலைவராகவும், நிதி அமைச்சர், உள்துறை அமைச்சர், பாராளுமன்றத்தின் எதிர்கட்சித் தலைவர்கள், ஐந்து மண்டலக் குழுக்களிலிருந்துள்ள ஐந்து பிரதிநிதிகள் ஆகியோரை உறுப்பினராகக் கொண்ட மாநிலங்களுக்கிடையிலான குழுவொன்று அரசியலமைப்பின் 263 வது விதிக்கேற்ப உருவாக்கப்பட வேண்டும்.

## பணியாளர்குழாம் நிர்வாகம்

6) வேலை நிறுத்தம் செய்யும் உரிமை அரசுப் பணியாளர்களுக்கு இருக்கக்கூடாது.. இவர்களுடைய குறைபாடுகளுக்குப் பரிகாரத்தை இணை ஆலோசனைக் குழு, அரசுப் பணியாளர் தீர்ப்பாயம் போன்றவற்றின் மூலமாகக் காணவேண்டும்.

7) அரசுப் பணியாளர் தொகுதி முழுவதற்கும் ஒரே மாதிரியான தரப்பாகுபாடுமுறை பின்பற்றப்பட வேண்டும். இங்ஙனம் செய்தால் தகுதிக்கும், தேவைக்கும் ஏற்ப அதிகாரிகளை ஒரு துறையினின்று மற்றொன்றுக்கு மாற்றுதல் எளிதாகும்.

8) தற்பொழுது பின்பற்றப்பட்டுவரும் அறிக்கைகட்குப் பதிலாக செயல்திறன் அறிக்கைகள் பயன்படுத்தப்பட வேண்டும். இங்ஙனம் செய்வதால் ஒவ்வொரு ஆண்டும் தாம் புரிந்த பணி குறித்துச் சிறிய அறிக்கையொன்றைத் தாக்கல் செய்வதற்கும், பதவி உயர்வுக்குத் தமது குண நலன்கள் மதிப்பீடு செயல்படுவதற்கும் ஒவ்வொரு அரசு அலுவலருக்கும் வாய்ப்பு கிட்டும்.

9) தமது திறன், செயல்திறன் போன்றவற்றின் அடிப்படையில் பதவி உயர்வு பெறுவதற்கான வாய்ப்புக்கள் அரசின் அடி மட்டத்தில் பணிபுரிபவரைப் பொறுத்த மட்டில் அதிகரிக்கப்பட வேண்டும்.

10) நிர்வாகத்தைச் சீரமைப்பதற்கென வேலைக்கு நியமனம் செய்யப் பின்பற்றும் கொள்கைகள், வழிமுறைகள் ஆகியவை சீர்திருத்தப்படடு, அதிகப்படியான பணியாளர்களின் எண்ணிக்கையைக் குறைத்து, திறமையற்ற அமைப்புக்களை அகற்றி, பணித்தரத்தை நிர்ணயித்து, விதிகளை எளிதாக்கித் தொகுத்து, விடுமுறைகளை சீராக நிர்ணயித்து, மிகை நேரத்தையும், மாற்றத்தையும் கட்டுப்படுத்தவேண்டும்.

## நிதி, கணக்குகள், தணிக்கை:

(11) வளர்ச்சிப் பணிகளில் நேரடி ஈடுபாடுள்ள துறைகளும், அமைப்புக்களும் பணித்திறன் சார்ந்த திட்டத்தை உருவாக்க வேண்டும். நிதி ஒதுக்கீடு, எய்த வேண்டிய

குறிக்கோள்கள், எய்தியவை போன்றவற்றைக் குறிப்பிட்டு பணிகள், திட்டங்கள், நடவடிக்கைகள் போன்றவற்றின் அடிப்படையில் மதிப்பீடுகளையும், செலவினங்களையும் சுட்டிக்காட்ட இத்திட்டம் பயன்படும்.

(12) நிர்வாகச் சீர்திருத்தத்தையும், திறனையும், நிதி சம்பந்தப்பட்ட விதிகள், வழிமுறைகள் போன்றவற்றின் செயல்திறனையும் குறிக்கோளாகக் கொண்டதாக தணிக்கை அமையவேண்டும்.

13) நிதி சம்பந்தப்பட்ட ஒவ்வொரு துறைகளிலிருந்தும் தற்பொழுது அளிக்கப்பட்டுவரும் ஆலோசனை முறை வலுப்படுத்தப்பட வேண்டும். அங்ஙனம் செய்தால்தான் ஒவ்வொரு அமைச்சகம், அல்லது துறையின் நிதித்திறன் மேம்பாடு அடையும்.

14) நடைமுறை அடிப்படையில் வருவாயை மதிப்பீடு செய்வதற்காகவும், பரவலாகச் செலவினங்கள் இருப்பதாகவும் நிதி ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதி ஆரம்பிக்க வேண்டும்.

நிதி நிர்வாகம்:

15) சீரான விலை நிர்ணயக் கொள்கைகளை உருவாக்குவதிலும், செலவின உணர்வுள்ள சூழ்நிலையை உருவாக்குவதிலும் அரசாங்கத்திற்கு உதவுவதற்காகவும், சுங்கவரிக் குழுவின் பணிகளைப் புரிவதற்காகவும், விலைகள், செலவு, சுங்கவரி போன்றவற்றிற்கான உயர் மட்டக் குழுவொன்று நியமிக்கப்பட வேண்டும்.

பொதுத்துறை நிறுவனங்கள்:

16) பொதுத்துறை நிறுவனங்களில் தற்காலிகப் பதவி வகிக்க அரசு அதிகாரிகளை நியமிக்கும் பழக்கம் கைவிடப்படவேண்டும்.

17) முக்கிய துறைகள் ஒவ்வொன்றிற்கும் ஒரு இணையம் உருவாக்கப்பட வேண்டும். ஒரு துறை சம்பந்தப்பட்ட வளர்ச்சிப் பணிகளிலும், புதிய நிறுவனங்களை உருவாக்குவதிலும் இவ்விணையங்கள் ஈடுபட வேண்டும். செயற்பாட்டைப் பொறுத்த மட்டில் இணையத்தின் ஒவ்வொரு பகுதியும் சுதந்திரம் கொண்டிருத்தல் வேண்டும். ஆய்வு, கலந்தாலோசனை பயிற்சி, விற்பனை வளர்ச்சி போன்றவற்றை ஒருமுகப்படுத்தும் பணியில் இணையம் ஈடுபட வேண்டும்.

18) பொதுத்துறை நிறுவனங்கள் சம்பந்தப்பட்ட துறை திறனுள்ள அமைப்பாக உருவாக்கப்பட வேண்டும். அங்ஙனம் செய்தால்தான் அது பொதுத்துறை நிறுவனங்கட்கும், அமைச்சகங்கட்கும் உதவி புரியும் அமைப்பாகச் செயல்பட முடியும்.

19) ஒவ்வொரு பொதுத்துறை நிறுவனப் பிரிவிற்கென நான்கு, அல்லது ஐந்து தணிக்கை வாரியங்கள் உருவாக்கப்பட வேண்டும். இங்ஙனம் செய்தால்தான் திறன் தணிக்கை, செயல் திறன் மதிப்பீடு ஆகியவை செய்ய இயலும்.

நிர்வாகச் சீர்திருத்தங்களின் செயலாக்கம்:

நிர்வாகச் சீர்திருத்தங்களின் தேவையை உணர்ந்து நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தை நியமித்தவர்கள் இந்திய அரசாங்கத்தின் தலைவர்களாவர். ஆகவே,

அவர்களுடைய கருத்துக்களைச் செயல்படுத்துவதுதான் நிர்வாகச் சீர்திருத்தங்களின் செயற்படுத்தல் என்பது ஆகும்.

## பணித்துறை எதிர்ப்பு சம்பந்தப்பட்ட பிரச்சினைகள்:

மனித வாழ்வின் எந்தத் துறையாயினும் அதில் சீர்திருத்தங்கள் செய்வதென்பது கடினம் என்பது மட்டுமல்ல. அவை செயல்படும் பொழுது எதிர்ப்புக்கள் எழுவது வழக்கம். சீர்திருத்தங்களைச் செயல்படுத்தும் பொழுது பல்வேறு இடுக்கண்கள் எழுவது வழக்கம். நிர்வாகத்தைப் பொறுத்த மட்டில் நிரந்தரத் தன்மையுடையது பணித்துறை. சட்டங்கள், விதிகள் போன்றவற்றிலினின்று சற்றும் விலகாமல் பணி புரிவதைத்தான் இந்நிரந்தரத் தன்மை குறிப்பிடுகின்றது. நடைமுறையினின்று மாறுபடாத தன்மையுடையதாதலால் இப்பணித்துறை சீர்திருத்தங்களை எதிர்க்கின்றதெனலாம்.

சீர்திருத்தங்கள் என்பவை அவ்வளவு எளிதாகச் செய்யக் கூடியவை அல்ல. சீர்திருத்தங்களை வலுக்கட்டாயமாகப் புகுத்துவதென்பது இயலாத காரியம். சீர்திருத்தங்களால் பாதிக்கபட்டவரும், அவற்றைச் செயல்படுத்தவேண்டியவரும் அவற்றிற்கு முழு ஒத்துழைப்பு கொடுக்கமாட்டார்கள். சீர்திருத்தங்களால் நாடு நலனடையும் என்ற உணர்வை உருவாக்கி தூண்டுதலின் மூலமாகத்தான் ஒத்துழைப்பைப் பெற முடியும்.

## நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரைகளும், சீர்திருத்தங்களைச் செயல்படுத்தலும்:

சீர்திருத்தங்களைச் செயற்படுத்தும் வழிமுறைகளைச் சீரமைத்தாலன்றி பரிந்துரைக்கப்பட்ட சீர்திருத்தங்கள் ஏற்கப்படுவதும், அவற்றைச் செயற்படுத்துவதும் எதிர்பார்த்த வெற்றியை அளிக்காது என்று இந்திய அரசாங்கத்தின் நிறுவனம் சம்பந்தப்பட்ட தனது அறிக்கையில் நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் பரிந்துரைத்தது. தனது அறிக்கையை அரசாங்கம் உடனடியாக ஏற்றுக்கொள்வதற்கெனவும், துரிதமாகச் செயல்படுத்துவதற்கெனவும் பின்வரும் விசேட வழிமுறைகளையும், பாதுகாப்புக்களையும் இவ்வாணையம் பரிந்துரை செய்துள்ளது.

முதலாவதாக, ஆழ்ந்த நிர்வாக அனுபவமுடையவரும், அரசியலரங்கில் நன்மதிப்பு உடையவருமான முதுநிலை அமைச்சரொருவரால் தான் நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரைகள் தாக்கல் செய்யப்பட வேண்டும்.

இரண்டாவதாக, நிர்வாகம் சம்பந்தப்பட்ட குழுவொன்று அமைச்சர் குழுவினின்று உருவாக்கப்பட வேண்டும். நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் பரிந்துரை செய்துள்ள சீர்திருத்தங்களைச் செயல் படுத்துதல் சம்பந்தப்பட்ட பணிகள் யாவற்றையும் இக்குழு கவனிக்க வேண்டும்.

மூன்றாவதாக, நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிந்துரைகளைப் பரிசீலனை செய்யும் பணியை அதற்கென உருவாக்கப்பட்ட அமைச்சர் குழு தலைமைச் செயலகத்திலன் விஷேடப் பிரிவு கவனிக்க வேண்டும். ஏற்கப்பட்ட பரிந்துரைகளைச் செயல்படுத்தும் பணியையும் இப்பிரிவு கண்காணிக்க வேண்டும்.

நான்காவதாக, குழுவிடமிருந்து அறிக்கையொன்று கிடைக்கப் பெற்று மூன்று மாதங்கட்குள் அரசாங்கம் அது சம்பந்தமாக எடுத்த முடிவைக் குறிப்பிட்ட அறிக்கையொன்றைத் தாக்கல் செய்ய வேண்டும்.

ஐந்தாவதாக, எல்லா கட்சிகளும் அடங்கிய இரு அவைகளின் பாராளுமன்றக் குழுவொன்று நியமிக்கப் பட வேண்டும். அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பரிந்துரைகள் துரிதமாகச் செயல் படுத்தப்படுகின்றனவா என்று கண்காணிப்பது இக்குழுவின் பணியாக இருக்கும். பொது அறிவு,ஆற்றல், நிர்வாக அனுபவம் போன்றவற்றின் அடிப்படையில் இக்குழுவின் உறுப்பினர்களாக இரு அவைகளின் தலைவர்களும் நியமனம் செய்யப்பட வேண்டும். பரிந்துரைகள் செயல்படுத்தப்படும் முறையை புனராய்வு செய்வதற்கென இக்குழு மூன்று மாதங்கட்கொருமுறையேனும் கூடவேண்டும்.

நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் அறிக்கைகள் அரசாங்கத்தின் தீவர கவனத்தில் உள்ளன. ஒரு சில பரிந்துரைகளைக் குறித்து ஏற்கெனவே முடிவெடுக்கப் பட்டுவிட்டன. எல்லா பரிந்துரைகளையும் முழுமையாகப் பரிசீலித்து அவை குறித்து முடிவுகள் எடுக்கப்பட்ட பின்னர், நிர்வாக அமைப்பில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. அங்ஙனம் செய்யும்பொழுது அரசாங்கத்தின் சமுதாய பொருளாதாரக் கொள்கைகளைச் செயற்படுத்துவதற்கு உகந்த அமைப்பாக நிர்வாகம் மாறும் என்பதில் ஐயமில்லை.

## கோத்தாரி குழு

1976 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கம் அகில இந்தியப் பணியாளர் தேர்வு முறையை ஆராய D.S. கோத்தாரி தலைமையில் ஒரு குழுவை ஏற்படுத்தியது. இது அகில இந்தியப் பணிகளின் தேர்வு முறையை நன்றாக ஆராய்ந்து, அரசின் அனைத்துப் பணிகளுக்கும் சம முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். எனவே தற்போது நடைபெற்றுவரும் மூன்று பணிகளுக்கும் தனித்தனியாக தேர்வு செய்யும் முறையை மாற்றி, பொதுத்தேர்வு முறையை மூன்று பணிகளுக்கும் பொதுவாகக் கொண்டுவர வேண்டுமெனப் பரிந்துரைத்தது. இந்திய வெளிநாட்டுப் பணி, இந்திய நிர்வாகப் பணி ஆகியவற்றிற்கு ஒரு தேர்வு முறையும், மத்திய பணிகளுக்கு ஒரு தேர்வு முறையும், இந்தியக் காவல் பணிக்கு மற்றொரு தேர்வு முறையாக மூன்று தேர்வு முறைகள் நடைபெற்று வருவதை, மாற்றி ஒரே பொதுத்தேர்வு நடத்த வேண்டும் என்பது கோத்தாரி குழுவின் முக்கிய பரிந்துரை. இரண்டாவதாக, 400 பணியிடங்களுக்கு 40,000 விண்ணப்பதாரர்கள், அது தற்போது 1 இலட்சத்தையும் தாண்டக்கூடிய அளவில் ஆண்டிற்கு ஆண்டு விண்ணப்பதாரர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வருவதால், இரண்டு தேர்வு முறைகளைப் பரிந்துரைத்தது. முதலாவதாக, ஆரம்பத் தேர்வு (Preliminary) இரண்டாவதாக முக்கியத் தேர்வு. ஆரம்பத் தேர்வென்பது வழிகாட்டும் தேர்வாக பொதுவான (Objective Test) தேர்வாக நடத்தி, பணியில் மிகவும் ஆர்வமுள்ள ஆழமான அறிவுடையவர்களை மட்டுமே தேர்வு செய்வது ஆரம்பத் தேர்வு. இதில் தேர்வு பெற்றவர்கள் முக்கிய தேர்விற்கு அனுமதிக்கப்படுவர்.

கோத்தாரி குழுவின் மற்றொரு முக்கிய பரிந்துரை, ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்திய அரசியலமைப்பில் அங்கீகரிக்கப்பட்ட அனைத்து இந்திய மொழிகளிலும் தேர்வு எழுதலாம் என்பதாகும். ஆங்கிலம் மற்றும் மொழித்தாள் தவிர, பிற தாள்களை இந்திய

மொழிகளில் எழுதலாம் என்பதாகும். இக்குழுவின் பரிந்துரைகள் அனைத்தும் அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நடைமுறைபடுத்தப்பட்டது.

பின்னர் 1989 ஆம் ஆண்ட இந்திய தேர்வு முறையினை ஆராய ஒரு குழு சதிஷ் சந்திரா என்பார் தலைமையில் ஏற்படுத்தப்பட்டது. இது கோத்தாரி குழுவின் பரிந்துரைகள் எவ்வாறு நடைமுறையில் பின்பற்றப்படுகின்றதென்பதைக் கண்டறியவே அமைக்கப் பட்டதாகும். மேலும் பணித்தேர்வு முறையை செம்மையாக்கும் பொருட்டே ஏற்படுத்தப் பட்டது. இது தேர்வு முறையை ஆராய்ந்த பின்னர், பொதுக்கட்டுரை என்ற தாள் 200 மதிப்பெண்கள் கொண்டதாகக் கொண்டுவர வேண்டுமென்றும், தேர்வுகளை ஆங்கிலத்திலோ அல்லது அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட இந்திய மொழிகளிலோ தேர்வு எழுதலாம் என பரிந்துரைத்தது. இதன் பரிந்துரைகளை அரசாங்கம் ஏற்றுக் கொண்டது.

## உலகமயமாதலும் நிர்வாகச் சீர்திருத்தமும்

நிர்வாகச் சீர்திருத்தத்தில் பொருளாதாரச் சீர்திருத்தமும் 1980 ஆம் ஆண்டிலிருந்து அதிகமானது. இந்தியாவில் பொருளாதார மேம்பாட்டிற்காக சென்குப்தா குழுவும், பொருளாதார நிர்வாகச் சீர்திருத்த ஆணையம் எல்.கே.ஜா. தலைமையிலும் நியமிக்கப்பட்டன. உற்பத்திக்கு இடையூறுக் காரணிகள், தொழில்களில் சுதந்திரம், இறக்குமதிக் கட்டுப்பாடுகள் போன்றவை கண்டறியப்பட்டு, அவற்றின் குறைகள் நீக்கப்பட்டன. வெளிநாட்டுக் கம்பெனிகள் வரவழைக்கப்பட்டு, அவற்றை ஊக்குவித்தது இந்திய அரசாங்கம். 1991 ஆம் ஆண்டு புதிய பொருளாதாரக் கொள்கை வெளியிடப்பட்டது. நேரு காலத்து சோசலிச திட்டமிடல் வளர்ச்சியிலிருந்து இது வேறுபட்டதாயிற்று.

தனியார் மயமாக்கல் என்ற கோட்பாடு வலுவாயிற்று. இதனால் அரசாங்கத்தின் சுமை குறையுமென்று எதிர்பார்த்தனர். ஆனாலும் அரசாங்கம் வித்தியாசமான பணிகளைச் செய்ய வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டது. பொதுத்துறை நிறுவனங்களைத் தானே நடத்திய நிலை மாறி, தனியார் மயமாக்கிய பின்னர் அவற்றை ஒழுங்குபடுத்தக்கூடிய பணிகளைச் செய்ய வேண்டும். தவிர, சட்டம், ஒழுங்கு ஆகியவற்றைக் காக்கும் பணியைத் தனியாரிடம் தரமுடியாது. மேலும் தனியார் தொழில்களுக்கு வசதி செய்து கொடுப்பதுவும், ஊக்குவிப்பதுவும் அரசாங்கத்தின் பணிகளாக மாறின.

உலக வங்கியும், பன்னாட்டு நிதி நிறுவனங்களும் தொழில்களில் தாராளமயமாக்கல் கொள்கையை அதிகரிப்பதுடன், உரிய உதவிகளையும் செய்யத் தயாராயின. இந்தியாவின் பொருளாதார மேம்பாட்டை வளர்க்க, பணவீக்கம் (inflation) மற்றும் சுமூகச் சந்தைப் பொருளாதாரம் மற்றும் சிக்கன நடவடிக்கைகளில் இறங்கத் தீர்மானித்துள்ளதென்பது 1991 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 27ல் தெரிவித்தது. பன்னாட்டு நிறுவனங்களில் கடன்பெற வசதியாக சில பொருளாதார நடவடிக்கைகளிலும் இறங்கியது. இந்தியாவில் இரண்டு முறை ரூபாயின் மதிப்பு குறைக்கப்பட்டது. தவிர, சுமுக சந்தைப் பொருளாதாரம் என்ற கொள்கை கலப்புப் பொருளாதாரக் கொள்கைக்குப் பதிலாக மாறியது.

புதிய பொருளாதாரக் கொள்கையினால் சில பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகள் தனியார்களுக்கு விற்கப்பட்டது. இருப்பினும் பொது நிர்வாகம் தனது சமூகச் செயல்பாட்டிலிருந்து விலக முடியாது. வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ள மக்கள், கல்வியறியாமையினர் ஆகியோர்களின் வாழ்வைக் கவனிக்க வேண்டியது அரசாங்கத்தின்

கடமையாகும். சுகாதாரம், கல்வி, சமூக நல்வாழ்வு ஆகியவற்றில் அரசாங்கம் அதிகக் கவனம் செலுத்த வேண்டியுள்ளது. எனவே நிர்வாக புதுச்சீர்திருத்தம் நிர்வாகத் திறமைக்காகவும், குடிமக்களின் நல்லெண்ண மேம்பாட்டிற்கும் அவசியமாயிற்று. புதிய பொருளாதாரக் கொள்கையின் மூலம் தனியார் நாட்டின் ஆதார வளர்ச்சிக்கும் அடிக்கட்டிற்கும் உதவுவரென்றும், உடனடியாக இலாபம் சம்பாதிக்கும் நுகர்வோர் சந்தையில் (Consumer market) இறங்கமாட்டார்கள் என அரசாங்கம் நினைத்தது.

அரசாங்கம் நிர்வாகத்திற்கு அதிகமான செலவை, பணியாளர்களின் ஊதியமாகக் கொடுப்பதைக் குறைக்க பல முயற்சிகளை மேற்கொண்டது. அரசாங்கப் பணியாளர்களின் எண்ணிக்கையை 30 சதவிகிதம் குறைக்க முயற்சித்தது. ஏனெனில் 12 இலட்ச அரசுப் பணியாளர்களாக 1947ல் இருந்தது இன்று 38.76 இலட்சமாக அதிகரித்தது ஒரு முக்கிய பிரச்சனை. இவற்றில் காலியாக உள்ள 3.5 இலட்சம் பணியிடங்களை நீக்க வேண்டுமென ஐந்தாவது ஊதிய ஆணையம் பரிந்துரை செய்தது. தவிர, இளநிலை பணியிடங்கள் நிரப்ப வேண்டாமென்றும், உயர்மட்டத்தில் குறைந்த அளவே பணியாளர்கள் நியமிக்கப்பட வேண்டுமென்பதும் சில பரிந்துரைகள். இவை விரும்பத்தக்க பரிந்துரைகளா? நியாயமானதா என்பது சர்ச்சை.

1990 ஆம் ஆண்டிலிருந்து நிர்வாகச் சீர்திருத்தம் நான்கு முக்கிய பிரிவுகளில் இடம் பெற்றுள்ளது. முதலாவதாக, பொது நிர்வாகம் மக்களுக்குப் பொறுப்புடையதாக, மக்களின் நண்பனாக இருக்க வேண்டும். இரண்டாவதாக, நிர்வாகம் ஒளிவுமறைவற்றதாக வெளிப்படையாக இருக்க வேண்டும். மக்களுக்கு நிர்வாகத்தை தெரிந்து கொள்ளும் உரிமையும் (Right to Information) இருக்க வேண்டும். மூன்றாவதாக, நிர்வாகத்தில் இலஞ்சம், ஊழல் ஆகியன மறைந்து நிர்வாக நேர்மை உருவாக வேண்டும். நான்காவதாக, நிர்வாகத்திறன் கொண்டதாக, மக்களுக்கு சேவைப்பண்பாக (result-oriented) இருக்க வேண்டும் என்பன இந்த நான்கு பிரிவுகளாகும். மக்களுக்கு நிர்வாகம் பொறுப்புடையதாக்கும் முயற்சியில் 1) பதிலிறு நிர்வாகம் 2) இலஞ்சத்தைக்களையும் நிறுவனம் 3) குடிமக்கள் சாசனம் ஆகிய மூன்று பிரிவுகள் ஏற்பட்டுள்ளன. அவற்றைப் பார்ப்போம்.

பதிலிறு நிர்வாகம் என்ற கோட்பாடு 1997 ஆம் ஆண்டு தென் ஆப்பிரிக்கா நிர்வாக மாநாட்டில் (Batho Pele) பாத்தோ பிலோக் கோட்பாடுகள் உருவாக்கப்பட்டது. இதன்படி அரசாங்கங்கள் மக்களது தேவைகள் எவ்வாறு தீர்க்கப்பட்டுள்ளன என்பதை மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்பதுதான் ஆகும. 1997 ஆம் ஆண்டு மாநில முதல்வர்கள் மாநாட்டில் இது தீவிரமாக பரிசீலிக்கப்பட்டு, செயல்பாட்டுத் திட்டம் (Action Plan) ஒன்றைத் தயாரித்தது. இது கீழ்க்கண்ட செயல்களில் செயல்படுத்தப்பட வேண்டும். அச்செயல்கள்

1. பொறுப்பான, குடிமக்களின் அன்பார்ந்த அரசாங்கம்
2. ஒளிவுமறைவற்ற, குடிமக்கள் செய்தி அறியும் உரிமை
3. நிர்வாகத்திறன் அதிகரிக்கவும், நிர்வாக நேர்மை அரசுப் பணிகளில் உருவாக வேண்டும்.

குடிமக்கள் சாசனம் :

இதனை நிர்வாகத்தில் பங்கேற்கும் முறைகளில் ஒருமுறையாகக் கருதலாம். இது இங்கிலாந்தில் ஜான் மேஜர் காலத்தில் 1991 ஆம் ஆணடு கொண்டுவரப்பட்டது. இதில் நான்கு முக்கிய பண்புகள் நிறைந்துள்ளது. தரம், தேர்வு, தராதரம் மற்றும் மதிப்பு ஆகியனவாகும். இது அரசாங்கத்தில் பயன்பெறுவோர்களின் ஆதிக்கத்தைக் கொண்டு வருவதாகவோ அல்லது அரசுப் பணியாளர்களின் ஆதிக்கத்தைக் குறைப்பதாகவோ அமையக் கூடியதாகும். மொத்தத்தில், அரசுப் பணியாளர்கள் குடிமக்களுக்கு இவ்வளவு அதிகமான பணிகளை வழங்குகிறோம் என்று பெருமைப்படவும், குடிமக்கள் பலதரப்பினரும் நோயாளி, பெற்றோர்கள், ஆசிரியர்கள், பயணி ஆகியோர் அரசாங்கப் பணிகளில் நம்பிக்கையும் கொள்வதற்காகவே உருவாக்கப்பட்டது ஆகும். இதனை த.ஆ. ஜெயின் வாடிக்கையாளர்களுக்கு திறமையாக, முறையாகப் பணிபுரிவதையே மையமாகக் கொண்டது குடிமக்கள் சாசனம் என்கிறார். தமிழ்நாடு அரசாங்கம் வளர்ச்சிப் பணிகள் குறித்து தனியான குடிமக்கள் சாசனம் ஒன்று வழங்கியுள்ளதென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1991 ஆம் ஆண்டு இங்கிலாந்து அரசாங்கம் வெளியிட்ட வெள்ளை அறிக்கையில் ஆறு கோட்பாடுகளைக் கூறியுள்ளது. அவை,

1. தராதரம் (standard)
2. ஒளிவுமறைவின்மை
3. செய்தி
4. தேர்வு
5. பாகுபாடின்மை
6. எளிதாக அடைதல் (Accessibility)

ஆகியனவயாகும்.

பின்னர் 1996 ஆம் ஆண்டு வெளியிட்ட வெள்ளையறிக்கை ஐந்தாண்டுகள் குடிமக்கள் சாசனத் திறனாய்வு பற்றி வெளியிட்டது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் பொதுப்பயன்பாட்டு ஒழுங்குமுறை ஆணையங்களும், ஒழுங்குமுறை வாரியங்களும் மக்களுக்குத் திறமையான பணிகளைச் செய்து வருகின்றன. இந்தியாவைப் பொறுத்தவரை நிர்வாகச் சீர்திருத்த, மக்கள் குறைதீர்வுத் துறை இம்முயற்சியை மேற்கொண்டது. இதற்காக 1996 ஆம் ஆண்டு மாநிலத் தலைமைச் செயலர்களின் மாநாட்டைக் கூட்டி விவாதித்தது. இதில் அரசுப் பணிகளின் ஊழல், நேர்மையின்மை மற்றும் அரசுப் பணியாளர்கள், அரசியல்வாதிகள், குற்றவாளிகள் (criminals) ஆகியோர்களின் கூட்டால் ஏற்பட்ட நிர்வாகச் சீரழிவு ஆகியவற்றைப் பற்றிக் கடுமையாக விவாதித்தது. பின்னர் 1997 ஆம் ஆண்டு முதலமைச்சர்கள் மாநாடு, பதிலிறு நிர்வாகம் ஏற்படுத்த குடிமக்கள் சாசனச் செயல்திட்டத்தை உருவாக்கியது. இரயில்வே, தொலைபேசி, அஞ்சல் ஆகிய துறைகளில் உடனடியாக இது செயல்படுத்தப்பட வேண்டுமென வலியுறுத்தப்பட்டது. 2001 ஆம் ஆண்டில் மத்திய அரசாங்கத் துறைகளில் 65 குடிமக்கள் சாசனங்களும், வங்கிகளில் 27 ஆம், மருத்துவமனைகளில் 4 ஆக குடிமக்கள் சாசனம் உருவாக்கப்பட்டுள்ளது. பல மாநிலங்களும் உருவாக்கியுள்ளன. நிர்வாகம் பொறுப்பாக

மக்களுக்குப் பணியாற்ற குடிமக்கள் சாசனம் தேவை என்பதை உணர்ந்ததாலும், சமூக, பொருளாதாரக் காரணிகளும், அரசியல் நிலைத்தன்மை ஆகியவற்றைப் பொறுத்தே பதிலிறு நிர்வாகம் அமையும்.

மாதிரி வினா:

1. ஏ.டி.கோர்வாலா, மற்றும் பால எச்.அப்பிள்பி ஆகியோரின் பொதுத்துறை நிர்வாகத்தின் மீதான முக்கிய பரிந்துரைகளைக் கொண்டு வந்து அந்த பரிந்துரைகள் எக்காரணங்களுக்காக செயல்படுத்தப்படவில்லை என்பதை விளக்கி எழுதுக.

2. நிர்வாகச் சீர்திருத்த ஆணையத்தின் பரிசீலனைக்கு விடப்பட்ட விஷயங்களைப் பற்றியும், அவ்வாணையத்தின் முக்கிய பரிந்துரைகளையும் நிர்வாகச் சீரமைப்புக்கென எடுக்கப்பட்ட நடவடிக்கைகளையும் தொகுத்தெழுதுக.

மாதிரி வினாத்தாள் :

காலம் : 3 மணி | மதிப்பெண்கள்: 100

ஏதேனும் ஐந்து வினாக்களுக்கு விடையளிக்கவும் :

1. இந்திய நிர்வாக வளர்ச்சியை வரையறு.
2. இந்தியக் குடியரசுத் தலைவரின் அதிகாரங்களை விளக்கு.
3. மத்திய–மாநில உறவுகளை விவரி.
4. உள்துறை அமைச்சகத்தின் பணிகள் யாவை?
5. மத்திய அரசுப்பணி ஆணையத்தின் அமைப்பு செயல்பாட்டை எடுத்துரை.
6. திட்ட ஆணையத்தின் பணிகள் பற்றி ஒரு கட்டுரை எழுது.
7. பொதுத்துறை நிறுவனங்களை மேம்படுத்த நிவீர் கூறும் கருத்துக்கள் யாவை?
8. மாநில ஆளுநரின் நிலை, அதிகாரங்களை விவரி.
9. ஊராட்சி நிர்வாகத்தில் மாவட்ட ஆட்சியாளரின் பங்கை விளக்கு.
10. இந்தியாவில் நிர்வாகச் சீர்திருத்தங்கள் பற்றி ஒரு கட்டுரை எழுது.

